ஸ்ரீ:
ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

நம்மாழ்வாரருளிச் செய்த

# திருவாய்மொழி - நான்காம்பத்து.



ஸ்ரீகாஞ்சீ ப்ரதிவாதி பயங்கரம்

அண்ணங்கராசாரியர் இயற்றிய

திவ்யார்த்ததீபிகை யுரையுடன் கூடியது.

(இரண்டாம் பதிப்பு.)

ஸ்ரீ ஸ்வாமியின்

## ஷஷ்டி பூர்த்தி நினைவு மாலையின்

ஒன்பதாவது மலராக வெளியிடப்பட்டது.

ஸ்ரீகாஞ்சீ ஸ்ரீ வெங்கடேச்வர அச்சுக்கூடம்

கிடைக்குமிடம்:—

க்ரந்தமாலா ஆபீஸ், காஞ்சீபுரம்.

விலை 2—6—0

1951.

ஸ்ரீ:

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

# நம்மாழ்வார் திருவாய்மலர்ந்தருளிய திருவாய்மொழி—நான்காம்பத்து

## முதல் திருவாய்மொழி—ஒருநாயகம்.

**உரையவதாரிகை:**—*கீழ் மூன்றாம்பத்தின் முடிந்த திருவாய்மொழி ஆழ்வார்க்கு அளவுகடந்த ஆனந்தமயமாய்ச் சென்றது. தமக்கு யாதொரு குறையுமில்லையென்பதைப் பன்னிப் பன்னிப் பகர்ந்தருளினர். மற்றுமுள்ள ஸம்ஸாரிகளையும் தம்மைப் போலவே குறையற்றவர்களாக ஆக்குவதில் மிக்க குதூஹலமுடையரான ஆழ்வார் அவர்களையும் திருத்திப் பணிகொள்ள விரும்பி உபதேசம் செய்யப் புகுகிறார் இத்திருவாய்மொழியில்.*

*ஒவ்வொரு பத்திலும் பரோபதேச ரூபமாக ஒவ்வொரு திருவாய்மொழி அவதரிக்கும். முதற்பத்திலே* * **வீடுமின் முற்றவும்** * *என்கிற திருவாய்மொழியும், இரண்டாம் பத்தில்* * **அணைவதரவணைமேல்** * *என்கிற திருவாய்மொழியும், மூன்றாம் பத்தில்* * **சொன்னால் விரோதமிது** * *என்கிற திருவாய்மொழியும் போலே இந்த நான்காம்பத்தில் இத்திருவாய்மொழி உபதேச பரமாய்ச் செல்லாநின்றது.*

* *சொன்னால் விரோதத்தில் அற்பர்களான மனிசர்களைத் துதிப்பது பெருங்கேடு என்று உபதேசித்தார். உலகில் பலர் நரஸ்துதி செய்யப்புகுவது சில பிரயோஜனங்களுக்காகவாதலால் அந்த ப்ரயோஜனங்கள் அற்பமாயும் அஸ்திரமாயுமிருக்கும்படியை நன்கு எடுத்துக்காட்டவே அவிவேகிகளும் உணர்ந்து திருந்தக்கூடும் என்று பார்த்து, பகவத்ப்ராப்தி தவிர மற்ற ப்ரயோஜனங்கள் யாவும் அல்பத்வம் அஸ்திரத்வம் முதலிய தோஷங்களினால் துஷ்டங்களாயிருக்குமாற்றை விரித்துரைக்கின்றார் இத்திருவாய்மொழியில்.*

*பகவத்கீதையில் ஏழாவது அத்யாயத்தில்* (16) * *சதுர்விதா பஜந்தே மாம் ஜநாஸ் ஸுக்ருதிநோர் ஜுந!, ஆர்த்தோ ஜிஜ்ஞாஸுரர்த்தார்த்தீ ஜ்ஞாநீ ச பரதர்ஷப* * *என்று நான்கு வகைப்பட்ட அதிகாரிகள் தன்னை வந்து பற்றுவதாகக் கண்ணபிரான் கூறினன். அவர்கள் யாவரென்னில்;* 1. [**ஆர்த்த:**] *இழந்துபோன செல்வத்தை மீண்டும் அடைய விரும்புமவன்.* 2. [**அர்த்தார்த்தீ.**] *முதலிலேயே செல்வமில்லாமையால் புதிதாக அதனையடைய விரும்புமவன்.* 3. [**ஜிஜ்ஞாஸு:**] *பிரகிருதிக்குப் புறம்பான ஆத்மாவை அநுபவிப்பதாகிற கைவல்ய மோக்ஷத்தை விரும்புமவன்.* 4. [**ஜ்ஞாநீ.**] *'ஆத்மஸ்வரூபம் எம்பெருமானுக்கே சேஷப் பட்டிருக்குந் தன்மையது' என்கிற அறிவையுடையனாய் ஆத்மாநுபவமாத்திரத்திலே நிற்கமாட்டாமல் எம்பெருமானைப்பெற விரும்பி அவனையே பெரும் போக நினைத்திருப்பவன்.*

உலகங்களெல்லாவற்றிற்கும் ஒருவனே அரசனாயிருக்கும்படி ஸார்வபௌமன் என்று பெயர் பெறும் மஹாப்ரபு ஒருவன்கூட இருக்கமுடியாது; வைராக்ய பஞ்சகத்தில் அருளிச் செய்தபடியே பூமியில் ஒவ்வொரு மூலைக்கு ஒவ்வொருவன் அரசனாக அமையக் கூடும்: ஆனாலும் "திகரில் புகழாய் உலகம் மூன்றுடையாய்" என்று போற்றப்படுகின்ற வர்பெருமானாகவே தம்மைப் பாவித்திருக்கும் அவர்களுடைய அபிமானத்தையடியொற்றி "ஒரு நாயகமாய் ஓடவுலகுடனாண்டவர்" என்கிறார். உண்மையாகவே அப்படிச் சில அரசர்கள் இருந்தார்களென்றுங் கொள்ளலாம். ஓட என்றது—காலம் நெடுகியோட என்றபடியாய் 'நெடுங்காலம் வரையில்' என்று பொருள்படும். இப்படி நெடுங்காலம் உலகை ஆண்டவர்களுக்கும் இழவு ஸம்பவிக்கும்படியை மேலிரண்டடிகளால் விசித்திரமாக அருளிச் செய்கிறார் **கருநாய்கவர்ந்தகாலர்** என்று தொடங்கி.

நன்றாக வாழ்ந்தவர்களுக்கும் ஒரு காலத்திலே ஏழைமை வந்து சேருமே; * ஒரு நாளுணவையொழியென்றாலொழியாத வயிற்றின் பசி ஆற்றவொண்ணாதே; 'நேற்று வரையில் மதிப்போடே ஜீவித்துக்கிடந்த நாம் பிச்சையெடுத்துப் பிழைப்பது முன்போ? பட்டினிகிடப்போம்' என்று கிடக்கமுடியாதே; வயிறு வளர்க்கையிலுண்டான நசையாலே பிச்சையெடுக்கவே புறப்பட வேண்டிற்றாகும்: முன்பு குறைவின்றியே ஜீவித்துப் போந்தவர்களாகையாலே பலருங்காண வெளியில் புறப்படமாட்டாமல் இருட்டு வேளைகளிலே புறப்படுவர்கள்: இருளோடேயிருளாய்க் கறுத்த நாய்கள் தெருவிலேவிழுந்து கிடக்கும்: பிச்சைக்கு இருளிலே செல்லுமிந்த மஹாப்ரபுக்கள் அவைகிடப்பதறியாதே அவற்றின் வாயிலே காலை வைத்திடுவர்கள். அதனால் அவை வருந்திக் கடித்திடும்; உடனே அந்தப் பாதை பொறுக்கமாட்டாமல், கையிலிருந்த பிச்சைப் பானையைக் கீழே செகிழவிடுவர்கள்; நாய் கடித்த வலியைப் பொறுக்ககில்லாதே கதறவேண்டியிருந்தும், 'கதறினால் நம்மைப் பலரும் கண்டுபிடித்து ஏசுவர்களே' என்கிற கூச்சத்தினால் வாய் திறவாதிருந்தாலும் பிச்சைப்பானை கீழே விழுந்து உடைந்த வோசை கேட்டும் நாய் கத்தின வோசை கேட்டும் ஓடிவந்து காணத்திரண்டதிரள் எண்ணிறந்ததாகும்; இங்ஙனம் பலரும் திரண்டு கண்டு ஏசும்படியாக இப்பிறப்பிலேயே பிச்சைபுகும்படியான நிலைமை நேர்ந்து விடுகின்ற தென்பதை மூன்றடிகளாலே கூறி, இதனால் ஐச்வர்யம் அஸ்திரம் என்பதைக் காட்டி, ஈற்றடியினால் நித்யபுருஷார்த்தமான பகவத்ப்ராப்தியிலேயே ஊன்றிப் போரும்படி உபதேசித்தாராயிற்று.

**கருநாய்** என்பதற்கு—கருக்கொண்டிருந்த நாய் என்றும் பொருள் கூறுவர்; குட்டியிட்டநாய் என்றபடி. என்றும் குட்டியைக் காத்துக்கிடக்கிறதாகையாலே 'அதுக்கு ஏதேனும் தீங்கு வருகிறதோ' என்று கண்டாரை யோடிக் கடிக்குமாம். 'வீரக்கழலிட்டகால்' என்று முன்பு விருதாகிக்கிடந்தது; இப்போது 'நாய் கடித்தகால்' என்னும்படியாயிற்று.

**சிதைக்கியபானையர்**— ஒருவர்க்கும் உபயோகப்படமாட்டாத பாத்திரத்தையுடையவர் என்றுமாம். முன்பு பொற்கலத்திலே ஜீவித்தவனுக்கு இப்போது ஒரு புத்தோடு கிடையாதபடியாயிற்று. யாரேனும் ஒரு பிடிசோறு இட்டாலும் தங்காதே ஒரு மூலையாலே கீழே நழுவிப்போம்படி சிதிலமான பாத்திரமேயாயிற்று கிடைப்பது.

**பெருநாடுகாண**—முன்பு செங்கோல் செலுத்தாநிற்குமளவில் உபஹாரங் கொண்டு காணவருபவர்கள் ஓராண்டு ஆனாலும் உள்ளே புகவும் பெறாதபடி கிடந்து படுவர்கள்; அவர்கள் இப்போது எளிதாகக் காணலாயிற்று. "முன்பு வெண்கொற்றக் குடையின் கீழிலே வாழ்ந்தவனுக்கா இந்தகதி வந்துவிட்டது!" என்று சொல்லிக்கொண்டே காண்பதற்கு வந்து கூடுங்கூட்டம் மிகப் பெரிதாயிருக்குமென்று காட்டப்படுகிறது **பெருநாடுகாண** என்பதனால்.

'மஹாராஜராயிருந்தது ஒரு பிறவியிலே, பிச்சைபுக்குத் திரிபவனாக ஆனது மற்றொரு பிறவியிலே' என்று நினையாமைக்காக **இம்மையிலே** என்றார். **பிச்சை**—பண்டு பலபல ராஜாக்களுக்கு க்ராமபூமிகள் வழங்கின கையாலே ஒரு கவளம் யாசிக்கலாகிறது!. **தாம் கொள்வர்**—முன்பு ராஜாக்கள் பலர் கொண்டுவரும் உபஹாரங்களைத் தங்கள் கையாலே நேராக வாங்காமல் ஆளிடுவர்கள்; அன்னவர்கள் இப்போது மேல்விழுந்து பிச்சை பிடுங்குகிறபடி. ஆதலால் * இடர்கெடுத்த திருவாளனிணையடியே யடைவது நலம்.

எம்பெருமானார் **திருநாரணன்தாள் காலம்பெறச் சிந்தித்துய்ம்மினோ** என்கிற விதிலே நோக்காக இத்திருவாய்மொழியைத் திருநாராயணபுரத்துத் திருநாராயணப் பெருமாளுக்கு ஸமர்ப்பித்ததாக ஸம்ப்ரதாயம்வல்ல பெரியோர் பகர்வர். .... .... (1)

உய்ம்மின்திறைகொணர்ந்து என்றுலகாண்டவர் * இம்மையே
தம்மின்சுவைமடவாரைப் பிறர்கொள்ளத்தாம்விட்டு *
வெம்மினொளிவெயில் கானகம்போய்க்குமைதின்பர்கள் *
செம்மின்முடித்திருமாலை விரைந்தடிசேர்மினோ. 2

| | | | |
|---|---|---|---|
| திறை கொணர்ந்து | செலுத்தவேண்டிய கப்பத்தைக் கொண்டுவந்து கட்டி | பிறர் கொள்ள | அயலார் கவர்ந்துகொள்ளும்படி |
| உய்ம்மின் என்று | பிழைத்துப்போங்கள் என்று கட்டளையிட்டுக்கொண்டு | விட்டு | கையிழந்து |
| உலகு | இவ்வுலகத்தை | வெம் மின் ஒளி வெயில் | கொடிதாய் மின்னொளி பரக்கின்ற வெயிலையுடைய |
| ஆண்டவர் தாம் | அரசுபுரிந்த பிரபுக்கள் தாம் | கானகம் போய் | காட்டிலே சென்று |
| இம்மையே | இப்பிறப்பிலேயே | குமை தின்பர்கள் | திண்டாடுவர்கள்; (ஆதலால்) |
| தம் | தங்களுடைய | செம் மின் முடி | செவ்விய காந்திபெற்ற திருமுடியையுடைய |
| இன் சுவை மடவாரை | பரமபோக்யைகளான ஸ்திரீகளை | திரு மாலை | திருமகள் கொழுநனை |
| | | விரைந்து | விரைவாக |
| | | அடி சேர்மின் | அடி பணியுங்கோள். |

* * * மஹாராஜ்யபுக்களாயிருந்து நெடுங்காலம் தாங்கள் ஆண்ட ராஜ்யங்களை யிழப்பார் என்றது கீழ்ப்பாட்டில்; அரசாளுகிறநாளில் போக்யைகளாகக் கைக்கொண்ட மடவார்களையும் பகைவர்க்குப் பறிகொடுத்துப் பரிதாபப்படுவர்களென்கிறது இதில்.

**உய்ம்மின் திறைகொணர்ந்து என்று உலகாண்டவர்**— எதிரிகளின் ராஜ்யங்களைத் தாங்கள் ஆக்கிரமிக்க நினைத்தால் யானை குதிரைபடை திரட்டிக் கொண்டு சென்று

பாருது பரிச்ரமப்பட்டு ஆக்ரமித்துக்கொள்ளுகையன்றிக்கே ஒரு கட்டளை மாத்திரத்தா லேயே க்ருதக்ருத்யர்களாக ஆய்விடுவர்களாம்; அதாவது—'உயிர் தப்பிப்பிழைக்கவேண்டி ருந்தீர்களாகில் கப்பக்கலில் கப்பஞ் செலுத்தி வாழ்ந்துபோங்கள்' என்று ஒரு கட்டளை ரிவித்தமாத்திரத்திலேயே பகைவர்கள் பணிந்து நிற்பர்களாயிற்று: இவ்வளவு பெரு டுக்காக உலகத்தை ஆண்ட ஸார்வபௌமர்கள் என்றபடி. **நிறை** என்று கப்பத்திற்குப்

இங்ஙனே வாழ்ந்த மஹாப்ரபுக்கள் ஸமயவிசேஷங்களிலேபடும் எளிவரவை ரல் இரண்டடிகளால் அருளிச்செய்கிறார். தாம் அரசாட்சிபுரிகிற நாளில் பல திசை ளிலிருந்தும் சிறந்தமாதர்களைத் திரட்டிக்கொணர்ந்து சேமித்து வைப்பதுண்டே; அவர் ளையெல்லாம் பகைவர் வந்துபுகுந்து கைக்கொள்ளும் படியாகும். இங்கே ஈட்டு ஸ்ரீஸூக்திகாண்மின்;—'இது நரகபுரமழிந்த வன்று கண்டதிறே; பாண்டவர்களுடைய ஜனவயமும் செருக்கு மெல்லாங்கிடக்க த்ரௌபதி ஸதஸ்ஸிலே பரிபூதையானவதுவே றே இதில்ப்ரமாணம்'' என்பதாம். "மன்னு நரகன்றன்னைச் சூழ்போகி வளைத்தெறிந்து, கன்னியர்களிர்தம்மைக் கவர்ந்த கடல்வண்ணன்'' என்ற பாசுரத்தினால் நரகாஸுரனுடைய பூலை அறியத்தக்கது. பாண்டவர்களின் பரிபவம் ஜகத்ப்ரஸித்தம்.

"கண்டார்வணங்கக் களியானைமீதே கடல்சூழுலகுக்கொரு காவலராய், விண் டாய் நெடுவெண்குடை நீழலின்கீழ் விரிநீருலகாண்டு விரும்புவரே'' என்றபடியே வண்கொற்றக்குடை நிழலிலே இனிதாக வாழ்ந்தவர்கள் அந்த நிலைமையை யிழந்து காத்தில் வாழப்பெறாதே மநுஷ்ய ஸஞ்சாரமற்ற மருகாந்தாரங்களிலே சென்று தடுமாறு ர்களென்கிறது மூன்றாமடி. "பொருந்தார் கைவேல் நுதிபோல் பரல்பாய மெல்லடிகள் குருதிசோர, விரும்பாத கான் விரும்பி வெயிலுறைப்ப வெம்பசிநோய்கூர'' என்ற பெரு மாள் திருமொழியினாலும் "மின்னுருவில் வெண்டேர் திரிந்து வெளிப்பட்டுக் கல்நிரைந்து ந்து கழையுடைந்து கால்சுழன்று, பின்னுந் திரைவயிற்றுப் பேயே திரிந்துலவாக் கொன் னவிலும் வெங்கானம்'' என்ற பெரிய திருமடலினாலும் காட்டின் கொடுமை அறியத் தக்கது.

**கானகம்போய்க் குமைதின்பர்கள்**—காடேற வோடினாலும் அங்குந் தொடர்ந்து வலியப் பகைவருடைய ஆட்கள் வந்தே திருவர்களாதலால் காட்டிலும் கொலை தப்பாது என்கிறார்.

**குமைதின்பர்கள்**—ஹிம்ஸைப்படுவர்களென்றபடி. ஆக மூன்றடிகளாலும் செல்வக்கிடப்பின் சீர்கேட்டை நிரூபித்து ஈற்றடியால் வாழ்ச்சிக்குறுப்பான உபாயத்தை உரைத்தருளுகிறார்; "முடிச்சோதியாய் உனது முகச்சோதி மலர்ந்ததுவோ'' என்று பேசலாம்படியாய் * கதிராயிரமிரவி கலந்தெரித்தாலொத்த நீண்முடியனை எம்பெருமா னைக் காலதாமதமின்றி அடிபணியப் பாருங்களென்கிறார்.

இங்கே இன்சுவையே வடிவெடுத்த ஈட்டு ஸ்ரீஸூக்திகள் காண்மின்;—"தன்னை ஆச்ரயித்தார்க்குக் கொடுக்கைக்குத் தலையான முடியுண்டு; 'கொடுப்பிக்கைக்கு அருகே

**பெருநாடுகாண**—முன்பு செங்கோல் செலுத்தாநிற்குமளவில் உபஹாரங் கொண்டு காணவருபவர்கள் ஓராண்டு ஆறுமாதமும் உள்ளே புகவும் பெறாதபடி கிடந்து படுவர்கள்; அவர்கள் இப்போது எளிதாகக் காணலாயிற்று. "முன்பு வெண்கொற்றக் குடைநிழலிலே வாழ்ந்தவனுக்கா இங்கதி வந்திட்டது!" என்று சொல்லிக்கொண்டே காண்பதற்கு வந்து கூடுங்கூட்டம் மிகப் பெரிதாயிருக்குமென்று காட்டப்படுகிறது **பெருநாடுகாண** என்பதனால்.

'மஹாப்ரபுவாயிருந்தது ஒரு பிறவியிலே, பிச்சைபுக்குத் திரிபவனாக ஆனது மற்றொரு பிறவியிலே' என்று நினையாமைக்காக **இம்மையிலே** என்றார். **பிச்சை**—பண்டு பலபல ராஜாக்களுக்கு க்ராமபூமிகள் வழங்கின கையாலே ஒரு கவளம் யாசிக்கலாகிறது!. **தாம் கொள்வர்**—முன்பு ராஜாக்கள் பலர் கொண்டுவரும் உபஹாரங்களைத் தங்கள் கையாலே நேராக வாங்காமல் ஆளிடுவர்கள்; அன்னவர்கள் இப்போது மேல்விழுந்து பிச்சை பிடுங்குகிறபடி. ஆதலால் * இடர்கெடுத்த திருவாளனிணையடியே யடைவது நலம்.

எம்பெருமானார் **திருநாரணன்தாள் காலம்பெறச் சிந்தித்துய்ம்மினோ** என்கிற விதிலே நோக்காக இத்திருவாய்மொழியைத் திருநாராயணபுரத்துத் திருநாராயணப் பெருமானுக்கு ஸமர்ப்பித்ததாக ஸம்ப்ரதாயம் வல்ல பெரியோர் பகர்வர். .... .... (1)

உய்ம்மின்திறைகொணர்ந்து என்றுலகாண்டவர் * இம்மையே
தம்மின்சுவைமடவாரைப் பிறர்கொள்ளத்தாம்விட்டு *
வெம்மினொளிவெயில் கானகம்போய்க்குமைதின்பர்கள் *
செம்மின்முடித்திருமாலை விரைந்தடிசேர்மினோ. 2

| | | | |
|---|---|---|---|
| திறை கொணர்ந்து | செலுத்தவேண்டிய கப்பத்தைக் கொண்டுவந்து கட்டி | பிறர் கொள்ள | அயலார் கவர்ந்துகொள்ளும்படி |
| உய்ம்மின் என்று | பிழைத்துப்போங்கள் என்று கட்டளையிட்டுக்கொண்டு | விட்டு | கையிழந்து |
| உலகு | இவ்வுலகத்தை | வெம் மின் ஒளி வெயில் | கொடிதாய் மின்னொளி பரக்கின்ற வெயிலையுடைய |
| ஆண்டவர் தாம் | அரசுபுரிந்த பிரபுக்கள் தாம் | கானகம் போய் | காட்டிலே சென்று |
| இம்மையே | இப்பிறப்பிலேயே | குமை தின்பர்கள் | திண்டாடுவர்கள்; (ஆதலால்) |
| தம் | தங்களுடைய | செம் மின் முடி | செவ்விய காந்திபெற்ற திருமுடியையுடைய |
| இன் சுவை மடவாரை | பரமபோக்யைகளான ஸ்திரீகளை | திருமாலை | திருமகள் கொழுநனை |
| | | விரைந்து | விரைவாக |
| | | அடி சேர்மின் | அடி பணியுங்கோள். |

* * * ப்ரபுக்களாயிருந்து நெடுங்காலம் தாங்கள் ஆண்ட ராஜ்யங்களை யிழப்பார் என்றது கீழ்ப்பாட்டில்; அரசாளுகிறநாளில் போக்யைகளாகக் கைக்கொண்ட மடவார்களையும் பகைவர்க்குப் பறிகொடுத்துப் பரிதாபப்படுவர்களென்கிறது இதில்.

**உய்ம்மின் திறைகொணர்ந்து என்று உலகாண்டவர்**—எதிரிகளின் ராஜ்யங்களைத் தாங்கள் ஆக்கிரமிக்க நினைத்தால் யானை குதிரைபடை திரட்டிக் கொண்டு சென்று

பொருது பரிச்ரமப்பட்டு ஆக்ரமித்துக்கொள்ளுகையன்றிக்கே ஒரு கட்டளை மாத்திரத்தாலேயே க்ருதக்ருத்யர்களாக ஆய்விடுவர்களாம்; அதாவது—'உயிர் தப்பிப்பிழைக்கவேண்டியிருந்தீர்களாகில் நம்பக்கலில் கப்பஞ் செலுத்தி வாழ்ந்துபோங்கள்' என்று ஒரு கட்டளை தெரிவித்தமாத்திரத்திலேயே பகைவர்கள் பணிந்து நிற்பர்களாயிற்று: இவ்வளவு பெருமிடுக்காக உலகத்தை ஆண்ட ஸார்வபௌமர்கள் என்றபடி. **திறை** என்று கப்பத்திற்குப் பெயர்.

இங்ஙனே வாழ்ந்த மஹாப்ரபுக்கள் ஸாமயிகசேஷங்களிலேபடும் எளிவரவை மேல் இரண்டடிகளால் அருளிச்செய்கிறார். தாம் அரசாட்சிபுரிகிற நாளில் பல திசைகளிலிருந்துஞ் சிறந்தமாதர்களைத் திரட்டிக்கொணர்ந்து சேமித்து வைப்பதுண்டே; அவர்களையெல்லாம் பகைவர் வந்துபுகுந்து கைக்கொள்ளும் படியாகும். இங்கே ஈட்டு ஸ்ரீஸூக்திகாண்மின்;—'இது நரகபுரமழிந்த வன்று கண்டதிறே; பாண்டவர்களுடைய ராஜஸூயமும் செருக்கு மெல்லாங்கிடக்க த்ரௌபதி ஸதஸ்ஸிலே பரிபூதையானவதுவேயிறே இதில்ப்ரமாணம்' என்பதாம். "மன்னு நரகன்றன்னைச் சூழ்போகி வளைத்தெறிந்து, கன்னிமகளிர்தம்மைக் கவர்ந்த கடல்வண்ணன்" என்ற பாசுரத்தினால் நரகாஸுரனுடைய இழவு அறியத்தக்கது. பாண்டவர்களின் பரிபவம் ஜகத்ப்ரஸித்தம்.

"கண்டார்வணங்கக் களியானைமீதே கடல்சூழுலகுக்கொரு காவலராய், விண்டோய் நெடுவெண்குடை நீழலின்கீழ் விரிநீருலகாண்டு விரும்புவரே" என்றபடியே வெண்கொற்றக்குடை நிழலிலே இனிதாக வாழ்ந்தவர்கள் அந்த நிலைமையை யிழந்து நகரத்தில் வாழப்பெறாதே மநுஷ்ய ஸஞ்சாரமற்ற மருகாந்தாரங்களிலே சென்று தடுமாறுவர்களென்கிறது மூன்றாமடி. "பொருந்தார் கைவேல் நுதிபோல் பரல்பாய மெல்லடிகள் குருதிசோர, விரும்பாத கான் விரும்பி வெயிலுறைப்ப வெம்பசிநோய்கூர" என்ற பெருமாள் திருமொழியினாலும் "மின்னுருவில் வெண்டேர் திரிந்து வெளிப்பட்டுக் கல்நிரைந்து தீந்து கழையுடைந்து கால்சுழன்று, பின்னுந் திரைவயிற்றுப் பேயே திரிந்துலவாக் கொன்னவிலும் வெங்கானம்" என்ற பெரிய திருமடலினாலும் காட்டின் கொடுமை அறியத்தக்கது.

**கானகம்போய்க் குமைதின்பர்கள்**—காடேறவோடினாலும் அங்குந் தொடர்ந்து நலியப் பகைவருடைய ஆட்கள் வந்தே நிருவர்களாதலால் காட்டிலும் கொலை தப்பாது என்கிறார்.

**குமைதின்பர்கள்**—ஹிம்ஸைப்படுவர்களென்றபடி. ஆக மூன்றடிகளாலும் செல்வக்கிடப்பின் சீர்கேட்டை நிரூபித்து ஈற்றடியால் வாழ்ச்சிக்குறுப்பான உபாயத்தை உரைத்தருளுகிறார்; "முடிச்சோதியாய் உனது முகச்சோதி மலர்ந்ததுவோ" என்று பேசலாம்படியாய் * கதிராயிரமிரவி கலந்தெரித்தாலொத்த நீண்முடியனை எம்பெருமானைக் காலதாமதமின்றி அடிபணியப் பாருங்களென்கிறார்.

இங்கே இன்சுவையே வடிவெடுத்த ஈட்டு ஸ்ரீஸூக்திகள் காண்மின்;—"தன்னை ஆச்ரயித்தார்க்குக் கொடுக்கைக்குத் தலையான முடியுண்டு; கொடுப்பிக்கைக்கு அருகே

யிருப்பாருமுண்டு; விரையாமையாலுள்ள இழவேயுள்ளது: அவன் முடியைத்தரிலும் நீங்கள் திருவடியைச் சேருங்கோள்; நீங்கள் உங்களடிவிடாதே கொள்ளுங்கோள்." (2)

அடிசேர்முடியினராகி அரசர்கள்தாம்தொழ *
இடிசேர்முரசங்கள் முற்றத்தியம்பவிருந்தவர் *
பொடிசேர்துகளாய்ப்போவர்கள் ஆதலின்நொக்கென *
கடிசேர்துழாய்முடிக் கண்ணன்கழல்கள்நினைமினோ. (3)

| | |
|---|---|
| அடி சேர் முடியினர் ஆகி | தமது காலிலேபடிந்த கிரீடத்தையுடையவராகி |
| அரசர்கள் தாம் | மஹாப்ரபுக்கள் |
| தொழ | வணங்கும்படியாகவும் |
| இடி சேர் முரசங்கள் | இடியோடு ஒத்த பேரிகைகள் |
| முற்றத்து | தம் தம் மாளிகைமுற்றத்திலே |
| இயம்ப | முழங்கும்படியாகவும் |
| இருந்தவர் | வாழ்ந்தவர்கள் |
| பொடி சேர் துகள் ஆய் போவர்கள் | பொடியோடு பொடியாய்த் தொலைந்து போவர்கள்; |
| ஆதலின் | ஆதலால் |
| நொக்கென | விரைவாக |
| கடி சேர் துழாய் முடி | நறுமணம்மிக்க திருத்துழாய் மாலையணிந்த திருமுடியையுடைய |
| கண்ணன் | கண்ணபிரானுடைய |
| கழல்கள் | திருவடிகளை |
| நினைமின் | சிந்தியுங்கள். |

* * * மற்றுள்ள அரசர்கள் தங்களை யடிபணிந்து நிற்க அவர்களை மதியாதே வாழ்ந்தவர்கள் அந்தச் செல்வக்கிடப்பை யிழந்து ஒருவரும் மதியாதபடி யாவர்களென்கிறார்.

"அரசர்கள்தாம் தொழ" என்றவிடத்து '**தாம்**' என்றது முதல் வேற்றுமைச் சொல்லுருபு என்று தமிழர்கள் சொல்லிப் போருவர்கள்; நம் ஆசாரியர்கள் அதற்கும் ஒரு கருத்து அருளிச்செய்வர்கள்; இங்கு ஈடுகாண்மின்;—"[**தாம் தொழ**] தாங்களறிந்ததாகத் தொழுமித்தனை போக்கி இவனிப்படி தொழுதான் என்னும் ப்ரதிபத்தி அவனுக்கில்லை: 'இன்று ஸ்ரீபாதத்திலே தலைதாக்கத் தெண்டனிடப்பெற்றோம்' என்று இவர்கள் தாம் நினைத்திருக்குமத்தனை."—தொழப்படுகிற அரசர்கள் லக்ஷியம் பண்ணாதிருக்க, தொழுமவர்கள் தாங்கள் லாபத்தை பெறுவதாக நினைத்துத் தொழுகிற மாத்திரமேயுள்ளது என்று காட்டினபடி.

இங்ஙனே பல அரசர்கள் தொழச்செய்தேயும் அவர்களை அநாதரித்து ஆடல் பாடல் கண்டு போதுபோக்கிக் கிடக்கும்படியைக் கூறுவது இரண்டாமடி. இடியிடித்தாற்போலே ஒலிக்கின்ற பேரிகைகள் தமது மாளிகை முற்றத்திலே சப்திக்க, அதிலே செவிபடுத்து அந்யபரராய்ச் செருக்கிக்கிடந்தவர்கள் என்றபடி.

**பொடிசேர்துகளாய்ப் போவர்கள்**—தம் காலிலே குனிந்தவர்களை லக்ஷியம் பண்ணாதிருக்கும்படியான மதிப்பை யுடையராயிருந்தவர்கள், தம் தலையிலே ஒருவன் அடியிட்டால் 'நாம் இவன் தலையிலே அடியிட்டோம்' என்று நினைக்கவேண்டாதபடி அற்ப

யான துகளாய்ப் போவர்கள் என்றபடி. ஆதலால் * சுடர்முடிமேல்புனைந்த தண்ணந்துழா யுடையம்மானது திருவடிகளை விரைவாக நினையுங்கள் என்கிறார்.

**முரசம்**—முரஜ: என்ற வடசொல் விகாரம். .... .... (3)

நினைப்பான்புகில்கடலெக்கலின் நுண்மணலிற்பலர் *
எனைத்தோருகங்களும் இவ்வுலகாண்டுகழிந்தவர் *
மனைப்பால்மருங்கற மாய்தலல்லால்மற்றுக்கண்டிலம் *
பனைத்தாள்மதகளிறட்டவன் பாதம்பணிமினே, (4)

| | |
|---|---|
| நினைப்பான் புகில் | ஆலோசித்துப் பார்க்குமிடத்து |
| எனைத்தோர் உகங்களும் | அநேகயுகங்கள் |
| இ உலகு ஆண்டு கழிந்தவர் | இவ்வுலகத்தையாண்டு முடிந்து போனவர்கள் |
| கடல் எக்கலில் நுண் மணலில் பலர் | கடலில் எக்கலிட்ட நொய் மணலிற்காட்டிலும் அதிகமான தொகையுள்ளவர்களாவர்; (எப்படிப்பட்ட பிரபுக்களும்) |
| மனைப்பால் | தாங்களிருந்த வீட்டின் இடம் |
| மருங்கு அற | சுற்றுப்பக்கங்களோடுங்கூடத் தொலையும்படி |
| மாய்தல் அல்லால் | அழிந்து போவது தவிர |
| மற்று கண்டிலம் | வேறொன்றும் பார்த்தோமில்லை (ஆதலால்) |
| பனை தாள் | பனைமரம்போன்ற அடியையுடை |
| மத களிறு | (குவலயாபீடமென்னும்) மதயானையை |
| அட்டவன் | கொன்றொழித்த கண்ணபிரானுடைய |
| பாதம் | திருவடிகளை |
| பணிமின் | வணங்குங்கள். |

* * * மதிப்பு கெடுவதுமாத்திரமன்றிக்கே ஆயுளும் நிலையில்லாதாகையாலே எம்பெருமான் திருவடிகளை வணங்குங்களென்கிறார். நெடுநாள் இவ்வுலகையாண்டு கழிந்துபோனவர்களான ப்ரபுக்கள் எத்தனைபேர்கள் இருப்பார்களென்று நினைக்கத் தொடங்கினால், கடலில் எக்கலிடுகிற நுண்ணிய மணல்களை எண்ணி முடித்தாலும் முடிக்கலாம்; அவர்களை எண்ணி முடிக்கப்போகாது என்றுமித்தனை.

**மனைப்பால் மருங்கற மாய்தலல்லால் மற்றுக்கண்டிலம்**—கீழ்ச்சொல்லப்பட்டவர்கள் முடியுமளவில் தாங்கள் இருந்த மனைக்கும் அதன் சுற்றுப்பக்கங்களுக்கும் வாசி தெரியாதபடி அழிந்துபோவது தவிர, வேறுமிகுந்திருப்பது ஒன்றுண்டாகக் கண்டிலோம் என்றபடி. பெருமரம் விழும்போது அருகுநிற்கும் மரங்களையும் அழிக்குமாபோலே அக்கம்பக்கத்திலுள்ளவர்களையும் அடியறுத்துக்கொண்டு போகின்றமையைச் சொன்னபடி. ஆதலால், குவலயாபீட மதயானையைக் கொன்றொழித்த பெருமானுடைய திருவடிகளைப் பணியுங்கள் என்கிறார்.

பனைபோன்ற கால்களையுடைய யானை என்றதனால் அதன் அதிபயங்கரத்வம் தெரிவிக்கப்பட்டதாம். .... .... .... .... (4)

பணிமின்திருவருளென்னும் அஞ்சீதப்பைம்பூம்பள்ளி *
அணிமென்குழலார் இன்பக்கலவியமுதுண்டார் *
துணிமுன்புநாலப் பல்லேழையர்தாமிழிப்பச்செல்வர் *
மணிமின்னுமேனி நம்மாயவன்பேர்சொல்லிவாழ்மினோ, (5)

தனையொழிய, ப்ரஹ்மஸ்ருஷ்டி ஏற்பட்டகாலம்முதல் இன்றளவும் நன்கு ஆராய்ந்து பார்த்துக்கொள்ளலாம்; வாழ்ந்தவர்கள் ஒருபடியாக வாழ்ந்தே போந்தார்கள் என்பது கிடையாது; வாழ்வும் கேடும் கலந்த கட்டியாயிருக்குமே யல்லது ஒரே வாழ்வு என்பது எங்கும் காணக் கிடைக்காது; அங்ஙனன்றிக்கே நிலைநின்ற வாழ்ச்சியை விரும்பியிருந்தீர்களாகில், க்ஷீராஸாகரசயனனான பெருமானுக்கு அடியவரென்று பேர்பெற்று வாழப்பாருங்கோள் என்றாராயிற்று.

**மாமழைமொக்குளின்**—"படுமழைமொக்குளிற் பல்காலுந் தோன்றி" என்ற நாலடியார் (27) செய்யுளுங் காண்க. **ஆழ்ந்தார்**—தரைப்பட்டார்கள் என்றபடி. மண்ணோடு மண்ணாய்ப் போய்விட்டார்களென்பது கருத்து. நிற்க + உறில் — நிற்குறில்; தொகுத்தல்.

ஆழ்ந்தார் கடற்பள்ளி யண்ணலுக்கு அடியவராகுங்கோள் என்றதன் கருத்து யாதெனில்; எம்பெருமான் * தன் தாளுந் தோளும் முடிகளும் சமனிலாத பலபரப்பித் திருப்பாற்கடலிலே திருக்கண் வளர்ந்தருள்வதானது "குறைவில் தடங்கடல் கோளரவேறித் தன்கோலச் செந்தாமரைக்கண் உறைபவன்போலவோர் **யோகுபுணர்ந்த**" என்கிறபடியே சேதநர்கள் வழிபட்டாராவதற்கு என்ன வுபாயம் செய்யலாமென்று உபாய சிந்தையோடேயாதலால் அவன் நினைவு பலித்ததாம்படி செய்யப்பாருங்கோளென்கை. (6)

ஆமின்சுவையவை ஆறோடடிசிலுண்டார்ந்தபின் *
தூமென்மொழிமடவாரிரக்கப் பின்னும்துற்றுவார் *
ஈமினெமக்கொருதுற்றென்று இடறுவராதலின் *
கோமின்துழாய்முடி ஆதியஞ்சோதிகுணங்களே. (7)

| | | | |
|---|---|---|---|
| ஆம் இன்சுவை அவை அடிசில் ஆறோடு | பரமபோக்யமாய் ஷட்ரஸோபேதமான அன்னத்தை | எமக்கு ஒரு துற்று ஈமின் என்று | 'எமக்கு ஒரு கவளம் கொடுங்கள்' என்று சொல்லிக்கொண்டு |
| உண்டு ஆர்ந்தபின் | வயிறாரவுண்டு தீர்ந்த பின்பும் | இடறுவர் | தடுமாறிச் செல்வர்கள்; |
| தூ மென் மொழி மடவார் இரக்க | வெகு அழகாகப்பேசவல்ல மாதர்கள் வேண்டிக்கொள்ள (அந்த வேண்டுகோளை மீறமுடியாமல்) | ஆதலின் | ஆதலால், |
| பின்னும் | மேலும் | துழாய் முடி | திருத்துழாயையணிந்த திருமுடியையுடைய |
| துற்றுவார் | தின்றுகொண்டிருந்தவர்கள் (அப்படி யிருப்பதற்கான செல்வம் அழிந்தவளவிலே) | ஆதி அம் சோதி குணங்கள் | ஸர்வேச்வரனுடைய திருக்குணங்களையே |
| | | கோமின் | சேர்த்து அனுபவியுங்கள். |

* * * தேஹ போஷணத்திற்கு ஹேதுவான அன்னபானம் முதலிய போகமும் அநித்யமாகையாலே ஸகலகாரணபூதனான ஸர்வேச்வரனுடைய திருக்குணங்களை அநுஸந்தியுங்கோளென்கிறார். ஷட்ரஸங்களோடுங்கூடிப் பரமபோக்யமான அடிசிலை வயிறாவுண்டு தீர்ந்தபின்பும் உடனே இனியமாதர் வந்து ப்ரீதிபாவனை தோற்ற, பின்னையும் உண்ணவேணுமென்று நிர்ப்பந்திக்க, அவர்களுக்காகப் பின்னும் உண்பவர்களாய் இங்ஙனே வயிறு வாழ்ந்தவர்கள் தாங்களே பின்னையொருகாலத்தில் 'எனக்கு ஒருபிடி சோறு இடுவீர்களா?' என்று ஒரு கவளத்திற்கு மன்றாடும்படியாவர்கள்; ஆதலால்,

திருத்துழாய் மாலையனான எம்பெருமானுடைய திருக்குணங்களை யநுபவித்து நித்ய ஸாபேக்ஷமாயிருக்கப் பாருங்களென்றாராயிற்று.

இப்பாசுரத்தின் ஈட்டு ஸ்ரீஸூக்திகள் மிக விநோதம் வாய்ந்தவை; அவை காண்மின்;—"முன்பு இரந்து உண்டு திரிந்தவன் நாழியரிசி பெற்று ஜீவிக்கப் புக்கவாறே ஒரு வெள்ளாட்டியையும் ஸம்பாதித்து 'முதலியார்!' என்னவும் பண்ணி 'அடிசிலுண்ணநின்றீர்' என்னவும் பண்ணும்: கண்டதடைய இட்டு வயிற்றை நிரப்பி, உதிரங்குடித்து வாய்விட்ட அட்டைபோலே பெயரவும் திரியவும்மாட்டாதே கிடந்து பூராநிற்குமே; அவ்வளவிலே இவனுக்கு ஸ்நேஹிநிகளாயிருப்பார் சில ஸ்த்ரீகள் வந்து 'உடம்பு பதர் போலே யிருந்தது! இதுகொண்டு எங்ஙனே ரக்ஷ்யவர்க்கமான வெங்களை நோக்கப்பார்க்கிறது?' என்பர்கள்: அதுகேட்டு 'நாம் உண்டிலோமோ!' என்று இவன்தானும் ப்ரமிக்கும். ஒரு திரளையைத் திரட்டி 'இதுவென்? பிடி' என்பர்கள்; பின்னை புஜியாதொழியமாட்டானே. அப்பேச்சின் இனிமையிலே துவக்குண்டு பின்னையும் புஜியாநிற்கும். இவர்களை [இந்த ஸ்த்ரீகளை] இக்கட்டளையிலே வேறே யொருவன் கைக்கொள்ளுமே; அவர்களையும் முன்புத்தை யிவனைப்போலே இரந்து ஊட்டா நிற்பர்களே யிவர்கள். அங்கே தன் வயிறு வாழாமல் சென்று 'நீங்களெல்லாருமாக எனக்கொருபிடி தரவேணும்' என்னும். பண்டு நல்லது கண்டால் தன் வாயிலிடாதே இவர்களுக்காக்கிப் போந்தவன் (இப்போது) தன் செல்லாமையாலே எனக்கு என்கிறானிறே. அப்போதை யவனுக்கு ப்ரியமாக அவர்கள் முகம் பாரார்களிறே; பின்னையும் தட்டித் திரிவர்கள். ஆனபின்பு ஜீவனத்தின் நிலையாமை இதுவானபின்பு ஸர்வைச்வர்ய ஸூசகமான திருத்துழாய்மாலையைத் திருமுடியிலே உடையனாய் ஜகத்காரண பூதனாய் நிரவதிக தேஜோரூபமான விக்ரஹத்தை யுடையனாயிருந்துள்ளவனுடைய குணங்களைக் **கோமின்**—அநுபவியுங்கள்."

**அறுசுவை**— கைப்பு தித்திப்பு புளிப்பு உவர்ப்பு துவர்ப்பு கார்ப்பு என்பவை. அடிசில், அடுசில் என இரண்டு வகையாகவும் சொல்வடிவமுண்டு; உணவு. **ஈமின் கோமின்**- முன்னிலைப்பன்மை வினைமுற்றுக்கள். 'கோமின்' என்பதில் **கோ**—வினைப்பகுதி. .... (7)

குணங்கொள்நிறைபுகழ்மன்னர் கொடைக்கடன்பூண்டிருந்து *
இணங்கியுலகுடனாக்கிலும் ஆங்கவனையில்லார் *
மணங்கொண்டபோகத்துமன்னியும் மீள்வர்கள்மீள்வில்லை *
பணங்கொளரவணையான் திருநாமம்படிமினே. (8)

| | |
|---|---|
| குணம் கொள் | குணசாலிகளும் |
| நிறை புகழ் | நிறைந்த கீர்த்தியை யுடையாருமான |
| மன்னர் | ராஜகுமாரர்களாய் |
| கொடை கடன் பூண்டு இருந்து | ஔதார்யத்தைக் கடமையாக ஏறிட்டுக்கொண்டிருந்து |
| இணங்கி | சிலருடனே நேசங்கூடி |
| உலகு உடன் ஆக்கிலும் | உலகங்களை ஸ்வாதீனப்படுத்தி ஆண்டாலும் |
| ஆங்கு | அவ்விஷயத்தில் |
| அவனை இல்லார் | அந்த ஸர்வேச்வரனை ஆச்ரயித்த லில்லாதவர்கள் |

| | |
|---|---|
| மணம் கொண்ட போகத்து | மிகநல்ல போகங்களில் |
| மன்னியும் | பொருந்தியிருந்தும் |
| மீள்வர்கள் | அதோகதியடைவர்கள்; |
| பணம் கொள் | படமெடுத்தாடுகின்ற |
| அரவு | ஆதிசேஷனை |
| அணையான் | படுக்கையாகவுடைய ஸர்வேச்வரனது |
| திரு நாமம் | திருநாமங்களை |
| படிமின் | படியுங்கள்; (படித்தால்) |
| மீள்வு இல்லை | மீட்சியில்லாத பெருஞ் செல்வம் கிடைக்கும். |

தனையொழிய, ப்ரஹ்மஸ்ருஷ்டி ஏற்பட்டகாலம்முதல் இன்றளவும் நன்கு ஆராய்ந்து பார்த்துக்கொள்ளலாம்; வாழ்ந்தவர்கள் ஒருபடியாக வாழ்ந்தே போந்தார்கள் என்பது கிடையாது; வாழ்வும் கேடும் கலந்த கட்டியாயிருக்குமே யல்லது ஒரே வாழ்வு என்பது எங்கும் காணக் கிடைக்காது; அங்ஙனன்றிக்கே நிலைநின்ற வாழ்ச்சியை விரும்பியிருந்தீர்களாகில், க்ஷீரஸாகரசயனனான பெருமானுக்கு அடியவரென்று பேர்பெற்று வாழப்பாருங்கோள் என்றாராயிற்று.

**மாமழைமொக்குளின்**—"படுமழைமொக்குளிற் பல்காலுந் தோன்றி" என்ற நாலடியார் (27) செய்யுளுங் காண்க. **ஆழ்ந்தார்**—தரைப்பட்டார்கள் என்றபடி. மண்ணோடு மண்ணாய்ப் போய்விட்டார்களென்பது கருத்து. நிற்க + உறில் — நிற்குறில்; தொகுத்தல்.

ஆழ்ந்தார் கடற்பள்ளி யண்ணலுக்கு அடியவராகுங்கோள் என்றதன் கருத்து யாதெனில்; எம்பெருமான் * தன் தாளுந் தோளும் முடிகளும் சமனிலாத பலபரப்பித் திருப்பாற்கடலிலே திருக்கண் வளர்ந்தருள்வதானது "குறைவில் தடங்கடல் கோளரவேறித் தன்கோலச் செந்தாமரைக்கண் உறைபவன்போலவோர் **யோகுபுணர்ந்த**" என்கிறபடியே சேதநர்கள் வழிபட்டாராவதற்கு என்ன வுபாயம் செய்யலாமென்று உபாய சிந்தையோடேயாதலால் அவன் நினைவு பலித்ததாம்படி செய்யப்பாருங்கோளென்கை, (6)

ஆமின்சுவையவை ஆறோடடிசிலுண்டார்ந்தபின் *
தூமென்மொழிமடவாரிரக்கப் பின்னும்துற்றுவார் *
ஈமினெமக்கொருதுற்றென்று இடறுவராதலின் *
கோமின்துழாய்முடி ஆதியஞ்சோதிகுணங்களே. (7)

| | | | |
|---|---|---|---|
| ஆம் இன்சுவை அவை அடிசில் ஆறோடு | பரமபோக்யமாய் ஷட்ரஸோபேதமான அன்னத்தை | எமக்கு ஒரு துற்று ஈமின் என்று | 'எமக்கு ஒரு கவளம் கொடுங்கள்' என்று சொல்லிக்கொண்டு |
| உண்டு ஆர்ந்தபின் | வயிறாரவுண்டு தீர்ந்த பின்பும் | இடறுவர் | தடுமாறிச் செல்வர்கள்; |
| தூ மெல் மொழி மடவார் இரக்க | வெகு அழகாகப்பேசவல்ல மாதர்கள் வேண்டிக்கொள்ள (அந்த வேண்டுகோளை மீறமுடியாமல்) | ஆதலின் | ஆதலால், |
| பின்னும் | மேலும் | துழாய் முடி | திருத்துழாயையணிந்த திருமுடியையுடைய |
| துற்றுவார் | தின்றுகொண்டிருந்தவர்கள் (அப்படியிருப்பதற்கான செல்வம் அழிந்தவளவிலே) | ஆதி அம் சோதி குணங்கள் கோமின் | ஸர்வேச்வரனுடைய திருக்குணங்களையே சேர்த்து அநுபவியுங்கள். |

* * * தேஹ போஷணத்திற்கு ஹேதுவான அன்னபானம் முதலிய போகமும் அநித்யமாகையாலே ஸகலகாரணபூதனான ஸர்வேச்வரனுடைய திருக்குணங்களை அநுஸந்தியுங்கோளென்கிறார். ஷட்ரஸங்களோடுங்கூடிப் பரமபோக்யமான அடிசிலை வயிறாரவுண்டு தீர்ந்தபின்பும் உடனே இனியமாதர் வந்து ப்ரீதிபாவனை தோற்ற, பின்னையும் உண்ணவேணுமென்று நிர்ப்பந்திக்க, அவர்களுக்காகப் பின்னும் உண்பவர்களாய் இங்ஙனே வயிறு வாழ்ந்தவர்கள் தாங்களே பின்னையொருகாலத்தில் 'எனக்கு ஒருபிடி சோறு இடுவீர்களா?' என்று ஒரு கவளத்திற்கு மன்றாடும்படியாவர்கள்; ஆதலால்,

திருத்துழாய் மாலையனான எம்பெருமானுடைய திருக்குணங்களை யநுபவித்து நித்ய ஸூரிகளாயிருக்கப் பாருங்களென்றாராயிற்று.

இப்பாசுரத்தின் ஈட்டு ஸ்ரீஸூக்திகள் மிக விநோதம் வாய்ந்தவை; அவை காண்மின்;—"முன்பு இரந்து உண்டு திரிந்தவன் நாழியரிசி பெற்று ஜீவிக்கப் புக்கவாறே ஒரு வெள்ளாட்டியையும் ஸம்பாதித்து 'முதலியார்!' என்னவும் பண்ணி 'அடிசிலுண்ண நின்றார்' என்னவும் பண்ணும்; கண்டதடைய இட்டு வயிற்றை நிரப்பி, உதிரங்குடித்து வாய்விட்ட அட்டைபோலே பெயரவும் திரியவும்மாட்டாதே கிடந்து புரளாநிற்குமே; அவ்வளவிலே இவனுக்கு ஸ்நேஹிநிகளாயிருப்பார் சில ஸ்த்ரீகள் வந்து 'உடம்பு பதர் போலே யிருந்தது! இதுகொண்டு எங்ஙனே ரக்ஷ்யவர்க்கமான வெங்களை நோக்கப்பார்க்கிறது?' என்பர்கள்: அதுகேட்டு 'நாம் உண்டிலோமோ!' என்று இவன்தானும் ப்ரமிக்கும். ஒரு திரளையைத் திரட்டி 'இதுவென்? பிடி' என்பர்கள்; பின்னை புஜியாதொழியமாட்டானே. அப்பேச்சின் இனிமையிலே துவக்குண்டு பின்னையும் புஜியாநிற்கும். இவர்களை [இந்த ஸ்த்ரீகளை] இக்கட்டளையிலே வேறே யொருவன் கைக் கொள்ளுமே; அவர்களையும் முன்புத்தை யிவனைப்போலே இரந்து ஊட்டா நிற்பர்களே யிவர்கள். அங்கே தன் வயிறு வாழாமல் சென்று 'நீங்களெல்லாருமாக எனக்கொருபிடி தரவேணும்' என்னும். பண்டு கல்லது கண்டால் தன் வாயிலிடாதே இவர்களுக்காக்கிப் போந்தவன் (இப்போது) தன் செல்லாமையாலே எனக்கு என்கிறானிறே. அப்போதை யவனுக்கு ப்ரியமாக அவர்கள் முகம் பாரார்களிறே; பின்னையும் தட்டித் திரிவர்கள். ஆனபின்பு ஜீவனத்தின் நிலையாமை இதுவானபின்பு ஸர்வைச்வர்ய ஸூசகமான திருத்துழாய்மாலையைத் திருமுடியிலே உடையனாய் ஜகத்காரண பூதனாய் நிரவதிக தேஜோரூபமான விக்ரஹத்தை யுடையனாயிருந்துள்ளவனுடைய குணங்களைக் **கோமின்**—அநுபவியுங்கள்."

**அறுசுவை**— கைப்பு தித்திப்பு புளிப்பு உவர்ப்பு துவர்ப்பு கார்ப்பு என்பவை. அடிசில், அடிசில் என இரண்டு வகையாகவும் சொல்வடிவமுண்டு; உணவு. **ஈமின் கோமின்**- முன்னிலைப்பன்மை வினைமுற்றுக்கள். 'கோமின்' என்பதில் **கோ**—வினைப்பகுதி. ...; (7)

குணங்கொள்நிறைபுகழ்மன்னர் கொடைக்கடன்பூண்டிருந்து *
இணங்கியுலகுடனாக்கிலும் ஆங்கவனையில்லார் *
மணங்கொண்டபோகத்துமன்னியும் மீள்வர்கள்மீள்வில்லை *
பணங்கொளரவணையான் திருநாமம்படிமினே. (8)

| | | | |
|---|---|---|---|
| குணம் கொள் | குணசாலிகளும் | மணம் கொண்ட போகத்து | மிகநல்ல போகங்களில் |
| நிறை புகழ் | நிறைந்த கீர்த்தியை யுடையாருமான | மன்னியும் | பொருந்தியிருந்தும் |
| மன்னர் | ராஜகுமாரர்களாய் | மீள்வர்கள் | அதோகதியடைவர்கள்; |
| கொடை கடன் பூண்டு இருந்து | ஔதார்யத்தைக் கடமையாக ஏறிட்டுக்கொண்டிருந்து | பணம் கொள் | படமெடுத்தாடுகின்ற |
| இணங்கி | சிலருடைத்தோடிணங்கூடி | அரவு | ஆதிசேஷனை |
| உலகு உடன் ஆக்கிலும் | உலகங்களை ஸ்வாதீனப்படுத்தி ஆண்டாலும் | அணையான் | படுக்கையாகவுடைய ஸர்வேச்வரனது |
| ஆங்கு | அவ்விஷயத்தில் | திரு நாமம் | திருநாமங்களை |
| அவனை இல்லார் | அந்த ஸர்வேச்வரனை ஆச்ரயித்த தில்லாதவர்கள் | படிமின் | படியுங்கள்; (படித்தால்) |
| | | மீள்வு இல்லை | மீட்சியில்லாத பெருஞ் செல்வம் கிடைக்கும். |

* * * அரசாட்சி புரிவதாகிய போகமும் எம்பெருமானருளாலன்றிக் கிடைக்கமாட்டாதென்றும், அங்ஙனே கிடைக்கின்ற அதுதானும் நிலைநில்லாததென்றுமருளிச் செய்கிறார். அரசர்களின் மேன்மையை ஒன்றரையடியால் விரித்துரைக்கின்றார். அமைய வேண்டிய குணங்கள்யாவும் அமையப்பெற்றவர்களாயும், உலகமெல்லாம் கொண்டாடும்படியான புகழையுடையனராயும், பரம்பரையாகவே ப்ரபுக்களின் புத்திரர்களாயும், வேண்டினார் வேண்டினபடியே பொருள்களைக் கொடுப்பதாகிற ஔதார்யத்தைக் கடமையாகக் கொண்டவர்களயும், மேன்மைபாராட்டி இறுமாப்புடனிராதே சீலவான்களாய் உலகத்தோடு பொருந்துமவர்களாயும் வாழ்வர்களேனிலும் எம்பெருமானை ஆச்ரயிக்கப்பெறாதவர்கள் கீழ்ச்சொன்ன போகத்திலிருந்து சரிந்துபோவர்; ஆதலால், சேஷசாயியான எம்பெருமானுடைய திருநாமங்களை ஸங்கீர்த்தநம் பண்ணுங்கள்; அப்படியாகில் மீட்சியின்றியே நித்யஸ்ரீயாக வாழலாம் என்றாராயிற்று.

**அவனையில்லார்** என்பதற்கு "அவனையன்றிப் பெறார்" என்று நலிந்து பொருள் கொள்ளவுமாம். "அவன் ப்ரஸாதமில்லையாகில் அந்த ராஜ்யஸ்ரீதான் கிடையாது" என்று *டுமுதலிய வியாக்கியானங்களில் ஸ்ரீஸூக்தி காண்பதால் இங்ஙனே பொருள் கொள்வது தகுதியென்று சில பெரியார் கருதுகின்றனர். "**அவனையில்லார்**—அவனை ஆச்ரயித்தலில்லாதவர்கள், மணங்கொண்ட போகத்துமன்னியும் மீள்வர்கள்" என்றுரைத்தல் பன்னீராயிரப்படியோடு பொருந்தும். திருநாம ஸங்கீர்த்தனத்தில் ஊன்றுமவர்களைத் திருவனந்தாழ்வானைப்போலே அத்தாணிச் சேவகத்தில் எம்பெருமான் அங்கீகரித்தருள்வன் என்ற கருத்துப்பட "பணங்கொளரவணையான் திருநாமம்படிமின்" என்றார். .... .... (8)

படிமன்னுபல்கலன்பற்றோடறுத்து ஐம்புலன்வென்று *
செடிமன்னுகாயம்செற்றார்களும் ஆங்கவனையில்லார் *
குடிமன்னுமின்சுவர்க்கமெய்தியும் மீள்வர்கள்மீள்வில்லை *
கொடிமன்னுபுள்ளுடை அண்ணல்கழல்கள்குறுகுமினோ. (9)

| | | | |
|---|---|---|---|
| படி மன்னு | பரம்பரையாக வருகின்ற | குடி மன்னும் | வெகுகாலம் நிலைபெற்றிருக்கும்படியான |
| பல் கலன் | பலபல ஆபரணங்களையும் | இன் சுவர்க்கம் | இனிமையான சுவர்க்கத்தை |
| பற்றோடு அறுத்து | ஸவாஸநமாகவிட்டவர்களாய் | எய்தியும் மீள்வர்கள் | அடைந்தும் திரும்புவர்கள்; (ஆதலால்) |
| ஐம்புலன் | பஞ்சேந்திரியங்களையும் | கொடி மன்னு புள் உடை | கருடத்வஜனை |
| வென்று | வசப்படுத்தினவர்களாய் | அண்ணல் | ஸ்வாமியினுடைய |
| செடி மன்னு | தூறுமண்டிக்கிடக்கும்படியாக | கழல்கள் | திருவடிகளை |
| காயம் | சரீரத்தை | குறுகுமின் | கிட்டுங்கள்; (அப்படியாயின்) |
| செற்றார்களும் | தவவிரதங்களால் வெறுக்கின்றவர்களும் | மீள்வு இல்லை | என்றும் மீட்சியில்லாத பெருஞ்செல்வமுண்டாகும். |
| ஆங்கு | அவ்விஷயத்தில் | | |
| அவனை இல்லார் | அந்த எம்பெருமானை ஆச்ரயித்தலில்லாதவர்கள் | | |

* * * கீழ்ப்பாசுரங்களில் இஹலோகஸுகங்களின் ஹேயத்வத்தை அருளிச்செய்துவந்தார். இனி இரண்டு பாசுரங்களில், ஸ்வர்க்கலோக போகத்தினுடையவும், ஐச்வர்யபோகத்தினுடையவும் ஹேயத்வத்தையருளிச்செய்வாராய், இப்பாட்டில் ஸ்வர்க்க போகமும் நிலைநில்லாதென்கிறார். சுவர்க்கம் பெறுதற்காகக் கடுந்தவம்புரிவதுண்டு; அத்தவம் புரியுங்காலை நிலைமையை ஒன்றரையடியாலருளிச்செய்கிறார். படிமன்னு பல்கலன் பற்றோடறுப்பதாவது—குல பரம்பரையாகத் தங்களுக்குக் கிடைத்த ஆபரணம் முதலிய சிறப்புக்களை அடியோடு துறப்பதாம். ஸ்வர்க்கலோகத்தில் அளவிறந்த போகங்களை அநுபவிக்கப்பெறவேணுமென்னும் நசையால் இஹலோகபோகங்களை வெறுக்கிறபடி, "ஊன்வாடவுண்ணாது உயிர்காவலிட்டு உடலிற் பிரியாப்புலனைந்தும் நொந்து தான் வாடவாடத் தவம்செய்ய" என்றும், "காயோடு நீடுகனியுண்டு வீசுகடுங்கால் நுகர்ந்து நெடுங்காலம் ஐந்துதீயூடுநின்று தவஞ்செய்ய" என்றும், "வீழ்கனியு மூழிலையும் என்னுமிவையே நுகர்ந்துடலம் தாம்வருந்தித் துன்னுமிலைக்குரம்பைத் துஞ்சியும், வெஞ்சுடரோன் மன்னு மழல்நுகர்ந்தும் வெண்தடத்தினுட்கிடந்தும்" என்றும், "காயிலைதின்றுங் கானினுறைந்துங்கதிதேடித் தீயிடைநின்றும் பூவலம் வந்தும்" என்றுஞ் சொல்லுகிறபடியேயிருந்து கடுந்தவம் புரிகின்றவர்கள் படிமன்னுபல்கலன் பற்றோடறுத்தவர்களாயும் ஐம்புலன் வென்றவர்களாயும் செடிமன்னுகாயஞ் செற்றார்களாயுமிருப்பர்களாயிற்று.

**செடிமன்னு காயம் செற்றார்கள்**—உடம்பிலே தூறுமண்டும்படியிருப்பவர்கள் என்றபடி. தவத்திற்காக நெடுங்காலம் ஒவ்வொரு ஆஸனத்திலிருந்தால் சலியாமையாலே உடம்பிலே தூறுமண்டிவிடும். இங்கே "நெறியார் குழற்கற்றை முன்னின்று பின்தாழ்ந்து, அறியாதிளங்கிரி யென்றெண்ணிப்—பிரியாது, பூங்கொடிகள் வைகும் பொருபுனற் குன்றென்னும், வேங்கடமே யாம் விரும்பும் வெற்பு" என்ற பூதத்தாழ்வார் பாசுரம் நினைக்கத்தகும். (இதன் கருத்தாவது—) திருமலையேறும் வழியில் பலர் வீற்றிருந்து எம்பெருமானை நோக்கித் தவம்புரிகின்றனர்: அப்போது, மூச்சுவிடுதல், உடம்பு அசைத்தல் முதலியன ஒன்றுஞ்செய்யாதே வால்மீகி முதலிய மஹர்ஷிகளைப்போலே யிருந்ததனால் அவர்களது கூந்தற்கற்றை முன்னின்று பின்தாழ்ந்திருக்கவே, பூங்கொடிகளானவை அந்தக்கூந்தலின்மேலே படர்கின்றனவாம். பண்டு வான்மீகிமுனிவர்மீது புற்று மூடினாப்போலே இந்த பக்தர்களின்மீதும் பூங்கொடிகள் படர்ந்திருப்பது அற்புதமானவொரு காட்சியாக அமைந்தது—என்பதாம்.

இவ்வண்ணமாகக் கடுந்தவம் புரிந்தவர்கள் பகவத்ப்ராப்தியையே உத்தேச்யமாகக்கொண்டு தவம்புரிந்தவர்களாயின் நன்றே; இல்லையேல் சுவர்க்கம் சென்றிருந்து "க்ஷீணே புண்யே மர்த்யலோகம் விசந்தி" என்கிறபடியே புண்யம் க்ஷயித்தவுடனே கீழே தலைகீழாகத் தள்ளப்பட்டு விழுந்தொழிவர்கள். "பின்னையித்திசைக்கென்றும் புணைக்கொடுக்கிலும் போகவொட்டாரே" என்னும்படி மீள்வில்லாத மஹா புருஷார்த்தத்தைப் பெறவேண்டியிருந்தீர்களாயின் கருளக்கொடியொன்றுடைய பெருமானது திருவடிகளைப் பணிவது நன்று என்றாராயிற்று.

குறுகுதல்—அணுகுதல் .... .... .... (9)

குறுகமிகவுணர்வத்தொடுநோக்கி எல்லாம்விட்ட *
இறுகலிறப்பென்னும்ஞானிக்கும் அப்பயனில்லையேல் *
சிறுகநினைவதோர்பாசமுண்டாம் பின்னும்வீடில்லை *
மறுகலிலீசனைப்பற்றி விடாவிடில்வீடஃதே. (10)

| | |
|---|---|
| குறுக | பட்டிமேயாதபடி மனத்தைக் குறுக்கி |
| உணர்வத் தொடு | ஜ்ஞாநஸ்வரூபனை ஆத்மாவோடு |
| மிக நோக்கி | நன்றாகச் சேர்த்து (ஆத்மஸாக்ஷாத்காரத்தைப்பண்ணி) |
| எல்லாம் விட்ட | (ஐச்வர்யம், பகவதநுபவம் முதலிய) எல்லாவற்றையும் வெறுத்தவனாய் |
| இறுகல் இறப்பு என்னும் | ஸங்கோச மோக்ஷமாகிய கைவல்யமோக்ஷத்தில் விருப்பங்கொண்டவனான |
| ஞானிக்கும் | ஜ்ஞாநயோக நிஷ்டனுக்கும் |
| அப் பயன் இல்லை எல் | அந்த பகவதுபாஸநம் இல்லையாகில், |
| சிறுக | அற்பமாக |
| நினைவது | நினைப்பதற்குறுப்பான |
| ஓர்பாசம் உண்டாம் | ஒரு பந்தம் உண்டாகும்; |
| பின்னும் | அதற்குமேலே |
| வீடு இல்லை | அந்தக் கைவல்ய மோக்ஷம் ஒரு நாளும் விட்டு நீங்குவதன்று |
| மறுகல் இல் | ஹேயப்ரதிபடனான |
| ஈசனை | எம்பெருமானை |
| பற்றி | ஆச்ரயித்து |
| விடாவிடில் | நீங்காவிடில் |
| அஃதே வீடு | அதுவே பரமபுருஷார்த்தம் |

* * * கீழ்ப்பாட்டிற்சொன்ன சுவர்க்கம்போலே அஸ்திரமல்லாமல் நிலை நின்ற மோக்ஷமான கைவல்யத்திலும் ஊற்றத்தைவிட்டு பகவத் கைங்கர்யத்தையே பரம ப்ராப்யமாகப் பற்றுங்களென்கிறார்.

"மிகவுணர்வத்தொடு எல்லாம் குறுகநோக்கிவிட்ட இறுகலிறப்பென்னும் ஞானிக்கும் அப்பயன் இல்லையேல்" என்றும் அந்வயிப்பது. சிறந்த ஞானத்தை யுடையனாய்க்கொண்டு ப்ராக்ருத போகங்களெல்லாவற்றையும் அற்பங்களாகக்கண்டு அவற்றில் ஆசையைவிட்ட—என்பது முதலடியின் கருத்து. மற்றொரு வகையாகவுமுரைக்கலாம்;—**குறுக**—மனம் கண்டவிஷயங்களிலும் பரந்துசெல்லாதபடி அதனைக்குறுக்கி; ஜிதேந்த்ரியனாகி என்றவாறு. **உணர்வத்தொடு**—ஜ்ஞாநஸ்வரூபனான ஆத்மாவோடே, **மிகநோக்கி**—நன்றாக ப்ரவணமாக்கி: **எல்லாம்விட்ட**—பகவத் ப்ராப்தியுட்பட எல்லாவற்றையும் வெறுத்த—என்றபடி. ஆத்மாநுபவமொன்றுதவிர மற்ற எந்த புருஷார்த்தத்தையும் கணிசியாத—என்றதாயிற்று.

**இறுகலிறப்பு**—இறப்பு என்பது இங்கே மோக்ஷத்தைச் சொல்லுகிறது. **இறுகல்**—ஸங்கோசம்; பகவதநுபவமாகிற மோக்ஷமானது விகாஸ மோக்ஷமென்றும், ஆத்மாநுபவமாகிற மோக்ஷமானது ஸங்கோச மோக்ஷமென்றும் கொள்ளக்கடவது. ஸ்வரூபாநுரூபமான பகவத் கைங்கர்யங்களெல்லாம் நன்றாகச்செய்வதற்கு உறுப்பான மோக்ஷம் விகாஸமோக்ஷம். ஆத்மாநுபவமோக்ஷத்தில் அந்த விகாஸத்திற்கு அவகாசமில்லையன்றே. **"ஜராமரணமோக்ஷாய"** என்கிறபடியே மறுபடியும் பிறப்பதும் இறப்பதும் கிடையாது என்கிற இவ்வளவே பயனாதலால் இது ஸங்கோச மோக்ஷமெனத் தகுதியுடையதென்று திருவுள்ளம்பற்றிய ஆழ்வார் **இறுகலிறப்பு** என்று வெகு அழகாக அருளிச்செய்தார்.

**என்னும் ஞானிக்கும்**—(இறுகலிறப்பையே) புருஷார்த்தமென்றிருக்கும் ஜ்ஞானிக்கும் என்றபடி. [**ஞானிக்கும்**] என்றது – ஜ்ஞாநயோக நிஷ்டனுக்கும் என்றவாறு.

**அப்பயன் இல்லையேல்**—எம்பெருமானை உபாயமாகப் பற்றுதல் இல்லையாகில் என்றபடி. **சிறுக நினைவதோர் பாசமுண்டாம்**—இழிவான புருஷார்த்தங்களை நினைப்பதற்குறுப்பான கர்மபாசமே மேலிடும் என்றபடி. இங்கே ஆறாயிரப்படி காண்மின்; "ப்ராக்ருதவிஷய வைராக்ய பூர்வகமாக ஜ்ஞாநயோக நிஷ்டனானவனுக்கும் எம்பெருமானை ஆச்ரயித்தாலல்லாது ஆத்மாவலோகந விரோதி கர்மம் போகாது; பகவத் ஸமாச்ரயணத்தாலேயாயிற்று ஆத்மாவலோகநம் பிறப்பது."—என்று

**அப்பயனில்லையேல்** என்பதற்கு 'பகவதுபாஸநமில்லையாகில்' என்று பொருளாகும் பக்ஷத்தில், **பயன்** என்கிற சொல்லால் அதனைக்குறித்தது எங்ஙனே கூடும்? ஸாதநமான உபாஸநத்தைப் பயனாகச் சொல்லலாமோ? என்ற சங்கை பிறக்கும்; இதற்கு ஸமாதானத்தைப் பூர்வாசார்யர்களே காட்டியுள்ளார்கள்; பகவதுபாஸநத்தை ஆழ்வார் ஸ்வயம்புருஷார்த்தமாக நினைத்திருப்பவராதலால் இவருடைய கருத்தாலே பயனென்றதத்தனை. இங்கே ஈட்டு ஸ்ரீஸூக்தி காண்மின்:—"**உபாஸநந்தான் ஸ்வரூபமாயிருக்கையாலே பயனென்கிறது; அவனுடைய ஸாதநம் இவருக்கு ப்ரயோஜனமாயிருக்கிறது.**" என்று.

**சிறுக நினைவதோர் பாசமுண்டாம்**—இதற்கு இரண்டு வகையாகப் பொருள் கூறலாம்: (1) கைவல்ய ஸித்திக்காகவும் எம்பெருமானை அடிபணியாமல் முயற்சி செய்பவர்களுக்கு 'இவர்கள் மிகவும் க்ஷுத்ரர்கள்' என்று நினைக்கும்படியான கருமபந்தமே உண்டாகும். (2) நிக்ருஷ்ட புருஷார்த்தங்களை ஸ்மரிப்பதற்குறுப்பான ஸங்கம் உண்டாகும்.

**பின்னும்வீடில்லை** என்பதைத் தனிவாக்யார்த்தமாக யோஜிப்பதிலுங்காட்டில் "**மறுகலிலீசனைப்பற்றி விடாவிடில் பின்னும் வீடில்லை**" என்று யோஜிப்பது சிறக்கும்: ஈட்டின் யோஜனை இதுவே. **மறுகலில்** என்பதை 'மறுகல் இல்' என்று பிரித்து ஈசனுக்கு விசேஷணமாக்குதல்; அன்றியே, மறுகலில் என்று ஏழாம் வேற்றுமையாகக்கொண்டு, மறுகுகிற ஸமயத்தில்—ப்ராணவியோக ஸமயத்திலே வரும்கலக்கத்தில் என்று பொருள் கொள்வதுமுண்டு ('மறுகல் இல்' என்று பிரிக்கும்போது, அகில ஹேயப்ரத்யநீகனான ஈசன் என்றபடி) ஆக, **மறுகலில்**—சரமஸமயத்தில். **ஈசனைப்பற்றி விடாவிடில்**—எம்பெருமானை அநுஸந்திப்பதாகிற அந்திமஸ்ம்ருதி இல்லாமல் இந்தவுடலை விடநேர்ந்தால் என்றபடி. **பின்னும்வீடில்லை**—அந்த கைவல்ய மோக்ஷம் ஸித்திக்கமாட்டாது. அந்த அதிகாரிக்கு அந்திமஸ்ம்ருதி ஆவச்யகம் என்று காட்டினபடி

**வீடுஅஃதே**—"திருநாரணன்தாள் காலம்பெறச் சிந்தித்துய்ம்மினோ" என்று முந்துறமுன்னம் நான் சொன்னதுவே புருஷார்த்தம் என்றபடி. .... .... (10)

அஃதே உய்யப்புகுமாறென்று கண்ணன்கழல்கள்மேல் *
கொய்பூம்பொழில்சூழ் குருகூர்ச்சடகோபன்குற்றேவல் *
செய்கோலத்தாயிரம் சீர்த்தொடைப்பாடலிவைபத்தும் *
அஃகாமல்கற்பவர் ஆழ்துயர்போயுய்யற்பாலரே. (11)

| | |
|---|---|
| உய்யப் புகும் ஆறு | உஜ்ஜீவநோபாயம் |
| அஃதே என்று | திருநாரணன் தாள்களேயென்று அறுதியிட்டு |
| கண்ணன் | எம்பெருமானுடைய |
| கழல்கள் மேல் | திருவடிகள் விஷயமாக, |
| கொய் பூ பொழில் சூழ் | கொய்வதற்குரிய பூக்கள் நிறைந்த சோலைகளால் சூழப்பட்ட |
| குருகூர் | திருநகரிக்குத் தலைவரான |
| சடகோபன் | ஆழ்வாருடைய |
| குற்றேவல் | வாசிக கைங்கர்ய ரூபமாயும் |
| செய் கோலத்து | ஸர்வாலங்கார ஸம்பந்நமாயுமிருக்கிற |
| ஆயிரம் | ஆயிரந்தொகையுள்ள |
| சீர் தொடை பாடல் | திருக்குணங்களை யிட்டுத் தொடுத்த மாலை போன்ற இப்பாடலில் |
| இவை பத்தும் | இப்பத்துப் பாசுரங்களையும் |
| அஃகாமல் | குறைவின்றி |
| கற்பவர் | ஓதுமவர்கள் |
| ஆழ் துயர் போய் | ஆழ்ந்த துயர் நீங்கப்பெற்று |
| உய்யற்பாலர் | உஜ்ஜீவிக்குந் தன்மையை யுடையராவர். |

* * * துயரங்கள் தீர்ந்து ஆத்மோஜ்ஜீவநம் பெறுவதே இத்திருவாய்மொழி கற்பதற்குப் பலன் என்று பயனுரைத்துத் தலைக்கட்டுகிறார். எம்பெருமானது திருவடிகளே உபாயமென்று அத்திருவடிகள் விஷயமாக ஆழ்வார் வாசிக கைங்கர்யரூபமாய் அருளிச்செய்ததும் ஸர்வாலங்கார பூர்ணமுமான ஆயிரத்தினுள் இவைபத்தையும் குறையறக் கற்பவர்கள் ஐச்வர்ய கைவல்யங்களிலே ஆழங்காற்பட்டுவரும் கிலேசம் நீங்கி பகவத்கைங்கர்ய மஹாரஸத்தைப் பெறுவரென்றதாயிற்று.

**அஃதே** என்றது—இப்பதிகத்தின் முதற்பாட்டிலும் இப்பாட்டிலும் ப்ரஸ்துதமான திருவடியைக் குறிக்கும்

**செய்கோலத்தாயிரம்** என்றவிடத்து "உதாத்தாதி பதக்ரம ஜடாவாக்ய பஞ்சாதி பாதவ்ருத்த ப்ரச்நகாண்ட அஷ்டகாத்யாயாப்சபர்வாதி அலங்காரங்கள்போலே எழுத்தசைசீர்ப்பந்தமடி தொடை நிரைநிரையோசை தளையினம்யாப்புப் பாத்துறை பண்ணிசை தாளம் பத்துநாலுபிரம் முதலான **செய்கோல** மிதுக்குமுண்டு" என்ற ஆசார்யஹ்ருதய திவ்யஸூக்தியும் அதன் வியாக்கியானமும் அநுஸந்தேயம்.

**உய்யப்பாலரே** என்ற பாடத்திலும் 'உய்யற்பாலரே' என்ற பாடம் தகும் (11)

நாலாம்பத்து—முதல் திருவாய்மொழி உரை முற்றிற்று.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.



ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# நாலாம்பத்து — இரண்டாந் திருவாய்மொழி — பாலனாய்

**உரையவதாரிகை:** கீழ் மூன்றாம்பத்தில் * முடியானே யென்னுந் திருவாய்மொழியில் ஆழ்வார்க்கு உண்டான அவஸ்தை ப்ராஸங்கிகமான மூன்று திருவாய்மொழிகளாலே ஒருவாறு தலை மடிந்து கிடந்தது. இப்போது அது தலையெடுத்து நிற்கின்றது.

ஸ்ரீ விபீஷணாழ்வான் ராவணனுக்குச் சொன்னஹிதம் அவனுக்கு உபயோகப்படாமல் தனக்குப் பெருமாளைப் பற்றுகைக்கு உறுப்பானாப்போலவும், ஸ்ரீ ப்ரஹ்லாதாழ்வான் இரணியனுக்குச் சொன்னஹிதம் அவனது நெஞ்சிற்படாதே தனக்கு பகவத் பக்தி மிகுதற்கு உறுப்பானாப்போலவும் ஆழ்வார் செய்தருளும் பரோபதேசங்கள் பிறர்க்கு உறுப்பன்றிக்கே தமக்கு எம்பெருமான் பக்கலிலே அபிநிவேசம் மீதூர்ந்து செல்வதற்கே ஹேதுவாயிற்று. ஆகவே என்றைக்கோ கழிந்துபோன எம்பெருமான்படிகளை அக்காலத்திற்போலவே இன்று அநுபவிக்கப்பெறவேணும் என்கிற விடாய் பிறந்தது: ஆசைப்பட்டபடியே கிடையாமையாலே, எம்பெருமானோடு கலந்து பிரிந்தாளொரு பிராட்டியின் நிலைமையை யடைந்து தான் மோஹித்துக்கிடக்க, அவள்படியை அநுஸந்தித்த திருத்தாயார் பெண்பிள்ளையின் நிலைமையைப் பேசுகிற முகத்தாலே ஸ்வதசையை வெளியிடுவதாய்ச் செல்லுகிறது இத்திருவாய்மொழி.

பீமஸேநன் ஒருகால் திருவடியைக் கண்டபோது "ஸாகரம் தார்த்துமுத்யுக்தம் ரூபமப்ரதிமம் மஹத், த்ரஷ்டுமிச்சாமி தே வீர." என்றான்; (அதாவது) 'நீ முன்பு கடல் கடந்த வடிவை நான் இப்போது காண விரும்புகின்றேன்; காட்டவேணும்' என்றான். அப்படிக் காட்டவல்ல சக்தி மாருதிக்கு உண்டு என்று அறிந்தபடியாலே அங்ஙனம் அபேக்ஷித்தான்; அப்படியே ஆழ்வாரும் எம்பெருமானுடைய சக்தியை அறிந்தவராதலாலும் தம் அவாவின் மிகுதியாலும் என்றைக்கோ கடந்துபோனவற்றையும் இன்று காணப்பெற விரும்புவது பொருந்தியதே யென்ப. .... .... .... (*)

> பாலனாய் ஏழுலகுண்டுபரிவின்றி *
> ஆலிலை அன்னவசஞ்செய்யுமண்ணலார் *
> தாளிணைமேலணி தண்ணந்துழாயென்றே
> மாலுமால் * வல்வினையேன்மடவல்லியே. (1)

| | | | |
|---|---|---|---|
| பாலன் ஆய் | சிறு குழவியாகி | அணி | சாத்தப்பெற்ற |
| பரிவு இன்றி | அநாயாஸமாக | தண் அம் | குளிர்ந்தழகிய |
| ஏழ் உலகு உண்டு | ஏழுலகங்களையும் திருவயிற்றிலே வைத்து | துழாய் என்றே | திருத்துழாய்மாலை யென்றே வாய் வெருவிக்கொண்டு |
| ஆல் இலை | ஆலந்தளிரிலே | வல் வினையேன் மட வல்லி | வலிய பாபத்தைப் பண்ணின என்னுடைய இளங்கொடி போன்ற மகள் |
| அன்னவசம் செய்யும் | நித்திரை செய்தருளின | மாலும் | வ்யாமோஹிக்கின்றாள்; |
| அண்ணலார் | ஸ்வாமியினுடைய | ஆல் | அந்தோ!. |
| தாள் இணை மேல் | உபய பாதங்களின்மீது | | |

* * * பண்டு ஆலிலையில் பள்ளிகொண்ட எம்பெருமானுடைய திருவடிகளிலே சாத்தின திருத்துழாயை இப்போது பெறவேணுமென்று என் மகள் [பராங்குசநாயகி] ஆசைப்படுகின்றாளென்று திருத்தாயார் கூறுகின்றாள். இவ்வுலகமெல்லாம் பிரளய வெள்ளத்தில் அழுந்தி அழியப்புகுங்கால் எம்பெருமான் இவற்றையெல்லாம் தனது திருவயிற்றிலே வைத்து ஒரு சிறிய ஆலந்தளிரிலே கண்வளர்ந்ததாக நூற்கொள்கை. அது என்றைக்கோ நடந்த விஷயம். அப்போது அந்த வடதளசாயிப் பெருமானுடைய தாளிணைமேலணிந்த தண்ணந்துழாய்மாலையை இப்போது என் மகள் அபேக்ஷிக்கின்றாளே யென்கிறாள்

**பாலனாய்** என்ற சொல்லாற்றலால் நம்பிள்ளை அருளிச் செய்வதாவது—"பருவம்நிரம்பின பின்பு லோகத்தை யெடுத்து வயிற்றிலே வைத்து ஆலிலையிலே சாய்ந்தானாகில் என் மகள் இப்பாடுபடாள் கிடீர்" என்பதாக. வயது சென்றவனாயிருந்து இவ்வருந்தொழில் செய்தால் அவ்வளவாக ஈடுபடவேண்டியிராது; பச்சைப்பசுங் குழந்தையாயிருந்து கொண்டு செய்த செயலாகையாலே ஈடுபாடு மிக்கது போலும்.

"**பாலனா யேழுலகுண்டு**" என்ற சொற் சேர்க்கையில் ஒரு பொருளின்பம் காட்டுகிறார் நம்பிள்ளை; அதாவது—சிறு குழந்தைகளின் கையிலே எது கிடைத்தாலும் சடக்கென எடுத்து வாயிலே போட்டுக் கொள்வது இயல்வாதலால் ஆலிலைப் பாலகனும் ஏழுலகுண்டது புத்திபூர்வகமாகவன்று; பிள்ளைத்தனத்திற்கு ஏற்ப 'இது ஸாத்மிக்கும், இது ஸாத்மியாது' என்று அறியாதே உலகங்களை வாயிலிட்டுக்கொள்ள, ரக்ஷகனுடைய வியாபாரமாகையாலே அது ரக்ஷணமாய் முடிந்ததாம்.

**பரிவு இன்றி** = பரிவாவது வருத்தம்; சிறிதும் ஆயாஸமில்லாமல் மிக எளிதாகச் செய்ததைச் சொன்னபடி.

**அன்னவசம் செய்யும்** = வயிற்றினுள் அன்னம் சென்றவாறே பரவசமாகக் கண்ணுறங்கிப்போவது உலகவியற்கையாதலால் நித்திரைக்கு **அன்னவசம்** என்று பெயரிடப்படுகின்றது போலும். எம்பெருமானும் ஏழுலகங்களையுண்டதனால் உடனே நித்திரையுண்டாகத் தட்டில்லையே.

இவ்விடத்தில் ஈட்டு ஸ்ரீஸூக்தி காண்மின்;— "[**அன்னவசம் செய்யும்**] தன் வசமாகவன்றிக்கே * **அஹமந்நம்** * என்கிற அன்னத்துக்கு வசமாக." என்பதாம். முக்தி தசையில் **அஹமந்நம்** என்று சொல்லுகிறவர்கள் சேதநர்கள்; அவர்களெல்லாரும் பிரளய காலத்தில் திருவயிற்றினுள்ளடங்கி மெய்யாகவே அன்னமாக ஆய்விட்டபடியை அழகாக அருளிச் செய்தபடி.

அண்ணலார் தாளிணைமேலணி தண்ணந்துழாயென்றே = "தோளிணை மேலும் நன்மார்பின் மேலும் சுடர்முடி மேலும் தாளிணை மேலும் புனைந்த தண்ணந்துழாயுடையம்மான்" என்கிறபடியே திருமுடி திருத்தோள் திருமார்பு முதலிய இடங்களிலும் திருத்துழாய்மாலை அணிவது உண்டாகிலும் அடியே பிடித்து அடியை விடாதவிவளுக்குத் தாளிணைமேலணி தண்ணந்துழாயொழிய வேறொன்றிலும் நெஞ்சு செல்லாதாகையாலே அதனையே வாய் வெருவுகிறபடி.

**தண்ணந்துழாயென்றே**= "பாலனாய் ஏழுலகுண்டதும் ஆலிலை யன்னவசஞ் செய்ததும் எப்போதோ கழிந்ததாயிற்றே! அப்போதணிந்த திருத்துழாய்மாலை இப்போது கிடைக்க வழியில்லையே!" என்று எவ்வளவு சொன்னாலும் கேளாமல் மீண்டும் மீண்டும் அதனையே வாய்வெருவுகின்றாளென்றபடி.

**என்றேமாலுமால்**= திருத்துழாய் திருத்துழாயென்று வாய் வெருவுவதோடு நிற்கவில்லையே! உள்ளமும் குழையாநின்றதே! என்கிறாள். இங்கே ஈட்டு ஸ்ரீஸூக்தி காண்மின்;—"மணிப்ரபையிலே அக்நிபுத்தி பிறந்தால் அது பின்னைச் சுடவும்வேணுமோ!" என்பதாம். உலகத்தில் மணி யொளியிலே சிலர்க்கு நெருப்பு என்கிற ப்ரமம் உண்டாகலாம்; இங்ஙனே ப்ரமம் உண்டானதற்காக அவ்வஸ்துவானது அக்நியின் கார்யமான சுடுகையைப் பண்ணமாட்டாது; சுடுமாகில் ஆச்சரியப்படவேண்டியதேயாகும். அதுபோல இங்குங் காண்க: * ஆலிலையன்ன வசஞ்செய்யு மண்ணலாருடைய தாளிணைமேலணிதண்ணந்துழாய்மாலை யென்பது இப்போது இல்லாத வஸ்துவே: அதனை வாயாற் சொல்வது ப்ரமத்தின் காரியமாக இருக்கட்டும்; '**மாலுமால்**' என்னும்படி வ்யாமோஹமும் உண்டாகிறதே! என்ன ஆச்சரியமிது; என்றபடி. .... .... .... (1)

வல்லிசேர்நுண்ணிடை ஆய்ச்சியர்தம்மொடும் *
கொல்லைமைசெய்து குரவைபிணைந்தவர் *
நல்லடிமேலணி நாறுதுழாயென்றே
சொல்லுமால் * சூழ்வினையாட்டியேன்பாவையே (2)

| | | | |
|---|---|---|---|
| சூழ் வினை யாட்டியேன் | மிகுந்த தீவினையை யுடையேனாகிய என்னுடைய | குரவை பிணைந்தவர் | ராஸக்ரீடை செய்த கண்ணபிரானுடைய |
| பாவை | பதுமை போன்ற பெண்ணானவள் | நல் அடி மேல் அணி | அழகிய திருவடிகளின் மீது சாத்தின |
| வல்லி சேர் | கொடிபோன்ற | நாறு துழாய் என்றே | நறுமணம் மிக்க திருத்துழாயென்றே |
| நுண் | நுட்பமான | சொல்லும் | சொல்லுகின்றாள்; |
| இடை | இடுப்பையுடைய | ஆல் | அந்தோ!. |
| ஆய்ச்சியர் தம்மொடும் | கோபிமார்களோடுகூடி | | |
| கொல்லைமை செய்து | வரம்புகடந்த செயல்களைச் செய்து | | |

* * * கண்ணபிரான் ஆய்ச்சிகளோடு கூடிக் குரவை கோத்தகாலத்துத் திருவடியிலணிந்துகொண்டிருந்த திருத்துழாய் மாலையை என்மகள் வாய் வெருவுகின்றாளென்கிறாள். **குரவை** யென்பது ராஸக்ரீடை யெனப்படும். ஒவ்வொரு ஆய்ச்சியின்பக்கத்திலும் ஒவ்வொரு கண்ணனாகப் பல திருவுருவங்கொண்டு கைகோத்தாடினது வடமொழியில் ராஸக்ரீடை யென்றும், தென்மொழியில் குரவைக்கூத்தென்றும் வழங்கப்பெறும்.

**வல்லிசேர்நுண்ணிடையாய்ச்சியர்**—'வல்லிசேர்' என்பதை இடைக்கு விசேஷணமாக்குதலுமுண்டு; ஆய்ச்சியர்க்கே விசேஷணமாக்குதலுமுண்டு; முந்தினபக்ஷத்தில், கொடிபோன்ற இடையை யுடையவர்களென்னுதல்; பிந்தினபக்ஷத்தில் கொடிபோன்றவர்களாயும் நுட்பமான இடையை யுடையாருமிருக்கின்ற ஆய்ச்சிகளென்னுதல்.

**கோல்லைமை =** வரம்புகடந்த செயல்; 'கோல்லை' என்னும் சொல்லின்மீது மைவிகுதி ஏறிக்கிடக்கிறது. "கொல்லையரக்கியை மூக்கரிந்திட்ட" என்ற ஆண்டாள் பிரயோகமும் "கொல்லை யென்பர் கொலோ" என்ற நம்மாழ்வார் பிரயோகமும் காணத்தக்கன. கூரத்தாழ்வான் அதிமாநுஷஸ்தவத்தில் **"தூர்த்தாயிதம் தவஹி யத் கில ராஸகோஷ்ட்யாம்"** என்றதில் **தூர்த்தாயிதம்** என்றதுவே கொல்லைமையாகும்.

**பாவை =** பதுமைக்குப் பெயர்; இது, உவமையாகுபெயராய்ப் பெண்பிள்ளையையுணர்த்துப். .... .... .... (2)

பாவியல்வேத நன்மாலைபலகொண்டு *
தேவர்கள்மாமுனிவர் இறைஞ்சநின்ற *
சேவடிமேலணி செம்பொன்துழாயென்றே
கூவுமால் * கோள்வினையாட்டியேன்கோதையே, (3)

| | | | |
|---|---|---|---|
| பா இயல் வேதம் | சந்தஸ்ஸுக்கள் பொருந்திய வேதங்களாகிற | அணி | அணிந்த |
| நல் பல மாலை கொண்டு | திவ்யமான பல மாலைகளைக் கொண்டு | செம் பொன் துழாய் என்றே | செவ்வியதாய் விரும்பத்தக்கதான திருத்துழா யென்றே |
| தேவர்கள் | தேவர்களும் | கூவும் | கூப்பிடா நின்றாள் (யாரென்னில்) |
| மா முனிவர் | மஹா முனிகளும் | கோள் வினை யாட்டியேன் | வலிய பாபத்தைப் பண்ணினவளான என்னுடைய |
| இறைஞ்ச நின்ற | ஆராதிக்கும்படி (உலகங்களை யளந்து) நின்ற | கோதை | சிறந்த கூந்தலையுடையளான பெண்பிள்ளை. |
| சே அடி மேல் | திருவடிகளின் மேலே | | |

* * * உலகளந்தருளின எம்பெருமான் திருவடிகளில் திருத்துழாயை என் மகள் ஆசைப்படாநின்றாளென்கிறாள். மூலத்தில் "தேவர்கள் மாமுனிவரிறைஞ்சநின்ற சேவடி" என்றிவ்வளவேயுள்ளது: "உலகளந்த திருவடி" என்று வ்யக்தமாக இல்லை; "பாற்கடல் சேர்ந்த பரமனுடைய அழகிய திருவடிகளிலே அணிந்த செம்பொற்றுழா யென்று இவள் கூப்பிடா நிற்குமென்கிறாள்" என்றருளிச்செய்தார் ஆறாயிரப்படியில் பிள்ளான். மற்ற வியாக்கியானங்களில்—"உலகளந்தருளினவன் திருவடிகளில் திருத்துழாயை ஆசைப்படாநின்றாளென்கிறாள்" என்றுள்ளது.

**பா இயல் வேதம் = பா** என்று சந்தஸ்ஸுக்களைச் சொல்லுகிறது. காயத்ரீ, த்ரிஷ்டுப், அநுஷ்டுப், ஜகதீ என்றிப்படி பலவகைப்பட்ட சந்தஸ்ஸுக்கள் ப்ரஸித்தங்கள். ஒருபாதம் இத்தனை அக்ஷரங்கள்கொண்டிருந்தால் இன்ன சந்தஸ்ஸு என்று நியதியும் கூறப்பட்டுள்ளது. அப்படிப்பட்ட சந்தஸ்ஸுக்களிலே வர்த்திப்பதான வேதஸூக்தங்களையும் திவ்யமான மாலைகளையுங்கொண்டு தேவர்களும் ஸநகஸநந்தநாதி மஹர்ஷிகளும் ஆராதிக்கும்படி லோகத்தை யளந்துநின்ற செவ்விய திருவடிகளின்மேலே சாத்தப்பட்ட திருத்துழாயையே சொல்லிக் கூப்பிடாநின்றாள்; அதாவது, 'அந்தத் திருத்துழாய் வேணும், அந்தத் திருத்துழாய் வேணும்' என்று அதுவே வாய்வெருவுதலாக இராநின்றாள், அந்த வஸ்து இப்போது கிடைக்கமாட்டாதது என்பதை அந்தோ! அறிகின்றிலள்—என்றாளாயிற்று.

**கோள்வினையாட்டியேன்** என்று சொல்லிக்கொள்ள வேண்டும்படி இங்கு என்ன விஷயமுள்ளது? தன்மகள் இங்ஙனே வாய் வெருவுவது புண்ய பலன் என்று நினைக்கத் தட்டில்லையே; "ப்ரபலமான பாபத்தைப்பண்ணின என்னுடைய மகள்" என்று சொல்லிக் கொள்வானேன்? என்று சங்கை பிறக்கும்; எதிர்மறையிலக்கணையால் இதற்குப் பொருள் கொள்ளவேணும். பகவத்விஷயத்திலே இவ்வண்ணம் ஈடுபட்ட பெண்பிள்ளையைப் பெற்ற என்னுடைய பாக்கியமே பாக்கியம் என்று சொல்லிக்கொள்வதே தாற்பரியமாகும். அன்றியே, தாய் என்பது உபாயாத்யவஸாயஸ்தானமாதலால் மகளுடைய பதற்றத்தைக் கண்டு வருந்தப்பட்டுச் சொல்லுகிற பாசுரமாகவே தாய் பாசுரம் அமைகின்றபடியால் "வல்வினையேன்" என்றும் "கோள்வினையாட்டியேன்" என்றும் தன்னைச் சொல்லிக் கொள்வதும் பொருந்தும் என்னலாம்.

**கோள்வினை** — முடித்தல்லது விடாத பாபம். அநுபவித்தே அறவேண்டிய பாபம் என்னவுமாம்.

**கோதை** என்று மயிர்முடிக்கும் பூமாலைக்கும் பெயர். சிறந்த மயிர் முடியை யுடையவள் (அல்லது) அழகிய பூமாலையை யணிந்தவள் என்கிற பொருளில் இங்குக் **கோதை** என்ற சொல் பிரயோகிக்கப்பட்டுள்ளது; ஆகு பெயர்.

இங்கே ஈட்டு ஸ்ரீஸூக்திகள் இன்சுவை மிக்கவை;—"தன் மாலையையும் மயிர் முடியையும் கண்டார் படுமத்தைத் தான்படுவதே!. இம்மாலையையுடைய இவள் வேறொரு மாலையை ஆசைப்படுவதே!. *மார்வத்து மாலையானவிவள் வேறொரு மாலையை ஆசைப் படுவதே!. மார்வத்து மாலைக்கு மால் அவன்; அம்மாலுக்கு மால் இவள்." .... (3)

கோதிலவண்புகழ் கொண்டுசமயிகள் *
பேதங்கள்சொல்லிப் பிதற்றும்பிரான்பரன் *
பாதங்கள்மேலணி பைம்பொன்துழாயென்றே
ஓதுமால் * ஊழ்வினையேன் தடந்தோளியே,. (4)

| | | | |
|---|---|---|---|
| ஊழ் வினையேன் | பெரும் பாவத்தை யுடையேனாகிய எனது | பிதற்றும் பிரான் | பிதற்றும்படியாகவுள்ள ஸ்வாமியான |
| தட தோளி | பெருந் தோள்களை யுடையளான பெண் பிள்ளை | பரன் | பரம புருஷனுடைய |
| சமயிகள் | சமயவாதிகள் | பாதங்கள்மேல் | திருவடிகளின்மேலே |
| கோது இல | குற்றமற்ற | அணி | (நித்ய முக்தர்கள்) சாத்தின |
| வண் புகழ் கொண்டு | விலக்ஷணமான குணங்களைக் கொண்டு | பைம் பொன் | பசும்பொன்போல் விரும்பத்தக்க |
| பேதங்கள் சொல்லி | தாம்தாம் பற்றிய குணங்களின் ஏற்றங்களைச் சொல்லி | துழாய் என்றே ஓதும் | திருத்துழாயென்றே சொல்லுகின்றாள். (ஆல்— அந்தோ) |

* * * திருநாட்டி லெழுந்தருளி யிருக்கிற பராத்பரனுடைய திருவடிகளில் திருத்துழாயை என்மகள் ஆசைப்படாநின்றாளென்கிறாள். முன்னிரண்டடிகள் பரமபத நாதனை வருணிப்பன. எம்பெருமானது திருக்குணங்களிலே புகுந்துவிட்டால் ஒவ்வொரு

குணத்தினுடைய அதிசயமும் எல்லை காண வொண்ணாததாயிருக்கும்; பரத்வத்திற்கு ஈடான குணங்களும் ஸௌலப்யத்திற்கு ஈடான குணங்களுமாக வகுக்கப்பட்டுள்ள குணங்களிலே ஒருவர் ஒரு குணத்தை அநுபவித்து அதன் அருமைபெருமைகளை யெடுத்துரைத்துக் கொண்டாட, இங்ஙனே வாதவிவாத கலஹங்கள் ஏற்பட்டுவிடும்; இத்தகைய குணாநுபவ விவாதமேயாய்ச் செல்லுமாம் பரமபதத்தில். "பிணங்கியமரர் பிதற்றுங் குணங்கெழு கொள்கையினனே" என்று (1-6-4) கீழேயுமருளிச் செய்யப்பட்டது.

**சமயிகள்** என்றது—ஒவ்வொரு குணத்தின் அநுபவத்திலே ஊற்றமுற்று அதைப் பெருமைப்படுத்திச் சொல்வதையே தமது மதமாகக் கொண்டவர்கள் என்றபடி. உபநிஷத்துக்களில், தஹரவித்யை உபகோஸலவித்யை சாண்டில்யவித்யை அக்ஷிவித்யை வைச்வாநரவித்யை என்றிப்படி அநேக வித்யைகள் கூறப்பட்டுள்ளன; அவற்றிலே ஊன்றினவர்களைச் சொல்லுகிறதாகவும் அருளிச் செய்வர்கள்.

**கோது இல வண்புகழ்** = ஒரு குணத்தை யநுபவிக்கும்போது இன்னொரு குணத்திலே நெஞ்சு செல்லுமாகில் அது குணத்திற்குக் கோதாகும்; அஃதில்லாமை சொன்னமுகத்தால் ஒவ்வொரு குணமும் தனித்தனியே பரம போக்யமாக அநுபவிக்கலாம்படி ஸாரஸ்யம் மிக்கிருக்கின்றமை சொன்னபடி.

**பேதங்கள்சொல்லி** = பேதமாவது விசேஷம்; தாங்கள் அநுபவிக்கிற குணங்களுக்கு ஏற்றங்களைச் சொல்லி என்றபடி. சிலகுணத்தை யநுபவித்து 'இதுவும் ஒரு குணமே! இதுபோலேயோ வீரகுணம்' என்பர்களாம். ஆக இப்படி அநுபவிக்கலாம்படி மிடைந்த திருக்குணங்களை யுடையனான ஸ்ரீவைகுண்டநாதனுடைய திருவடிகளில் நித்யஸூரிகளும் முக்தர்களும் சாத்தின திருத்துழாயைப் பற்றியே இவள் பலகாலும் அலற்றுகின்றாளென்றதாயிற்று. .... .... (4)

தோளிசேர்பின்னைபொருட்டு எருதேழ்தழீஇக்
கோளியார் * கோவலனார் குடக்கூத்தனார் *
தாளிணைமேலணி தண்ணந்துழாயென்றே
நாளுநாள் * நைகின்றதால் என்றன்மாதரே. (5)

| | | | |
|---|---|---|---|
| என் தன் மாதர் | எனது பெண்பிள்ளை | கோவலனார் | கோபால க்ருஷ்ணனாய் அவதரித்தவரும் |
| தோளி | அழகிய தோள்களை யுடையவளும் | குடம் கூத்தனார் | குடக்கூத்தாடினவருமான கண்ணபிரானுடைய |
| சேர் | அநுரூபையுமான | தாள் இணைமேல் அணி | உபய பாதங்களின்மேலே சாத்தின |
| பின்னை பொருட்டு | நப்பின்னைப் பிராட்டிக்காக | தண் அம் துழாய் என்றே | குளிர்ந்தழகிய திருத்துழா யென்றே சொல்லி |
| ஏழ் எருது | ஏழு எருதுகளையும் | நாளும் நாள் நைகின்றது | நாள்தோறும் சிதிலையாகின்றாள். |
| தழீஇம் கோளியார் | தழுவிக்கொண்டவரும் [அதாவது-நிரஸித்தவரும்] | | |

* * * நப்பின்னைப் பிராட்டிக்காக எருதேழடர்த்த கண்ணபிரானுடைய திருவடிகளில் சாத்தின திருத்துழாய் விஷயமாகவே என் மகள் நைகின்றாளென்கிறாள்.

**தோளி** என்பதும் **சேர்** என்பதும் பின்னைக்குத் தனித்தனி விசேஷணங்கள். அழகிய தோளையுடையவளும் தனக்குத்தகுந்திருப்பவளுமான நப்பின்னை யென்றபடி.

**"தழீஇக்கோளியார்"** என்றவிது ஒரு முழுச் சொல்லு: தழுவிக்கொண்டவர் என்று பொருள். இதனை இரண்டு சொல்லாக மயங்கி 'எருதேழ்தழீ' என்று நிறுத்தி, 'கோளியார் கோவலனார்' என்று பாடஞ்செய்து வருவது பாங்கன்று.

'எருதுகளை முடித்தவர்' என்னவேண்டுமிடத்துத் தழுவினவர் என்றது மங்கல வழக்கு.

இப்படிப்பட்ட கண்ணபிரானுடைய திருவடிகளிற் சாத்தின திருத்துழாயை யாயிற்று இவள் ஆசைப்பட்டது.

மாதர்—அழகு; அழகுடையவள். .... .... (5)

மாதர்மாமண்மடந்தைபொருட்டு ஏனமாய் *
ஆதியங்காலத்து அகலிடம்கீண்டவர் *
பாதங்கள்மேலணி பைம்பொன்துழாயென்றே *
ஓதுமாலெய்தினள் என்தன்மடந்தையே. (6)

| | | | |
|---|---|---|---|
| மா மாதர் | சிறந்த அழகுடைய | பாதங்கள்மேல் | திருவடிகளின்மீது |
| மண் மடந்தை பொருட்டு | பூமிப் பிராட்டிக்காக | அணி | சாத்தின |
| ஆதி அம் காலத்து | முன்னொரு காலத்தில் | பைம் பொன் துழாய் என்றே | மிகவழகிய திருத்துழா யென்றே |
| ஏனம் ஆய் | வராஹ மூர்த்தியாய் | ஓதும் மால் | ஓதும்படியான வியாமோஹத்தை |
| அகல் இடம் | விபுலமான பூமண்டலத்தை | என் தன் மடந்தை | எனது பெண்பிள்ளை |
| கீண்டவர் | பிளந்தெடுத்துக் கொணர்ந்த பெருமானுடைய | எய்தினள் | அடைந்தாள். |

* * * ஸ்ரீ வராஹ மூர்த்தியாய் ப்ரளயார்ணவத்தில் பூமியை யெடுத்தருளின போது திருவடிகளிலணிந்திருந்த திருத்துழாயைப் பெறவேணுமென்று ஆசைப்படுகின்றாளென்பகளென்கிறாள்.

"ஆதிகாலத்து" என்னுமல் "ஆதியங்காலத்து" என்றதற்கு நம்பிள்ளை தாற்பரியமருளிச் செய்கிறார்—"ரக்ஷகனானவன் தன் விபூதிரக்ஷணத்துக்காகக் கொண்ட கோலத்தை அநுபவிக்கிற காலமாகையாலே அழகிய காலமென்கிறார்" என்று.

"அகலிடங்கீண்டவர் பாதங்கள் மேலணி பைம்பொற்றுழாய்" என்கிறாரே; அகலிடங்கீண்டபோது திருவடிகளில் திருத்துழாய் அணியப் பெற்றதுண்டோவென்னில், உண்டு. "உத்திஷ்டதஸ் தஸ்ய ஜலார்த்ரகுக்ஷே: மஹாவராஹஸ்ய மஹீம் ப்ரக்ருஹ்ய, விதூந்வதோ வேதமயம் சரீரம் ரோமாந்தரஸ்தா முநய: ஸ்துவந்தி." என்று ஸ்ரீவிஷ்ணு புராணத்தில் (1-4-29) கூறப்பட்டிருத்தலால் அப்போதும் ஸநகாதி மஹர்ஷிகள் இட்ட திருத்துழாய் உண்டு என்றுணர்க. மேற்காட்டிய ச்லோகத்தில் **"ஸ்துவந்தி"** என்று ஸ்துதியைச் சொல்லியிருப்பது புஷ்பாஞ்ஜலி ஸமர்ப்பணத்திற்கும் உபலக்ஷணமாகும்.

இப்பதிகத்தில் பெரும்பாலும் பாசுரந்தோறும் "மாலுமால்" "கூவுமால்" "ஓதுமால்" "மடங்குமால்" "நம்புமால்" என்றிங்ஙனே வருகின்றது; இச்சொற்றொடர்களில் **ஆல்** என்பது அசையாகும். இப்பாசுரத்தில் மாத்திரம் **ஓதுமால்** என்ற சொற்றொடரில் **ஆல்** என்று இல்லை; '**ஓதும் மால்**' என்று பிரியும்; ஓதும்படியான பைத்தியத்தை யடைந்தாளென்றபடி.

**மடந்தை**— மகளிர் பருவம் ஏழனுள் பதினான்குமுதல் பத்தொன்பது வயது வரையுள்ள பருவத்துப் பெண்; இச்சொல் பெண் பொதுப்பெயராகவே பெரும்பாலும் வழங்கும். .... .... .... (6)

மடந்தையை வண்கமலத்திருமாதினை *
தடங்கொள்தார்மார்பினில் வைத்தவர்தாளின்மேல் *
வடங்கொள்பூந்தண்ணந்துழாய்மலர்க்கே இவள்
மடங்குமால் * வாணுதலீர்! என்மடக்கொம்பே. (7)

| | |
|---|---|
| வாள் நுதலீர் | ஒளி பொருந்திய நெற்றியையுடைய பெண்காள்! |
| என் மட கொம்பு இவள் | இளங்கொடி போன்ற எனது இப்பெண்பிள்ளை |
| மடந்தையை | இளமைப் பருவமுள்ள |
| வண் கமலம் திரு மாதினை | அழகிய தாமரைப்பூவிற் பிறந்த பிராட்டியை |
| தடம் கொள் தார் மார்பினில் | விசாலமானதும் மாலை யணிந்ததுமான திரு மார்பிலே |
| வைத்தவர் | (பாற்கடல் கடைந்த காலத்து) ஏற்றுக்கொண்ட பெருமானுடைய |
| தாளின் மேல் | திருவடிகளின்மீது (சாத்தின) |
| வடம் கொள் | செறியத் தொடுக்கப்பட்டதும் |
| பூ | அழகியதும் |
| தண் அம் | குளிர்ச்சி பொருந்தியதுமான |
| துழாய் மலர்க்கே | திருத்துழாயின் பொருட்டே |
| மடங்கும் | சுருண்டு விழுகின்றாள். |

* * * அமுதமளிக்கக் கடல்கடைந்த காலத்துப் பெரிய பிராட்டியாரைத் திருமார்பிலே வைத்தருளின எம்பெருமானுடைய திருவடிகளில் திருத்துழாயை என்மகள் ஆசைப்படுகின்றாளென்கிறாள்.

மூலத்தில், அம்ருதமதன காலமென்பதற்கு வாசகமான சொல் இல்லையாகிலும் "திருமாதினை மார்பினில் வைத்தவர்" என்கிற சொல்லமைப்பை நோக்கி "**அம்ருதமதநதசையிலே**" என்று பூருவாசாரியர்கள் உரைத்தருளினர். பிராட்டியைத் திருமார்பிலே கொண்டிருப்பவன் என்னாமல் '**வைத்தவர்**' என்கையாலும், ஒவ்வொரு பாசுரத்திலும் ஒவ்வொரு அவதாரம் ப்ரஸ்துதமாகிவருகிற அடைவுக்குச் சேரவேண்டுகையாலும் இங்ஙனமுரைத்தல் மிகப்பொருந்தும்.

கொம்புபோல்சீதைபொருட்டு இலங்கைநகர் *
அம்பெரியுய்த்தவர் தாளிணைமேலணி *
வம்பவிழ்தண்ணந்துழாய்மலர்க்கே இவள்
நம்புமால் * நானிதற்கென்செய்கேன்? நங்கைமீர்! (8)

| | | | |
|---|---|---|---|
| நங்கைமீர் | பெண்காள்! | அணி | சாத்தின |
| கொம்பு போல் சீதை பொருட்டு | பூங்கொடி போன்ற ஸீதாபிராட்டியின் பொருட்டு | வம்பு அவிழ் தண் அம் துழாய் மலர்க்கே | பரிமளப்ரசுரமாய்க் குளிர்ந்தழகிய திருத்துழாயின் மீதே |
| இலங்கை நகர் | இலங்காபுரியில் | இவள் நம்பும் | இவள் ஆசைப்படா நின்றாள்; |
| அம்பு எரி | அம்புகளில் நின்றும் கிளம்பும் அக்னியை | இதற்கு நான் என் செய்கேன் | இதற்கு நான் என்ன பரிஹாரம் செய்வது. |
| உய்த்தவர் | செலுத்தின இராமபிரானுடைய | | |
| தாள் இணைமேல் | உபயபாதங்களின் மீது | | |

* * * ஸீதாபிராட்டிக்காக இலங்கை பாழாளாகப் படைபொருத பெருமானது திருவடிகளில் திருத்துழாயை என்மகள் விரும்பா நின்றாளென்கிறாள். **கொம்பு போல்சீதைபொருட்டு=** ஸ்த்ரீகளைக் **கொம்பனார்** என்று கூறுவது தமிழர் மரபு; வஞ்சிக்கொம்புபோல் மிக்க மென்மைத்தன்மை பொருந்தியிருக்கும்படியைக் கூறியவாறு. **கொம்புபோல்** என்பதற்கு மற்றொரு பொருளும் நம்பிள்ளை அருளிச் செய்வதுண்டு; "'அநந்யா' என்கிறபடியே ஏகவஸ்துவில் ஏகதேசமென்னுதல்" என்பது ஈட்டு ஸ்ரீஸூக்தி. கொம்பானது வ்ருக்ஷத்தின் ஏகதேசமாகவுள்ளது; "**வாஸுதேவதரு**" என்றும், "எனக்கே தன்னைத்தந்த கற்பகம்" என்றும் வ்ருக்ஷமாகச் சொல்லப்படுகிறபடியால் அதில் ஏகதேசமான கொம்பாகப் பிராட்டியைச் சொல்லுதல் பொருந்தும்.

சீதை—ஸீதா என்ற வடசொல் திரிபு. [ஸீதா லாங்கலபத்ததி:] என்ற நிகண்டின்படி உழுபடைக்கு ஸீதா என்று பெயராதலால் ஜநகசக்ரவர்த்தியின் யாகசாலை நிலத்தில் உழுபடை பட்டவிடத்தில் நின்றும் பிராட்டி தோன்றின காரணம்பற்றி அவளுக்கு இலக்கணையினால் ஸீதையென்று பெயராயிற்று.

**நம்பும்**— விரும்பும்; "நம்பும் மேவும் நசையாகும்மே." .... (8)

நங்கைமீர்! நீரும் ஓர்பெண்பெற்றுநல்கினீர் *
எங்ஙனேசொல்லுகேன்? யான்பெற்றவேழையை *
சங்கென்னும்சக்கரமென்னும் துழாயென்னும் *
இங்ஙனேசொல்லும் இராப்பகலென்செய்கேன்? (9)

| | | | |
|---|---|---|---|
| நங்கைமீர் | மாதர்காள்! | சங்கு என்னும் | சங்கு என்கிறாள்; |
| நீரும் | நீங்களும் | சக்கரம் என்னும் | சக்கரமென்கிறாள்; |
| ஓர் பெண் பெற்று நல்கினீர் | ஒவ்வொரு பெண்ணைப் பெற்று அன்போடு வளர்த்திருக்கின்றீர்கள்; | துழாய் என்னும் | திருத்துழாயென்கிறாள்; |
| யான் பெற்ற | நான் பெற்றிருக்கின்ற | இராப் பகல் | இரவும் பகலும் |
| ஏழையை | இப்பேதையை | இங்ஙனே சொல்லும் | இப்படியே சொல்லுகின்றாள்; |
| எங்ஙனே சொல்லுகேன் | எப்படி யென்று சொல்லுவேன் (ஆகிலும் சொல்லுகிறேன்; | என் செய்கேன் | யாது செய்வேன்?. |

* * * என் மகள் எம்பெருமானுடைய திவ்யாயுதங்களைச் சொல்லுவதாகத் தொடங்கி முற்றமுடியச் சொல்லமாட்டாதே இடையிடையே தளர்ந்து நோவுபடுகின்றாளென்கிறாள். பராங்குச நாயகியின் திருத்தாய் தனது தோழிமார்களை **நங்கைமீர்** என்று விளித்து 'நீங்களும் ஒவ்வொரு பெண்பிள்ளை பெற்று வளர்க்கிறீர்களே., என் பெண்மக

*ளின் தன்மை உங்கள் பெண்களுக்கு உண்டோ?' என்றாள்; 'எங்கள் பெண்பிள்ளைகளிற் காட்டிலும் உன் பெண்பிள்ளைக்கு வாசி என்?' என்று அவர்கள் கேட்க,* **எங்ஙனே சொல்லுகேன்?** *என்கிறாள். இவள்படி பேச்சுக்கு விஷயமாகிலன்றோ நான் சொல்லுவது; பகவத் குணங்களை ஒருபடி பேசினாலும் குணங்களிலே ஆழ்ந்தவர்களின்படி பேச்சுக்கு நிலமன்றே; "ஆஹ்லாதசீதநேத்ராம்பு: புலகீக்ருதகாத்ரவாந், ஸதா பரகுணாவிஷ்டோ த்ரஷ்டவ்யஸ் ஸர்வதேஹிபி:" என்கிறபடியே கண்டிருக்கலாமத்தனை யல்லது பேசமுடியாதன்றோ என்கிறாள்.*

*ஆனாலும் பேசக்கூடியமட்டில் பேசலாகாதோ என்ன; பின்னடிகளால் பேசுகிறாள். சங்கு சக்கரம் திருத்துழாய் என்றிப்படி பகவத் வஸ்துக்களைச் சொல்ல நினைத்த இவள் அவற்றை ஒரு சேர்த்தியாகச் சொல்லமாட்டாமல் 'சங்கு' என்று சொல்லி, அது தான் மலை யெடுத்தாப்போலே யிருக்கையாலே பெருவருத்தத்தோடே நின்று, மீண்டும் ஒரு நாழிகை கழித்து 'சக்கரம்' என்று சொல்லி, அதன் பிறகு ஒரு நாழிகை கழித்து 'துழாய்' என்று சொல்லி ஆக இப்பாடுபடா நின்றாள் என்கிறாள்.* .... (9)

என்செய்கேன்? என்னுடைப்பேதை என்கோமளம் *
என்சொல்லும் என்வசமுமல்லள்நங்கைமீர்! *
மின்செய்பூண்மார்பினன் கண்ணன்கழல்துழாய் *
பொன்செய்பூண்மென்முலைக்கென்று மெலியுமே. (10)

| | | | |
|---|---|---|---|
| நங்கைமீர் | பெண்காள்! | துழாய் | திருத்துழாயை |
| என்னுடை பேதை என் கோமளம் | பேதைத்தனமும் ஸௌகுமாரத் தன்மையும் பொருந்திய என்மகளானவள் | பொன் செய் | பசலை நிறம் பூத்ததும் |
| என் சொல்லும் என் வசமும் அல்லள் | என் சொல்லிலும் நிற்பதில்லை, என் வசத்திலும் நிற்பதில்லை; | பூண் | ஆபரணங்களணிந்ததும். |
| மின் செய் பூண் மார்பினன் | ஒளியைச்செய்கின்ற திருவாபரணமணிந்த திருமார்வையுடையவனை | மெல் | பிரிவாற்றகில்லாததுமான |
| கண்ணன் கழல் | கண்ணபிரானுடைய திருவடிகளிலுள்ள | முலைக்கு என்று | முலையில் அணிந்துகொள்ள வேணுமென்று விரும்பி |
| | | மெலியும் | (அது கிடையாமையாலே) உடம்பு இளைக்கப்பெறுகின்றாளே |
| | | என் செய்கேன் | இதற்கு யான் யாது செய்வேன் |

* * * *கீழ்ப்பாட்டில் 'நங்கைமீர்!' என்று விளிக்கப்பட்ட நங்கைகள் பராங்குச நாயகியின் தாயை நோக்கி 'அம்மா! உன்மகள் நீயிட்ட வழக்கன்றோ; அவளுக்கு ஹிதம் சொல்லலாகாதோ?' என்ன, அவர்களுக்கு விடை கூறுகின்றாள்: அந்தோ! இப்பெண்பிள்ளை எனக்கு விதேயை யன்றிக்கே கண்ணபிரானுடைய ஆபரண சோபையிலே அகப்பட்டு அவனது திருவடிகளில் திருத்துழாய் தன்முலைக்கு அலங்காரமாக வேணுமென்று உடம்பு இளைக்கின்றாளே! யென்கிறாள்.' அந்தோ! இவளுடைய நிலைமையை நோக்குங்கால் இவளை இழக்க நேரும்போல் தோன்றுகின்றதே!' என்ற கருத்துப்பட* **'என்செய்கேன்'** *என்றது. நான் சொல்லும் ஹிதவசனம் கேட்கும் பருவமன்று என்பாள்,* **'என்னுடைப்பேதை'** *என்கிறாள். 'இவளையோ நாம் தண்டிப்பது' என்று இரங்கவேண்டும்படியான ஸௌகுமார்ய முடையவள் என்ற கருத்துப்பட* **'என்கோமளம்'** *என்கிறாள்.*

**என்சொல்லுமல்லள் என்வசமுமல்லள்**— *நான் சொல்லும் ஹிதவசனம் கேட்பது மில்லை, நான் ஹிதமுரைக்க நினைக்கும்படியான நிலைமையிலுமில்லை என்றபடி.*

*ஜ்வலிக்கின்ற கௌஸ்துபாபரணத்தைத் திருமார்பிலே அணிந்துள்ளவனான கண்ணபிரானது திருவடிகளிற்சாத்தின திருத்துழாய்மாலையே தனது முலைக்கு அலங்காரமாக வேணுமென்று ஆசைப்பட்டு அது கிடையாமையாலே பேசுகின்றாள்; இதுவே இவள்படி என்றாளாயிற்று.*

**பொன்செய்பூண்மென்முலைக்கு**= *பொன்மயமான ஆபரணங்கள் பூண்ட முலைக்கு என்கிற பொருளும், விரஹத்தாலே யுண்டான பசலைநிறம் பொருந்திய முலைக்கு என்றும் பொருள்படும்.*

*"மென்முலைக்கு வேணும்" என்று சொல்லத் தொடங்கி வினைமுற்றுக் கூறி முடிக்கமாட்டாதே இடையிலே மெலிந்து நின்றாளென்க.* .... .... (10)

மெலியுநோய்தீர்க்கும் நம்கண்ணன்கழல்கள்மேல் *
மலிபுகழ் வண்குருகூர்ச்சடகோபன்சொல் *
ஒலிபுகழாயிரத்து இப்பத்தும்வல்லவர் *
மலிபுகழ்வானவர்க்காவர் நற்கோவையே. (11)

| | | | |
|---|---|---|---|
| மெலியும் நோய் தீர்க்கும் | மெலிவை விளைக்கும்படியான பிரிவுநோயைப் போக்கவல்லவனை | ஒலி புகழ் | கொண்டாடப்பட்ட குண பூர்த்தியையுடைய |
| நம் கண்ணன் | நமது கண்ணபிரானுடைய | ஆயிரத்து | ஆயிரத்திலும் |
| கழல்கள் மேல் | திருவடி விஷயமாக, | இப்பத்தும் | இப்பத்துப் பாசுரங்களையும் |
| மலி புகழ் | வளர்ந்த புகழையுடைய | வல்லவர் | ஓதவல்லவர்கள் |
| வண் குருகூர் சடகோபன் | திருநகரிக்குத் தலைவரான ஆழ்வார் | மலி புகழ் | மிக்கபுகழையுடைய |
| சொல் | அருளிச்செய்த | வானவர்க்கு | நித்யஸூரிகளுக்கு |
| | | நல் கோவை ஆவர் | நல்ல சேர்த்தியாவர். |

* * * *இத்திருவாய்மொழி கற்றார் நித்யஸூரிகளோடு ஒரு கோவையாகப் பெறுவர்களென்று பயனுரைத்துத் தலைக்கட்டுகிற பாசுரமிது. ஆழ்வார் மெலியுமளவான வளவிலே எம்பெருமான் வந்து முகங்காட்டி ஆற்றாமையைப் போக்கி ஒருவாறு ஆச்வஸிப்பித்தமை முதலடியில் தொனிக்கும். திருக்குரவை கோத்தவன்று வெள்ளக்கேடாகவொன்றுதென்று கண்ணன் ஆய்ச்சிகளைப் பிரிந்துமறைந்து நிற்க, அவர்களும் பிரிவாற்றமாட்டாதே கண்ணுஞ்சுழலையிட்டுச் சாலவும் வருந்திக்கிடக்க, இனி உய்யகிரகில்லை யென்னும் படி முடியுமளவானவாறே *தாஸாமாவிரபூச் சௌரி: ஸ்மயமாநமுகாம்புஜ:, பீதாம்பரதர: ஸ்ரக்வீ ஸாக்ஷாந்மந்மதமந்மத:* என்கிறபடியே பீதகவாடைப்பிரான் சடக்கெனத் தோன்றி முகங்காட்டினமை ப்ரஸித்தமேயன்றே. இங்ஙனே ஆபத்துக்களிலேவந்து உதவுமியல்வினனான கண்ணபிரான் ஆழ்வார்க்கும் காட்சிதந்து தேற்றுவித்தானாயிற்று. இப்படிப்பட்ட எம்பெருமானது திருவடி விஷயமாக ஆழ்வாரருளிச் செய்த ஆயிரத்துள் இப்பத்தும் ஓதவல்லவர்கள் வானவரோடு நல்ல சேர்த்தியாவர்கள்.* .... (11)

நான்காம்பத்து இரண்டாந் திருவாய்மொழி முற்றிற்று.

*ஆழ்வார் திருவடிகளே சரணம்.*

ஸ்ரீ

# நான்காம்பத்து மூன்றாந் திருவாய்மொழி—கோவைவாயாள்.

**உரையவதாரிகை:**—கீழ்த்திருவாய்மொழியில் ஆழ்வார் ஆசைப்பட்டபடியே எல்லாம் பெறும்படி எம்பெருமான் இவரோடே கலந்து, தன்னுடைய பரமப்ரணயித்வத்தை வெளியிட்டுக்கொண்டான்; அதுகண்டு மிகவும் உவந்த ஆழ்வார் அந்த ப்ரணயித்வ குணத்தை இத்திருவாய்மொழியிலே பேசுகிறார்.

இத்திருவாய்மொழியை நம் பூருவாசாரியர்கள் மூன்றுபடியாக நிர்வஹிப்பர்கள். 1. சந்திரனைப் பிடித்துத் தரவேணுமென்று அழுகின்ற குழந்தைக்குத் தேங்காயைக் கொடுத்து அழுகையை மாற்றுவதுண்டே; அதுபோலே, கீழ்த்திருவாய்மொழியில் தேசகால விப்ரக்ருஷ்டங்களைப் பெறவேணுமென்று ஆசைப்பட்ட ஆழ்வார்க்கு எம்பெருமான் ஒரு குணாநுபவத்தைப் பண்ணிவைக்க, அத்தாலே, கீழ்ப்பிறந்த இழவையெல்லாம் மறந்து அந்த குணத்தையே அநுபவிக்கிறார் என்று எம்பார் அருளிச் செய்யும்படி.

2. காலத்தால் தேசத்தால் கைகழிந்தவற்றை யநுபவிக்க ஆசைப்பட்ட ஆழ்வாருடைய திருமுகமண்டலத்தை நோக்கி எம்பெருமான் 'ஆழ்வீர்! நீர் அபேக்ஷித்தபடியே செய்யக்கடவோம்' என்று ஒருவார்த்தை சொல்ல, அது கேட்டுக் களித்துக் கீழிழவை மறந்து க்ருதார்த்தராகிறார்—என்று திருமலை நம்பி அருளிச் செய்யும்படி.

3. எம்பெருமான், ஆழ்வார் அபேக்ஷித்தபடியே செய்து தலைக்கட்ட வல்லவனாகையாலே, (அதாவது) காலம் தானிட்ட வழக்காம்படி காலநிர்வாஹகனாகையாலே, காலோபாதியைக் கழித்து, அதீதகாலத்திற் போகங்களையும் நிகழ்காலத்திற்போலே ஒரு போகியாக்கிக் கொடுக்க அவற்றை யநுபவித்து மகிழ்கிறார்—என்று பட்டர் அருளிச் செய்யும்படி.

அபேக்ஷித்த போகங்களைத்தாராமல் ஏதோவொரு குணத்தை யநுபவிப்பிக்க அதனாலே களித்துப் பேசுகிறாரென்பது, எம்பாருடைய நிர்வாஹம். அபேக்ஷித்த போகங்களைத் தாராவிட்டாலும் தருவதாக முகம்நோக்கி வாயினால் சொல்லி மகிழ்வித்தானெம்பெருமான் என்பது, திருமலை நம்பியின் நிர்வாஹம். அபேக்ஷித்தபடியே அநுபவிப்பித்தருளினானென்பது, பட்டருடையநிர்வாஹம். இங்ஙனே மூன்றுபடியாகவும் நிர்வஹிக்க ஔசித்யமுண்டு என்று தெரிவித்தவாறு. (*)

கோவைவாயாள்பொருட்டு ஏற்றினெருத்தமிறுத்தாய்! * மதிளிலங்கைக்
கோவைவீயச்சிலைகுனித்தாய்! குலநல்யானைமருப்பொசித்தாய்! *
பூவைவீயாநீர்தூவிப் போதால்வணங்கேனேலும் * நின்
பூவைவீயாம்மேனிக்குப் பூசும்சாந்தென்னெஞ்சமே. (1)

| | | | |
|---|---|---|---|
| கோவை வாயாள் பொருட்டு | கோவைக்கனிபோற் சிவந்த அதரத்தையுடையளான நப்பின்னைப் பிராட்டி நிமித்தமாக | மருப்பு | கொம்பை |
| ஏற்றின் | எருதுகளினுடைய | ஒசித்தாய் | முறித்தொழித்தவனே! |
| எருத்தம் | பிடரியை | பூவை வீயா நீர் | புஷ்பத்தை விட்டு நீங்காத தீர்த்தத்தை [புஷ்பத்தையும் தீர்த்தத்தையும் என்றபடி] |
| இறுத்தாய் | முறித்தவனே! | தூவி | பணிமாறி |
| மதிள் | மதிள் சூழ்ந்த | போதால் | உரிய காலங்களில் |
| இலங்கை | லங்காபுரிக்கு | வணங்கேனேலும் | உன்னைப் பணிந்திலேனாகிலும் |
| கோவை | அரசனான ராவணன் | நின் | உன்னுடைய |
| வீய | முடியும்படியாக | பூவை வீயாம் மேனிக்கு | காயாம் பூப்போன்ற திருமேனிக்கு |
| சிலை | சார்ங்க வில்லை | பூசும் சாந்து | சாத்தத் தகுதியான சந்தனம் |
| குனித்தாய் | வளைத்தவனே! | என் நெஞ்சமே | எனது நெஞ்சமேயாகும். |
| குலம் நல் யானை | நல்ல ஜாதியிலே பிறந்து அழகியதான குவலயாபீடயானையினுடைய | | |

* * * நப்பின்னைப் பிராட்டி நிமித்தமாக எருதுகளை அடர்க்கும்போதும், ஸீதாபிராட்டி நிமித்தமாக இராவணனை யழிக்கும் போதும் அந்தந்த ஸமயங்களிலுண்டான சிரமம் தீரும்படி அடியேன் அவ்வப்போதுகளில் ஸந்நிஹிதனாயிருந்து உபசாரங்கள் செய்யப் பெற்றிலேன்; அப்படியிருந்தும் என்னுடைய ஹ்ருதயத்தையே உனக்குப் பரமபோக்யமாகக்கொண்ட விதம் என்னே! என்று ஈடுபடுகிறார். அந்தந்த ஸமயங்களில் சிசிரோபசாரம் பண்ணப்பெறாத குறைதீர இப்போது என்னெஞ்சுதானே உனக்கு சிசிரோபசாரமாக நின்றது என்கை பரமதாத்பர்யம்.

**கோவைவாயாள்பொருட்டு**= 'பின்னைபொருட்டு' என்னாமல் இங்ஙனே சொன்னது, அவளுடைய வாயழகைக் கண்ட கண்ணபிரான், தன்னைப் பேணாமலும் எருதுகளின் செருக்கைக்கணிசியாமலும், 'அருந்தொழில் செய்தாகிலும் இவளை நாம் பெற்றே தீரவேணும்' என்று உறுதி கொண்டபடியைக் காட்டுதற்காம். இங்கே ஈட்டு ஸ்ரீஸூக்தி காண்மின்;—"ரிஷபங்களேழை முன்னிட்டு 'இவற்றை அடர்த்தார்க்கு இவளைக் கொடுக்கக் கடவோம்' என்று சொல்லி இவளை அலங்கரித்து முன்னே கொண்டுவந்து நிறுத்தினர்கள்; 'இவளை அணையலாமாகில் இவற்றை முறிக்கலாகாதோ' என்று தன்னைப்பேணாதே அவற்றின் மேலே விழுந்தான்."

மற்றொருவகையான ரஸப்பொருளும் அருளிச் செய்வதுண்டு; அதாவது—எருதேழடர்த்தவர்க்கு நப்பின்னையை மணம்புரிவிப்பதென்று கந்யாசுல்கம் ஏற்படுத்தப்பட்டிருப்பதான செய்தியைச் செவியுற்ற கண்ணபிரான் பலராமனோடுகூட அவ்விடத்திற்கு எழுந்தருளினபோது, நப்பின்னையின் கண்ணெதிரே முந்துறமுன்னம் பலராமன் நிற்க, அவனைக்கண்ட அவள் 'ஒருகால் இவன் எருதேழடர்த்தானாகில் இவனை மணம்புரிந்து கொள்ளவேண்டி வருமே!' என்று இன்னாப்போடே கிடந்தாளாம்; உடனே கண்ணபிரான் வந்து தோற்றினவாறே மிக மகிழ்ந்து புன்முறுவல் செய்தனளாக, அப்போது அதரத்திலுண்டான பழுப்பைக் கணிசித்துக் "**கோவைவாயாள்**" என்றதாக.

"எற்றினொருத்தமிறுத்தாய்" என்று இவ்வபதானத்தை இங்கு முறையிடுவதற்குக் கருத்து யாதெனில்; மாயமானின் பின்னே பெருமாள் தொடருகிறபோது அருகே நின்ற இளையபெருமாள் தெளிந்துநின்று 'இது மாயாமிருகம்; ராக்ஷஸமாயை' என்றாப்போலே நானும் அப்போது [எற்றினொருத்த மிறுத்தபோது] 'இவை அஸுராவேசம் பொருந்தியவை' என்று சொல்லியிருக்கலாமே; அந்தோ! அது செய்யப் பெற்றிலேனே! என்னும் குறையைக் காட்டுதலாம்.

**மதிளிலங்கைக்கோவைவீயச் சிலைகுனித்தாய்!=** நகரத்திற்கு மதிளுடைமை விசேஷித்துச் சொல்ல வேண்டியதன்றாயிருக்க, இங்குச் சொன்னதற்கு நம்பிள்ளை ஒரு கருத்தருளிச் செய்கிறார்—இராவணன், ஸர்வரக்ஷகரான ஸ்ரீசக்ரவர்த்தி திருமகனாரைத் தனக்கு ரக்ஷகராக மதிக்கவேண்டியிருக்க அது செய்யாதே இந்த மதிளே நமக்கு ரக்ஷகம் என்றிருந்தானும்; 'இம்மதிளும் ஊரும் உண்டே நமக்கு' என்று இறுமாப்புக் கொண்டிருந்தானும்; அது தோன்ற அருளிச் செய்தபடியென்று. இராவணன் வீயுமாறு தேவரீர் சிலை குனித்த காலத்திலே விபீஷணாழ்வான்போல்வார்போலே அருகே நின்று ஒன்றும் உதவப் பெற்றிலேனே! என்னுங்குறையை இங்குக் காட்டிக்கொள்ளுகிறபடி. **கோவை** என்றவிடத்து இரண்டனுருபுக்கு விவக்ஷையில்லை.

**குலநல்யானைமருப்பொசித்தாய்!=** குவலயாபீடமென்னும் மதயானையை மதமூட்டிக் கம்ஸன் தனது அரண்மனை வாசலிலே நிறுத்திவைக்க, அதன் கொம்பை முறித்து அத்தோடே போர் செய்கிறபோது "ஆவரிவை செய்தறிவார் அஞ்சனமாமலைபோலே, மேவுசினத்தடல் வேழம் வீழ முனிந்து" இத்யாதிப்படியே 'அந்தோ! பரமஸுகுமாரமான இக்கண்ணபிரானுடைய வடிவெங்கே! இந்த முரட்டு யானை எங்கே!' என்று வயிறெரிந்த மதுரையிற் பெண்களின் திரளிலேநின்று தாமும் உருகப்பெறாத குறையைக் காட்டிக் கொள்ளுகிறபடி.

**பூவை வீயா=** 'வீயா' என்பதை 'செய்யா' என்னும் வாய்பாட்டிறந்தகால வினையெச்சமாகக் கொண்டு 'புஷ்பங்களைப் பணிமாறி' என்று பொருள் கொள்வதுமுண்டு; அன்றியே, 'வீயா' என்பதை எதிர்மறைப் பெயரெச்சமாகக் கொண்டு 'புஷ்பங்களை விட்டு நீங்காத நீரைத்தூவி' என்றுரைத்தலுமுண்டு; புஷ்பங்களோடு கூடின நீர் என்றபடி: புஷ்பங்களையும் நீரையும் பணிமாறி என்றதாயிற்று. **போதால்வணங்கேனேலும்**—நப்பின்னைப்பிராட்டிக்காக எருதேழடர்த்தபோதென்ன, ஸீதாபிராட்டிக்காக இராவணனோடு பொருதபோதென்ன, மதுரையில் கஞ்சனது மதயானையோடு பொருதபோதென்ன, ஆகிய இப்போதுகளிலே உடனிருந்து உபசாரங்கள் செய்யப்பெற்றிலேனாகிலும் என்றபடி.

**நின்பூவைவீயாமேனிக்கு என்னெஞ்சமே பூசுஞ்சாந்து=** உன்னுடைய திருமேனிக்கு எனது நெஞ்சமே உபசாரம்; அதாவது—அந்தந்த ஸமயங்களில் உடனிருந்து உபசாரங்கள் பண்ணப்பெற்றிலேனே! என்று இப்போது குறைப்படுகின்றதற்கு நெஞ்சே காரணமாதலால் இத்தகைய நெஞ்சு உண்டாயிருக்கப் பெற்றவிதுவே உபசாரப்ராயம் என்றபடி. அன்றியே, உனக்குப் பூசுஞ்சாந்து என்னெஞ்சமாய்விடுவதே! என்று ஈடு

படுகின்றாராகவுமாம். என்னெஞ்சிலே எம்பெருமான்! இத்தனை உகப்புச் செய்வதே! என்றவாறு.

**பூவைவீ—** பூவைப்பூ; காயாம்பூ. வீ என்று பூவுக்குப் பெயர். "வீகமழ் நெடுஞ்சினை" (36) என்ற புறநானூறுங் காண்க. பூவைவீஆம்—பூவைப்பூப்போன்ற தாளை என்றபடி. .... .... .... (1)

பூசுஞ்சாந்தென்னெஞ்சமே புனையுங்கண்ணியெனதுடைய*
வாசகஞ்செய்மாலையே வான்பட்டாடையுமஃதே *
தேசமானவணிகலனும் என்கைகூப்புச்செய்கையே *
ஈசன்ஞாலமுண்டுமிழ்ந்த எந்தையேகமூர்த்திக்கே. (2)

| | | | |
|---|---|---|---|
| ஈசன் | ஸர்வேச்வரனும் | எனதுடைய | என்னுடைய |
| ஞாலம் உண்டு உமிழ்ந்த எந்தை | (ஒரு காலத்திலே) உலகங்களை யுண்டு (மற்றொரு காலத்திலே) வெளிப்படுத்தின ஸ்வாமியாயும் | வாசகம் செய் மாலை | வாக்கினால் தொடுக்கப்படுகிற சொல்மாலையேயாம்; |
| ஏகமூர்த்திக்கு | ஒப்பற்ற திவ்யமங்கள விக்ரஹத்தையுடையனாயுமிருக்கிற பெருமானுக்கு | வான் பட்டு ஆடையும் | சிறந்த திருப்பரிவட்டமும் |
| பூசும் சாந்து | பூசுவதற்குரிய சந்தனம் | அஃதே | அந்தச் சொல்மாலையேயாம்; |
| என் நெஞ்சமே | என் மனமேயாகும்; | தேசம் ஆன | தேஜஸ்கரமான |
| புனையும் கண்ணி | அணிந்து கொள்ளுதற்கு உரிய மாலை | அணி கலனும் | அணியப்படும் ஆபரணமும் |
| | | என் கை கூப்பு செய்கையே | எனது அஞ்சலிபந்தமேயாம்; |

* * * தமது மனமொழி மெய்களாகிற முக்கரணங்களும் எம்பெருமானுக்குப் பரம போக்யமாகின்றமையை வியந்து கூறுகின்றார். எம்பெருமானது திருமேனியின் வைலக்ஷண்யத்தையும், அவன்றனக்குத் தம்மிடத்து உண்டான விருப்பத்தையும் சிந்தனை செய்து, முன் சொன்னதையே மீண்டும் வாய்வெருவுகிறபடி.

**எனதுடைய வாசகஞ்செய்மாலையே புனையுங்கண்ணி=** எம்பெருமான் பூமாலைகள் அணிந்து கொண்டால் என்ன ஔஜ்ஜ்வல்யமிருக்குமோ அது தமது சொல்மாலைகளை ஏற்றுக்கொண்டதனால் இருக்கின்றதென்றபடி.

**வான்பட்டாடையுமஃதே=** தமது அருளிச்செயலே எம்பெருமானுக்குப் பீதாம்பரமென்கிறார். அழகிய வஸ்த்ரமில்லாதவனுக்கு உலகில் மதிப்பு ஏற்படுவதில்லை; எம்பெருமானுக்கு ஆழ்வாரருளிச் செயல் இல்லையாமாகில் மதிப்பு ஏற்படாதென்பது உய்த்துணரத்தக்கது. இங்கே நம்பிள்ளையீடு காண்மின்;—"ஆழ்வாருடைய உக்திதானே அவனுக்கு சோபாவஹமான பரிவட்டமும். இவருடைய பா நல்ல நூலாகையாலே வான் பட்டாடையாயிற்றுக்காணும். 'நல்ல நூலாகவேணும்' என்று அடியிலே நோற்று நூற்றவரிறே."

**என்கைகூப்புச்செய்கையே தேசமானவணிகலனும்=** ஆழ்வார்தாம் ஓர் அஞ்ஜலி பண்ணினால் அதுதன்னால் எம்பெருமான் தன்னை ஸர்வாபரண பூஷிதனாகக் கருதுகின்றான்

போதும். **அஞ்ஜலி** என்பதற்கு **"அம் ஜலயதி"** என்று வ்யுத்பத்தி கூறுவர்; அகாரவாச்யனை எம்பெருமானை நீர்ப்பண்டமாக உருக்குவது என்றபடி. "நின்தலையைத் தாழ்த்து இருகை கூப்பென்றால் கூப்பாது பாழ்த்த விதி" என்கிறபடியே ஓர் அஞ்ஜலிமாத்திரமும் அரிதான இந்நிலத்தில் அது கிடைக்கப் பெற்றால் எம்பெருமான் மிக்க புகர்பெற்று விளங்குவனென்பதில் ஐயமில்லை.

ஸர்வேச்வரனும், ஜகத்துக்கு ஸர்வப்ரகார ரக்ஷகனும், அந்தத் தன்மையினால் என்னை ஈடுபடுத்திக் கொண்டவனும் அத்விதீயமான திருமேனியையுடையவனுமிருக்கிற எம்பெருமான் இப்படியெல்லாம் திருவுள்ளம் பற்றுவதே! என்பது ஈற்றடியின் கருத்து. .... .... .... (2)

ஏகமூர்த்தியிருமூர்த்தி மூன்றுமூர்த்திபலமூர்த்தி
யாகி * ஐந்துபூதமாய் இரண்டுசுடராயருவாகி *
நாகமேறிநடுக்கடலுள்துயின்ற நாராயணனே! * உன்
ஆகமுற்றுமகத்தடக்கி ஆவியல்லல்மாய்த்ததே. (3)

| | |
|---|---|
| ஏகம் மூர்த்தி | காரணபூதமான ஒரு மூர்த்தியாய் |
| இரு மூர்த்தி | (ஸ்ருஷ்டியின் தொடக்கத்திலே) ப்ராக்ருதி மஹான் இவைகளைச் சரீரமாகக்கொண்டு நிற்கும் மூர்த்தியாய் |
| மூன்று மூர்த்தி | ஸாத்விகமாயும் ராஜஸமாயும் தாமஸமாயும் மூன்று வகைப்பட்ட அஹங்காரத்தை வடிவாகக்கொண்ட மூர்த்தியாய் |
| பல மூர்த்தி ஆகி | மநஸ் முதலிய கரணங்களை வடிவாகவுடையனாய் |
| ஐந்து பூதம் ஆய் | பஞ்ச பூதங்களை வடிவாகவுடையனாய் |

| | |
|---|---|
| இரண்டு சுடர் ஆய் | ஸூர்ய சந்திரர்களிருவரையும் வடிவாகவுடையனாய் |
| அரு ஆகி | ஸர்வாந்தர்யாமியாய், |
| நடு கடலுள் | திருப்பாற் கடல் நடுவே |
| நாகம் ஏறி | திருவநந்தாழ்வான் மீது ஏறி |
| துயின்ற | திருக்கண்வளர்ந்தருளின |
| நாராயணனே | நாராயணனே! |
| உன் | உன்னுடைய |
| ஆகம் | திருமேனியையும் |
| முற்றும் | அதற்கு வேண்டிய மற்றெல்லாவற்றையும் |
| அகத்து | எனது நெஞ்சினுள்ளே |
| அடக்கி | அடங்கவைத்து |
| ஆவி | உன் திருவுள்ளம் |
| அல்லல் மாய்த்ததே | இடர் நீங்கப்பெற்றதே! |

* * * கீழ்த்திருவாய்மொழியில் தமக்குண்டான ஆற்றாமை தீரப்பெற்றமையை இங்கருளிச்செய்கிறார். **ஏகமூர்த்தி**-ஸ்ருஷ்டிக்கு முன்பு ஸூக்ஷ்ம சிதசித்விசிஷ்டனாய்க் கொண்டு ஒரே மூர்த்தியாக இருக்குமிருப்பை அருளிச் செய்தபடி. **இருமூர்த்தி**= ஸ்ருஷ்டியிலே உன்முகனாய் ப்ரக்ருதி மஹான் என்ற இரண்டு தத்துவங்களையும் சரீரமாகக் கொண்டு நிற்கிற நிலையைச் சொன்னபடி. **மூன்றுமூர்த்தி** = ஸாத்விகம் ராஜஸம் தாமஸம் என்று மூன்றுவகைப்பட்ட அஹங்காரமென்கிற தத்துவத்தைச் சரீரமாகக்கொண்டு நிற்கும் நிலையைச் சொல்லுகிறது.

**பலமூர்த்தியாகி ஐந்துபூதமாய்**= ஸாத்விகாஹங்காரத்தின் காரியமான பதினோரிந்திரியங்களையும் தாமஸாஹங்காரத்தின் காரியமான நிலம் நீர் தீ கால் விசும்பு என்கிற பஞ்ச பூதங்களையும் சரீரமாகக் கொண்டிருக்கும்படியைச் சொன்னபடி.

**ஏகமூர்த்தி**—பரவாஸுதேவமூர்த்தி; **இருமூர்த்தி**—பரவாஸுதேவன் வ்யூஹ வாஸுதேவன் ஆகிற இரண்டு மூர்த்தி. **மூன்றுமூர்த்தி** – ஸங்கர்ஷண அநிருத்த ப்ரத்யும்ந மூர்த்திகள். **பலமூர்த்தி**—"எந்நின்ற யோனியுமாய்ப் பிறந்தாய்" என்கிற அநேக விபவாவதார மூர்த்திகள் என்றுரைப்பாருமுண்டு.

**இரண்டுசுடராய்** = ஸூர்ய சந்திரர்களைச் சொல்லுகிறது; இவ்விருவரைச் சொன்னது கார்யவர்க்கங்க ளெல்லாவற்றுக்குப் உபலக்ஷணம்.

**அரு ஆகி** = ஒவ்வொரு பொருளிலும் அநுப்ரவேசித்திருக்கும்படியைச் சொல்லுகிறது. **அரு**—அரூபி.

[**நாகமேறி** யித்யாதி.] ஸ்ருஷ்டிக்கப்பட்ட பிரமன் முதலியோர் வந்து அடிபணிதற்குப் பாங்காகத் திருப்பாற்கடலினிடையே திருவனந்தாழ்வான்மீது சாய்ந்தருளினவனே!

[**உன்ஆகமுற்றும்** இத்யாதி.] **ஆகம்**—உடம்பு; உடம்புக்கு வேண்டியவைகளான சாந்து, பூமாலை, திருப்பரிவட்டம், ஆபரணம் ஆகிய இவற்றை (இலக்கணையால்) சொல்லுகிறது. **உன் ஆகம்முற்றும்**—உன் திருமேனிக்கு வேண்டியவற்றை யெல்லாம்; **அகத்து அடக்கி**—என்னுள்ளே உண்டாம்படி பண்ணி; (அதாவது, கீழிரண்டு பாட்டுக்களிற் கூறியபடியே அமைத்துக்கொண்டு.) **ஆவி**—உன் ஹ்ருதயத்திலிருந்த, **அல்லல்**—துயரம், **மாய்த்தது**—போக்கிக்கொள்ளப் பெற்றது.

'என் ஆவி' என்றுவது 'உன்ஆவி' என்றுவது சொல்லாமையாலே இரண்டு வகையாகவுங் கொள்ளப் பொருந்தும். இங்கே நம்பிள்ளையீடு;—"உன் திருவுள்ளத்திலுண்டான அல்லல் ஒருபடி நசிக்கப் பெற்றதே!. இத்தலையை ஒருபடி கரைமரஞ்சேர்த்து க்ருதக்ருத்யனானாயே. அன்றிக்கே, என்னுவியானது நிர்த்துக்கமாயிற்று என்றுமாம்." .... .... .... (3)

மாய்த்தலெண்ணிவாய்முலைதந்த மாயப்பேயுயிர்
மாய்த்த * ஆயமாயனே! வாமனனே! மாதவா! *
பூத்தண்மாலைகொண்டு உன்னைப்போதால்வணங்கேனேலும் * நின்
பூத்தண்மாலைநெடுமுடிக்குப் புனையும்கண்ணியெனதுயிரே. (4)

| | |
|---|---|
| மாய்த்தல் எண்ணி | முடிப்பதாக நினைத்து |
| வாய் | வாயிலே |
| முலை தந்த | நஞ்சு தீற்றிய முலையை வைத்த |
| மாயம் பேய் | பூதனையினுடைய |
| உயிர் | பிராணனை |
| மாய்த்த | முடித்துவிட்ட |
| ஆய! மாயனே! | வாமனனே! மாதவா!-; |
| உன்னை | உன்னை |
| பூ தண் மாலை கொண்டு | பூக்கள் தொடுத்துக் குளிர்ந்த மாலைகளைக்கொண்டு |

| | |
|---|---|
| போது | அவ்வப்போதுகளில் |
| வணங்கேன் ஏலும் | வழிபாடு செய்யப்பெற்றிலேனாகிலும் |
| நின் | உன்னுடைய |
| பூ தண் மாலை நெடு முடிக்கு | புஷ்பமயமாய்ச் செவ்விய மாலையாலே அலங்கரிக்கப்பட்ட நீண்ட திருமுடிக்கு |
| புனையும் கண்ணி | அலங்காரமாய்ச் சாத்துகின்ற மாலை |
| எனது உயிரே | என் பிராணனேவதே! |

* * * பூதனையை முடித்தல் முதலான ஸமயங்களில் விடாய்தீர வந்துநின்று சிசிரோபசாரம் பண்ணப்பேற்றிலேனே யாகிலும் உன் திருமேனிக்கு என்னுயிரே உபசாரமாய்விட்டதே யென்கிறார். கம்ஸன், தன்னைக் கொல்லப்பிறந்த தேவகீபுத்திரன் ஒளித்து வளர்தலையறிந்து, அக்குழந்தையை நாடியுணர்ந்து கொல்லும்பொருட்டுப் பல அசுரர்களை ஏவ, அவர்களில் ஒருத்தியான பூதனையென்னும் ராக்ஷஸி நல்ல பெண்ணுருவத்தோடு இரவிலே திருவாய்ப்பாடிக்கு வந்து அங்குத் தூங்கிக்கொண்டிருந்த ஸ்ரீ க்ருஷ்ண சிசுவையெடுத்துத் தனது நஞ்சு தீற்றிய முலையைக் கொடுத்துக் கொல்ல முயல, பகவானான குழந்தை அவ்வரக்கியின் தனங்களைக் கைகளால் இறுகப்பிடித்துப் பாலுண்ணுகிற பாவனையிலே அவளுயிரையும் உறிஞ்சி, அவள் பேரிரைச்சலிட்டுக் கதறி உடம்பு நரம்புகளின் கட்டெல்லாம் நீங்கிவிழுந்து இறக்கும்படி செய்தனன் என்ற வரலாறு இங்கு அறியத்தக்கது.

"மாய்த்தவெண்ணி" என்றவிடத்து 'இன்னாரை மாய்த்தல்' என்று விரியச் சொல்லாமையாலே 'உலகத்தையே மாய்க்கவெண்ணி' என்றும் பொருள் கொள்ளலாம். ஸகல ஜகச்சரீரியான கண்ணனை நலிய நினைத்தது உலகத்தையே உபஸம்ஹாரம் பண்ண நினைத்தபடி யாகுமன்றோ. அவள் பேயாய் வருகையன்றியே தாயாய் வந்ததனால் '**மாயப் பேய்**' எனப்பட்டது.

**வாமனனே!=** க்ருஷ்ணாவதாரத்தில் பூதனை முலைகொடுத்தபோது அதற்கு மாற்று மருந்தாக முலை கொடுக்கைக்கு ஒரு தாயாகிலுமிருந்தாள்; "வெங்கொங்கையுண்டானை மீட்டாய்ச்சி யூட்டுவான் தன் கொங்கை வாய்வைத்தாள் சார்ந்து" என்றும் 'பேய்ச்சி பாலுண்ட பெருமானைப் பேர்ந்தெடுத்து ஆய்ச்சி முலைகொடுத்தாளஞ்சாதே" என்றும் பேயாழ்வார் அருளிச்செய்து வைத்தாரே. அதுவுமில்லாதபடி, வாமனனைப் பெற்றிட்டு வைத்துத் தாயும் தமப்பனும் தபஸ்ஸிலே அந்யபரராயிருக்க, ஆஸுரப்ரக்ருதி [மஹாபலி] யிருந்தவிடத்தே தானே சென்று கிட்டும்படியாயிற்றே; அக்காலத்திலே தாம் உடனிருந்து உபசாரம் செய்யப் பெறுமைக்கு உருவுகிறபடி.

**மாதவா!=** லக்ஷ்மீ வல்லபனே! என்றபடி. "தீநாள் திருவுடையார்க்கில்லை" என்று ஒரு பழமொழியுண்டு; செல்வமுடையார்க்கு ஆபத்து ஒன்றும் வாராது என்றவாறு. கீழ்ச்சொன்ன அபாயங்களில் எம்பெருமான் தப்பிப்பிழைத்தது பிராட்டியின் கடாக்ஷத்தினாலென்கிறார் போலும்;

> ஆரப்ய சைசவமநாரதப்ரயத்நாத் யத்பூதநாதிவிபதுத்தரணம் முராரே:
> கல்யாணி ருக்மிணி ஜகஜ்ஜநநி த்வதீய மாங்கள்யஸூத்ரமஹிமா கலு தத்ர ஹேது:

என்ற ச்லோகம் இங்கு அநுஸந்திக்க வுரியது. லக்ஷ்மீகடாக்ஷமிருக்கும்போது அபாயம் புகுர ப்ரஸக்தியில்லையாகிலும் இருவருமான சேர்த்திக்கு மங்களா சாஸனம் பண்ண ப்ராப்தியுண்டே; "வடிவாய் நின்வலமார்பினில் வாழ்கின்ற மங்கையும் பல்லாண்டு" என்ன வேண்டுமே; அது தவறின குறையை நினைக்கிறாரென்னலாம். பாற்கடல் கடைந்த காலத்தில் பிராட்டி திருமார்பிலே வந்து சேரும்போதும், வாமனனாய் மாவலிபக்கல் எழுந்தருளினபோதும், பேய்ச்சி முலை சுவைத்தபோதும் உடனிருந்து உபசாரம் செய்யப்

*பெற்றிலேனாகிலும், உன்னுடைய திருமுடிக்கு அலங்காரமாகச் சாத்தும் மாலை என்னுடைய ப்ராணனாவதே! என்கிறார். தம்முடைய ஸத்தையையே இங்கு ப்ராணனாகச் சொல்லுகிறபடி.* .... .... (4)

கண்ணியெனதுயிர் காதல்கனகச்சோதிமுடிமுதலா *
எண்ணில்பல்கலன்களும் ஏலுமாடையும் அஃதே *
நண்ணிமூவுலகும் நவிற்றும்கீர்த்தியும் அஃதே *
கண்ணனெம்பிரானெம்மான் காலசக்கரத்தானுக்கே. (5)

| | |
|---|---|
| காலம் சக்கரத் தான் | காலத்தை நடத்துகிற திருவாழியையுடையனாய் |
| எம்மான் | எனக்கு ஸ்வாமியாய் |
| எம் பிரான் | எனக்கு மஹோபகாரகனான |
| கண்ணனுக்கு | ஸ்ரீ க்ருஷ்ண பகவானுக்கு |
| எனது உயிர் | என் ஆத்மவஸ்து |
| கண்ணி | மாலை போல் போக்யமாகாநின்றது; |
| காதல் | எனது ஆசையானது |

| | |
|---|---|
| கனகம் சோதி முடி முதல் ஆ | பொன்மயமாய் ஒளியையுடைத்தான திருவபிஷேகம் முதலாக |
| எண் இல் பல் கலன்களும் | கணக்கற்ற பல திருவாபரணங்களாக ஆகாநின்றது; |
| ஏலும் ஆடையும் | ஏற்றதான பீதாம்பரமும் |
| அஃதே | அந்தக் காதலேயாம்; |
| மூ உலகும் | மூவுலகங்களும் |
| நண்ணி | கிட்டி |
| நவிற்றும் | துதிக்கின்ற |
| கீர்த்தியும் | புகழும் |
| அஃதே | அந்தக் காதலேயாம். |

* * * *தம்முடைய உயிரையும் காதலையும் எம்பெருமான் போரப்பொலிய அபிமானித்தபடியைப் பேசுகிறார்.* **எனது உயிர் கண்ணி**— *என்னுடையதாக அபிமானித்திருக்கிற உயிரை எம்பெருமான் தனக்கு மாலையாகக் கொண்டானென்கை. இங்கே ஈடு— "*மார்வத்து மாலை * என்கிறவளைத் தனக்கு மாலையாகக்கொள்ளுகை ப்ராப்தம்; அதொழிய என் ஸத்தையைக்கிடீர் தனக்கு மாலையாகக்கொள்ளுகிறது" என்பதாம். மாலையணிந்துகொண்டால் என்ன ஆனந்தமுண்டாகுமோ அந்த ஆனந்தம் என்ஸத்தையினால் எம்பெருமானுக்கு உண்டாகிறது என்றபடி.*

**கனகச்சோதி முடிமுதலா எண்ணில் பல் கலன்களும் எனது காதல்=** *ஸுவர்ணமயமாய் ஒளிமிக்க கிரீடம் முதலாகிய எண்ணிறந்த பல திருவாபரணங்களும் என்னுடைய காதல் என்றபடி. அதாவது இவருடைய காதலுக்குத் தான் இலக்காகப் பெற்றதுண்டே அது தன்னையே தனக்குப் பல திருவாபரணங்கள் சாத்தினதாக அவன் திருவுள்ளம்பற்றியிருக்கிறபடி.*

**ஏலுமாடையும் அஃதே=** *அந்தக் காதலையே பீதாம்பர மணிந்ததாகவும் எம்பெருமான் அபிமானிக்கிறானென்கை. ஆடைக்கு* **ஏலும்** *என்று விசேஷணமிட்டது, எம்பெருமான் றனக்கும் பீதாம்பரத்திலே மிக்க விருப்பமுடைமையைக் காட்டும். தான் உகந்து ஏற்றுக்கொள்ளுகிற என்றபடி. இவ்விடத்து ஈட்டில் ஒரு ஐதிஹ்யமுண்டு; அதாவது— "ஒருநாள் ஸ்ரீவைஷ்ணவ வண்ணாத்தான் திருப்பரிவட்டங்களை அழகியதாக வாட்டிக்கொண்டு வந்து [ஸலவைசெய்து கொண்டுவந்து] எம்பெருமானார்க்குக் காட்ட, அவரும் பரமத்ருப்தியடைந்து அவனைப் பெருமாள் திருவடிகளிலே கொண்டு புக்கு 'இவன் வெகு*

மநோஹரமாகத் திருப்பரிவட்டம் திருத்திக்கொண்டு வந்திருக்கிற படியைத் திருக்கண் சாத்தியருளவேணும்.' என்று சொல்லித் திருப்பரிவட்டங்களைக் காட்டியருள, பெருமாளும் கண்டு உகந்தருளி உடையவரைநோக்கி 'வாரீர்! இவனுக்காக, முன்பு ரஜகன் நம்திறத்தில் செய்த குற்றம் பொறுத்தோம்' என்று திருவாய்மலர்ந்தருளினார்" என்று —வண்ணான் முன்புசெய்த குற்றமாவது—கண்ணபிரானும் பலராமனும் அக்ரூரரால் அழைக்கப்பட்டு மதுரைக்கு எழுந்தருளினபோது அவ்வூரிலுள்ள ராஜவீதியில் கம்ஸனுடைய வண்ணான் துணிமூட்டைகளைச் சுமந்துகொண்டுவர, இவ்விருவரும் அவனிடத்தில் வஸ்த்ரம் விரும்ப, அவன் கொடாதொழிந்தது.

**மூவுலகும் நண்ணி நவிற்றும் கீர்த்தியும் அஃதே**—தம்முடைய காதலையே எம்பெருமான், மூவுலகிலுள்ளாரும் தன்னைக் குறித்துப் பண்ணுகிற ஸ்துதியாகத் திருவுள்ளம் பற்றினனென்க. ஆழ்வாரொருவர் கடல்புரைய விளைந்த காதலோடு எம்பெருமானைத் துதிப்பதானது மூவுலகும் ஒன்றுசேர்ந்து துதித்தாற்போலுள்ளது என்றவாறு.

இதெல்லாம் யாருக்கென்னில், **கண்ணனெம்பிரானெம்மான் காலசக்கரத்தானுக்கே**—கையும் திருவாழியுமான அழகைக்காட்டி என்னை யீடுபடுத்திக்கொண்ட பெருமானுக்கு என்றபடி. **காலசக்கரத்தான்**—காலத்தை நடத்துகிற திருவாழியையுடையவன் என்கை. பாரதப்போரில் பகலை யிரவாக்கினமை நினைக்கத்தக்கது. காலசக்கரத்தை நிர்வஹிப்பவனான எம்பெருமான் என்றும் பொருள் கூறலாம்; கீழ்த் திருவாய்மொழியில் இவர் விரும்பினபடி காலோபாதியைக் கழித்துப் பூர்ணாநுபவம் பண்ணுவித்ததற் கிணங்க இங்ஙனேயருளிச் செய்தபடியாகலாம். .... .... 5()

காலசக்கரத்தொடு வெண்சங்கம் கையேந்தினாய்! *
ஞாலமுற்றுமுண்டுமிழ்ந்த நாராயணனே! என்றென்று *
ஓலமிட்டுநானழைத்தால் ஒன்றும்வாராயாகிலும் *
கோலமாமென்சென்னிக்கு உன்கமலமன்னகுரைகழலே. (6)

| | | | |
|---|---|---|---|
| காலன் சக்கரத்தொடு | (பகைவரையழிப்பதில்) யமன் போன்ற திருவாழியோடுகூட | ஓலம் இட்டு | கூப்பிட்டு |
| வெண் சங்கு | வெளுத்த சங்கத்தை | நான் அழைத்தால் | நான் அழைக்க |
| அம் கை | அழகிய திருக்கையிலே | ஒன்றும் வாராய் ஆகிலும் | நீ சிறிதும் வந்தருளாமற் போனாலும் |
| ஏந்தினாய் | தரித்திருப்பவனே! | உன் | உன்னுடைய |
| ஞாலம் முற்றும் | உலகமுழுவதையும் | கமலம் அன்ன | தாமரை மலர்போன்ற |
| உண்டு உமிழ்ந்த | ஒருகால் விழுங்கி மற்றொருகால் வெளிப்படுத்தின | குரை கழல் | ஒலிக்கின்ற வீரக்கழலையணிந்த திருவடிகள் |
| நாராயணனே | நாராயணா! | என் சென்னிக்கு | எனது தலைக்கு |
| என்று என்று | பலகால் சொல்லி | கோலம் ஆம் | அலங்காரமாகின்றது. |

* * * கீழ்ப்பாசுரங்களில் எம்பெருமானுடைய ப்ரணயித்வம் சொல்லிற்று; இப்பாசுரத்தில் தம்முடைய ப்ரணயித்வம் சொல்லுகிறது. **காலன்** என்று யமனுக்குப் பேராதலால், எதிரிகளுக்கு யமன் போன்றதான சக்கரம் என்று பொருளாகலாம். திருவாழி திருச்சங்குகளைக் கையிலேந்தினவனே! என்றும், பிரளயாபத்திலே உலகங்களை

யெல்லாம் திருவயிற்றிலே வைத்து ரக்ஷித்துப் பிறகு வெளிப்படுத்தினவனே ! என்றும், நாராயணனே ! என்றும் இப்படிப் பலவற்றையுஞ் சொல்லிப் பெருமிடறு செய்து நான் அழைக்கச்செய்தே, நீ இங்கு விரைந்து ஓடிவரவேண்டியிருந்தும் வாராதிருந்தாயாகிலும் என்தலைக்கு ஆபரணமாவது உன் திருவடிகளே யென்கிறார்.

எம்பெருமான் இவர் பக்கலிலே வந்து சேர்ந்தாலன்றே அவனுடைய திருவடிகள் இவரது சென்னிக்கு ஆபரணமாகும்; அவன் வாராதேயிருந்தால் அவன் திருவடிகள் இவரது சென்னிக்கு எங்ஙனே கோலமாகும்? என்று கேள்வி பிறக்கும்; இதற்கு ஸமாதானமான ஈட்டு ஸ்ரீஸூக்தி காண்மின்;—"வாராயாகிலும் கோலமாம் என்பானென்னென்னில்; வாராதொழியக்கூடாது; கூடாதது கூடிலும் என்னினைவு இதுவென்கிறார். என்னை அடியிலே இப்படி ஆக்கினையேயென்று கருத்து."

உன் திருவடிகளிலே எனக்கு ப்ரேமம் ஸத்தாப்ரயுக்தமென்பது பரம தாத்பர்யம். (6)

குரைகழல்கள்நீட்டி மண்கொண்டகோலவாமனா ! *
குரைகழல்கைகூப்புவார்கள் கூடநின்றமாயனே ! *
விரைகொள்பூவும்நீரும்கொண்டு ஏத்தமாட்டேனேலும் * உன்
உரைகொள்சோதித்திருவுருவம் என்னதாவிமேலதே. (எ)

| | | | |
|---|---|---|---|
| குரை கழல்கள் நீட்டி | (வீரக்கழல்) ஒலிக்கப்பெற்ற திருவடிகளைப் பரப்பி | கொண்டு | ஏந்திக்கொண்டு |
| மண் கொண்ட | ஜகத்தை அளந்து கொண்ட | ஏத்த மாட்டேன் ஏலும் | உன்னைத் துதிக்கவல்லே னல்லேனெனினும், |
| கோலம் வாமனா | வடிவழகிய வாமன மூர்த்தியே! | உரை கொள் சோதி | வாய்கொண்டு சொல்லவொண்ணாதபடி வாக்கை மீறியிருக்கின்ற சோதியையுடைய |
| குரை கழல் | அத்திருவடிகளைக் குறித்து | | |
| கை கூப்புவார்கள் | ஓர் அஞ்ஜலிபண்ணுமவர்கள் | | |
| கூட நின்ற | தன்னையே வந்து அடையும்படி நின்ற | உன் திரு உருவம் | உன்னுடைய திருமேனியானது |
| மாயனே | ஆச்சரிய பூதனே! | என்னது ஆவி மேலது ஏ | என்னுடைய ஸத்தையைப் பற்றியிரா நின்றதே! இது என்ன அற்புதம்!. |
| விரைகொள் பூவும் | பரிமளங்கொண்ட பூக்களையும் | | |
| நீரும் | (பாத்யம் முதலியவற்றுக்கான) தீர்த்தத்தையும் | | |

* * *—நான் ஒருவிதமான கிஞ்சித்காரமும் செய்யப்பெற்றிலேனாகிலும், அநந்யார்ஹமாக்கி அடிமைகொள்ளுமியல்வினனான வுன்னுடைய வடிவு என் ஆத்மாவை விஷயீகரித்திரா நின்றதென்கிறார்.

"குரைகழல்கள் நீட்டி மண்கொண்ட" என்ற இவ்விடத்து ஒரு சங்கையுண்டாகும்; பகவான் மாவலியிடத்து நீரேற்றுப் பெற்றபின்பு ஒரு திருவடியினால் மண்ணுலகத்தையும் மற்றொரு திருவடியினால் விண்ணுலகத்தையும் அளந்தருளினதாகவன்றோ வரலாறு; இங்கு 'மண் கொண்ட' என்றதற்குச் சேர 'குரைகழல் நீட்டி' என்று ஒருமையாக இருக்கவன்றோ தகுவது; 'குரைகழல்கள்' என்று பன்மையாக இருக்கத் தகுதியில்லையே; "மண்ணும் விண்ணுங் கொண்ட" என்றிருந்தாலன்றோ 'கழல்கள் நீட்டி' என்ற பன்மை பொருந்தும்—என்பதாக.

இதற்கு இரண்டுவகையாகப் பரிஹாரம் கூறலாம்; "பூஜாயாம் பஹுவசநம்" என்ற வட நூலாரின் முறை தமிழர்க்கும் உடன்பாடேயாதலால் ஒரு திருவடியையே பன்மையாகக் கூறினது உபசாரம்பற்றி என்னலாம்; அன்றி, மண் என்றது பொதுப்பட உலகத்துக்கு வாசகம் என்றுகொண்டு, கீழுலகங்களையும் மேலுலகங்களையும் அளந்துகொண்ட

என்றதாகக்கொள்ளலாம். மண் என்றது விண்ணுக்கும் உபலக்ஷணம் என்னலாமாயினும் இந்த ஸமாதானம் பஹுவசந நிர்வாஹகமாகாது. மற்றும் வல்லார் வாய்க் கேட்டுணர்க.

கோலவாமனா=மண் இரக்கும் காலத்தில் வாமன வேஷமிருந்ததேயன்றி மண் கொண்டகாலத்தில் அந்தத் திருக்கோலமில்லையே; "மண்கொண்ட திரிவிக்கிரமா!" என்றன்றோ சொல்லியிருக்கவேண்டும்; குரைகழல்கள் நீட்டியானபின்பு கோலவாமனனைக் கூறத் தகுதியில்லையே! என்று சங்கை பிறக்கும். இதற்கு நம்பிள்ளையருளிச்செய்யுமது காணீர்;—"மண்கொண்டபின்பும் வாமனவேஷம் இவர் திருவுள்ளத்திலே ஊற்றிருந்தபடி. இந்த்ரனுக்கு ராஜ்யங் கொடுக்கைக்காகவன்றிக்கே தம்மை அநுபவிப்பிக்கைக்காக அவ்வடிவுகொண்டானென்றிருக்கிறார்" என்று.—த்ரிவிக்ரமனை கோலத்திற்காட்டிலும் * மன்னன்றன் தேவிமார் கண்டு மகிழ்வெய்தக்கொண்ட மாண்குறள் கோலவடிவே மிகவுமழகியதாதலால் அதனை எம்பெருமான் மாற்றிக்கொண்டாலும் ஆழ்வார் திருவுள்ளம் மாற்றிக்கொள்ள இசையவில்லைபோலும்.

குரைகழல் கை கூப்புவார்கள் கூடநின்ற மாயனே!=தனியே இதுவொரு விளி; உன்னுடைய திருவடிகளை நோக்கி அஞ்ஜலி பண்ணுமவர்கள் யாவரோ அவர்கள் உன்னைக் கூடுவர்கள் என்பது ஒரு பொருள்; "கைகூப்புவார்கள் குரைகழல் கூட நின்றமாயனே!" என்று அந்வயமாக்கி, உன்னை நோக்கி ஓர் அஞ்ஜலி பண்ணுமவர்கள், திருவடிவாரத்திலே நித்யவாஸம் பண்ணலாம்படி அவர்களை விஷயீகரிப்பவனே! என்பது மற்றொரு பொருள். ஓர் அஞ்ஜலி பண்ணினவளவுக்கு இத்தனை பலனுவதே! என்ற வியப்புத்தோன்ற மாயனே! என்கிறார். சிலரை ப்ரயோஜநாந்தரங்களுக்காகத் திருவடிகளில் வந்து வணங்குமாறு செய்வதும், சிலரை அநந்ய ப்ரயோஜநமாக வணங்கச்செய்து "சேவடி செவ்வி திருக்காப்பு" என்று மங்களாசாஸநமே யாத்திரையாம்படி செய்வதுமாயிருக்கிற (எம்பெருமானது) மாயச்செயலைத் திருவுள்ளம்பற்றி மாயனே! யென்கிறார்.

[விரைகோள் பூவும் இத்யாதி.] ஓர் அஞ்சலி மாத்திரத்தினால் அடையலாம்படி எளியனாயிருக்கிற உன் விஷயத்திலே சில புஷ்பங்களையும் தீர்த்தத்தையுங்கொண்டு வழிபாடு செய்து ஸ்வரூபம் சிறம்பெற ப்ராப்தமாயிருக்க, அங்ஙனம் பெற்றிலேனேயாகிலும், உன்னுடைய திருவடிவுக்கு என் ஆத்மஸத்தையே தாரகமாயிற்றே! இதென்ன ஆச்சர்யமென்கிறார். "ஆழ்வாருண்டானால் நானுண்டு" என்று எம்பெருமான் திருவுள்ளம் பற்றியிருக்கிறபடியை ஆழ்வாரறிந்து அருளிச்செய்தாராயிற்று.

[உரைகோள் சோதித் திருவுருவம்=இங்கே ஈடு;—"உரைகொள்ளுகையாவது, அது அது என்று வாய் புலற்றும்படியாயிருக்கை. *ராமோ ராமோ ராம இதி ப்ரஜாநாமபவந் கதா:, ராமபூதம் ஜகதபூத் ராமே ராஜ்யம் ப்ரசாஸதி.—ராமோ ராமோ ராம இதி ப்ரஜாநாமபவந் கதா:; ராமபூதம் ஜகதபூத் ராமே ராஜ்யம் ப்ரசாஸதி.* என்னு நிற்பர்களிறே. அன்றிக்கே, பேச்சுக்கு அவிஷயமான திருமேனியென்னுதல். மாற்றுயுரையுமற்ற திருமேனியென்னுதல்." ... ... ... ... ... (எ)

என்னதாவிமேலையாய் ஏர்கொளேழுலகமும் *
துன்னிமுற்றுமாகிநின்ற சோதிஞானமூர்த்தியாய் *
உன்னதேன்னதாவியும் என்னதுன்னதாவியும் *
இன்னவண்ணமேநின்றாய் என்னுரைக்கவல்லேனே ? (அ)

| | |
|---|---|
| என்னதாவி மேலையாய் | என் ஆத்மவஸ்துவிலே அபிநிவேசமுடையனாய்க் கொண்டு |
| ஏர் கொள் ஏழ் உலகமும் | அழகிய ஸகல லோகங்களிலும் |
| தங்கி | பூர்ணமாக வியாபித்து |
| முற்றும் ஆகி நின்ற | ஸகல பதார்த்தங்களும் தனக்கு ப்ரகாரமாம்படி நின்ற |
| சோதி ஞானம் மூர்த்தியாய் | சோதிமயமான ஞானத்தை ஸ்வரூபமாகவுடையவனே! |
| என்னது ஆவி | என் ஆத்மஸ்வரூபம் |
| உன்னதும் | நீயிட்ட வழக்காகவும் |
| உன்னது ஆவி | உன் ஆத்மஸ்வரூபம் |
| என்னதும் | நானிட்ட வழக்காகவுமான |
| இன்ன வண்ணமே நின்றாய் | இப்படியிலே நின்றாய்; |
| என் உரைக்க வல்லேன் | இதற்கு என்ன பாசுரமிட்டுச் சொல்லுவேன்?. |

* * *—எனக்காக ஸகலலோகங்களையும் வியாபித்து என்னையங்கீகரித்த உன் படி பேச்சுக்கு நிலமன்று என்கிறார்.

என்னதாவி மேலையாய் என்பதற்கு இரண்டுபடியாக நிர்வாஹம்;—என்னுடைய ஸத்தையைப்பெற்று அத்தாலே மிகுந்த ஆனந்தம் படைத்தவனே! என்றுதல்; என்னைப் பெறவேணுமென்கிற ஆவலையுடையவனே! என்னுதல். உள்ளதான சொல்வடிவம் இவ்விரண்டுவகை நிர்வாஹத்திற்கும் எங்ஙனே இடந்தருகின்றதென்னில்; என்னதாவி மேலையாய் என்பதற்கு என்னுடைய ஆவியின்மேலே யிருப்பவனே! என்பது பதப்பொருள்; மேலே காட்டிய இரண்டு வகையான கருத்தும் இதில் உறையும்; ஆசைப்பட்ட ஒரு வஸ்துவைப் பெற்றுவிட்டவன் விஷயத்திலும் பெற நினைப்பவன் விஷயத்திலும் இங்ஙனே சொல்லத்தகும். கீதையில் ஸததயுக்தாநாம் என்பதற்கு "ஸததயோகம் காங்க்ஷமாணாநாம்—ஸததயோகம் காங்க்ஷமாணாநாம்" என்று எம்பெருமானார் பொருள் பணித்ததும் இங்கு ஒருபுடை ஒப்புநோக்கத்தக்கது.

பெற்றுத் தீர்ந்துவிட்டதாகச் சொல்லுகிற அர்த்தமும், பெறவேணுமென்று ஆவல் கொண்டிருப்பதாகச் சொல்லுகிற அர்த்தமும் ஒன்றோடொன்று பொருந்தாதாதலால் மேலே காட்டிய இரண்டு நிர்வாஹங்களையும் விகல்பமாகக் கூறியிருப்பது எங்ஙனே பொருந்துமென்று சங்கை பிறக்கக்கூடும். இவ்வர்த்தங்களுக்குப் பொருந்தாமையொன்றுமில்லை. ஆழ்வார் விஷயத்திலே எம்பெருமான்பெற நினைத்திருக்கும் அளவுகள் பல பலவுண்டு; அவற்றில் பெற்றுத் தலைக்கட்டியவை சில; இனிப் பெறவேண்டியவை சில; எந்த வஸ்து பெற்றுத்தீர்ந்ததோ, அதிலேயே பெறவிருப்பமும் உள்ளதாகக் கூறினாலன்றோ விரோதமுள்ளது என்றுணர்க.

[ஏர்கோளேழுலகமும் இத்யாதி.] இதற்கும் இரண்டுபடியாக நிர்வாஹம்; என்னதாவி மேலையாய்! என்பதற்கு 'என்னுடைய ஸத்தையைப் பெற்று அத்தாலே மிகுந்த ஆனந்தம் படைத்தவனே! என்று பொருள் கொள்ளும் பக்ஷத்தில் அதற்குச் சேர இதற்கும் பொருள் கொள்ளவேண்டும்; ஏற்கெனவே எம்பெருமான் எங்கும் நிறைந்திருந்தாலும் இப்போது ஆழ்வாரைப் பெற்ற ப்ரீதியாலே அந்தவ்யாப்தி இப்போதே ஸபலமானதாக எம்பெருமான் நினைத்த நினைவு தோற்றச் சொல்லுகிறபடி. இதற்கு முந்தி வ்யாபகனன்றிக்கே இப்போது தான் வ்யாபகனானானென்றபடி. 'என்னதாவிமேலையாய்!' என்பதற்குக் கூறிய இரண்டாவது நிர்வாஹத்திற்குச் சேர, தம்மை அகப்படுத்திக் கொள்ளுகைக்காக எம்பெருமான் எங்கும் வியாபித்திருக்கிறானாகக் கூறுவதாய்ப் பொருள்கொள்ளவேணும். ஈடு;—"[ஏர் கொளித்யாதி.] இவரைப் பெற்ற ப்ரீதியாலே வ்யாப்தியும் புதுக்கணித்ததென்னுதல்; ஒருவனைப் பிடிக்க நினைத்து அவன் பக்கலுண்டான அபிநிவேசத்தாலே ஊரைவளைவாரைப் போலே, தம்மை அகப்படுத்துகைக்காக வ்யாப்தனானானென்றிருக்கிறாராதல்."

[உன்ன தென்ன தாவியும் இத்யாதி.] என் ஸ்வரூபம் நீ இட்ட வழக்கு, உன் ஸ்வரூபம் நானிட்ட வழக்கு என்பது தேர்ந்தபொருள். இவ்விடத்தை ஆளவந்தார் அருளிச் செய்யும்போது கேட்டிருந்த முதலிகளிலே சிலர் 'ஜீவாத்மாவின் ஸ்வரூபம் பரமாத்மா இட்ட வழக்கு என்றால் இதில் பொருந்தாமை யொன்றுமில்லை; பரமாத்மாவின் ஸ்வரூபம் ஜீவாத்மா இட்டவழக்கு என்கிறதே, இதுவென்? இது பொருந்துமோ?' என்றார்களாம். அப்போது ஆளவந்தார் அருளிச்செய்தபடி—"இவன் அவனிட்டவழக்கு என்கிற விஷயத்தில் கர்மம் தடையாக நிற்கவுங்கூடும்; ஸர்வேச்வரன் தன்னை இவனிட்ட வழக்காக்குமிடத்தில் தடை செய்வாரில்லை; ஆனபின்பு 'உன்னதாவி என்னது' என்பதுதான் நிர்விவாதம். 'என்னதாவி உன்னது' என்றதில் நீங்கள் விவாதப்பட்டால் படலாமேயல்லது 'உன்னதாவி என்னது' என்றதில் விவாதப்பட நியாயமில்லை" என்றும்.

இப்படி ஒரு நீராகக் கலந்து பரிமாறும் ப்ரணயித்வகுணம் என்னால் பேசித் தலைக் கட்டலாயிருந்ததோவென்று முடித்தாராயிற்று. .... .... .... (௫)

உரைக்கவல்லேனல்லேன் உன்னுலப்பில்கீர்த்திவெள்ளத்தின் *
கரைக்கணென்றுசெல்வன்நான் காதல்மையலேறினேன்*
புரைப்பிலாதபரம்பரனே! பொய்யிலாதபரஞ்சுடரே! *
இரைத்துநல்லமேன்மக்களேத்த யானுமேத்தினேன். (௬)

| | |
|---|---|
| புரைப்பு இலாத பரம்பரனே | புரையற்ற பரத்வம் பொருந்திய எம்பெருமானே! |
| பொய் இலாத | (என்னோடுண்டான கலவியில்) பொய்யில்லாத |
| பரம் சுடரே | பரஞ்சோதிப் பெருமானே! |
| உரைக்க வல்லேன் அல்லேன் | நான் ஒன்றும் சொல்ல சக்தியுடையேனல்லேன்; |
| உலப்பு இல் | முடிவில்லாத |
| உன் கீர்த்தி வெள்ளத்தின் | உனது ப்ரணயித்வ குணக் கடலினுடைய |
| கரைக் கண் | கரையிடத்து |
| நான் என்று செல்வன் | நான் என்றைக்கு அடியிடுவேன்? (ஒரு நாளும் அடியிடமாட்டேன்;) |
| காதல் | ப்ரேமத்தினால் |
| மையல் ஏறினேன் | பிச்சேறிக் கிடக்கிறேனத்தனை |
| நல்ல | விலக்ஷணர்களான |
| மேல் மக்கள் | நித்ய ஸூரிகள் |
| இரைத்து ஏத்த | பேராரவாரஞ்செய்து துதிக்க (அவ்வழியைப் பின்பற்றி) |
| யானும் ஏத்தினேன் | நானும் சிறிது துதித்தேனித்தனை. |

* * *—எம்பெருமானுடைய ப்ரணயித்வகுணம் தம்முடைய பேச்சுக்கு நிலமன்று என்பதை அழகுபட அருளிச்செய்கிறார். உரைக்கவல்லேனல்லேன்—உன்னுடைய ப்ரணயித்வ குணத்தை அநுபவித்தநுபவித்து உள்ள முருகுவேனத்தனையொழிய இன்னபடி யென்று பேசவல்லேனல்லேன் என்றபடி. முழுதும் பேச முடியாமற்போனாலும் பேசலாமளவு பேசினாலோவென்ன, உன் உலப்பில் கீர்த்திவெள்ளத்தின் கரைக்கண் என்று செல்வன் நான் என்கிறார்; உன்னுடைய ப்ரணயித்வ குணஸமுத்ரத்தின் கரையிலேதான் என்னால் அடியிடமுடியுமோ? என்கை. 'கடலினுள்ளே இறங்கமுடியுமா முடியாதா என்கிற விசாரம் ஒருபுறமிருக்கட்டும்; கடற்கரைதன்னில் சென்று நிற்கவும் ப்ரஸக்தியில்லையே என்கிற இச் சொல்லழகு சாலவும் ரஸிக்கத்தக்கது.

இங்ஙனே கரையருகும் செல்லப்போகாத விஷயத்தில் நீர் ஏதோபேசிக்கொண்டிருக்கிறீரே, இஃது என்ன? என்று எம்பெருமான் கேட்டனனாகக் கொண்டு காதல் மையலேறினேன் என்கிறார். ப்ரேமத்தாலே கலங்கினேன்; கலங்கினவர்களின் செயலுக்கு ஓர் அடைவுமுண்டோ என்றவாறு.

ஆழ்வீர்! உம்முடைய சொற்களை நோக்குமிடத்து, நீர் என்னுடைய குணக்கடலைக் கரைகண்டவராகத் தோற்றுகின்றீர்; இல்லையாகில் பெரிய பெரிய துதிமொழிகளைப்பேசப் புறப்பட்டிருக்கமாட்டீரே யென்று எம்பெருமான் திருவுள்ளம் பற்றினதாகக்கொண்டு, இரைத்து நல்ல மேன்மக்களேத்த யானுமேத்தினேன் என்கிறார்.

இங்கே ஈட்டு ஸ்ரீஸூக்திகள் இன்சுவையே வடிவெடுத்தவை; அவை வருமாறு:— "இவ்விஷயத்தில் நீர் ப்ரமிப்பானேன்? ப்ரமிப்பாருக்கு ஓர் ஆலம்பநம் வேண்டாவோ வென்ன, நித்ய ஸூரிகள் பித்தேறி ஏத்தக்கண்டேன். அத்தாலே செய்தேனென்கிறார். நித்ய ஸூரிகளோடு இவரோடு அவன்றன்னோடு வாசியற்றிறே இவ்விஷயமிருப்பது. ஸர்வஜ்ஞனாய் ஸர்வ சக்தியான தான் அறியப்புக்காலும்*தனக்கும் தன் தன்மையறிவரியனாயிறேயிருப்பது; தன்னையறியப்புக்க வேதங்கள் பட்டது படுமத்தனை தானும். [புரைப்பிலாத பரம்பரனே பொய்யிலாத பரஞ்சுடரே!] நீ ஸர்வஸ்மாத்பரனாயிருக்கிற இருப்பில் புரையில்லாதாப் போலே என்னோட்டைக் கலவியால் வடிவிற்பிறந்த புகரிலும் புரையின்றிக்கேயிருக்கிறவனே! அன்றிக்கே, நிரவதிகமான ப்ரணயித்வகுண ஸத்பாவத்தில் கண்ணழிவில்லாதாப் போலே என்னோட்டைக் கலவியிலும் பொய்யின்றிக்கே அத்தால் வந்தபுகர் வடிவிலே தோற்ற விருக்கிறவனே யென்னுதல்.........பரமபக்தியுக்தராய்க்கொண்டு கடல்கிளர்ந்தாப் போலே இரைத்துக்கொண்டு நித்யஸூரிகள் ஏத்தக்காண்கையாலே நானும் ஏத்தினேனல்லது, நான் சக்தனாய் ஏத்தினேனேனோவென்கிறார்." ... .... (9)

யானுமேத்தி ஏழுலகும்முற்றுமேத்தி * பின்னையும்
தானுமேத்திலும் தன்னையேத்தவேத்தவெங்கெய்தும்? *
தேனும்பாலும்கன்னலும் அமுதுமாகித்தித்திப்ப *
யானுமெம்பிரானையேயேத்தினேன் யானுய்வானே. (10)

| | | | |
|---|---|---|---|
| யானும் | எம்பெருமானருளால் அறிவுபெற்ற நானும் | எங்கு எய்தும் | முடிவு பெறுவது எது? (ஆகிலும்) |
| ஏத்தி | துதித்து, | யான் உய்வான் | நான் தரித்திருப்பதற்காகவே, |
| முற்றும் ஏழ் உலகும் ஏத்தி | எல்லாவுலகங்களும் ஒன்று கூடி யேத்தி, | தேனும் பாலும் கன்னலும் அமுதும் ஆகி தித்திப்ப | தேனும் பாலும் கன்னலும் அமுதும் போலே ரஸிக்க, |
| பின்னையும் | அதற்கு மேலே | | |
| தானும் ஏத்திலும் | ஸர்வஜ்ஞனாய் ஸர்வசக்தனான தானுங்கூடி ஏத்தினாலும் | யானும் எம்பிரானையே ஏத்தினேன் | நானும் எம்பெருமானையே ஏத்தினேன். |
| தன்னை ஏத்த ஏத்த | தன்னைத்துதிக்கத்துதிக்க | | |

* * *—ஒருவராலும் எல்லைகாணவொண்ணாதபடி அளவிறந்த பெருமையையுடைய பெருமானை நான் ஸத்தை பெறுவதற்காக ஏத்தினேனத்தனை யென்கிறார். யானுமேத்தி என்ற விடத்துள்ள உம்மையை உயர்வுசிறப்பும்மையாகக் கொள்ளலாம்; "மயர்வற மதிநலமருளினன்" என்று முதலடியிலேயே சொல்லும்படி அருள்பெற்ற நானும் என்றபடி. ஏழுலகும் முற்றும்—பேரறிவுடையார் சிற்றறிவுடையார் என்கிற வாசியில்லாமல் எல்லாரும் ஏத்துவது. பின்னையும் தானுமேத்திலும்=ஸர்வஜ்ஞனென்றும் ஸர்வசக்தனென்றும் பேர் பெற்றிருக்கின்ற எம்பெருமான் தானும் ஏத்துவது. இங்ஙனே எல்லாருங்கூடி யேத்தினாலும் முடிவுகாண்பதென்பதுண்டோ ?

இங்கே ஈடு;—மயர்வற மதிநல மருளப்பெற்ற தாழுமேத்துவது; விசேஷஜ்ஞரோடு அவிசேஷஜ்ஞரோடு வாசியறச் சிறியார் பெரியார் என்னாதே ஸர்வரும் ஏத்துவது;

ஸ்வதஸ் ஸர்வஜ்ஞனுய், தொடங்கின காரியம் செய்து தலைக்கட்டுகைக் கீடான ஸர்வசக்தி யுக்தனுன தானும் எத்துவது; இப்படியெல்லாரும் ஒருமிடருயேத்தினுலும், பின்னையும் எத்தின விடம் அளவுபட்டு எத்தாதவிடம் விஞ்சியாயிற்றிருப்பது விஷயம். அந்யபரரோடு அநந்ய பரரோடு அளவுடையாரோடு அளவிலிகளோடு வாசியில்லை விஷயத்தை எல்லைகாண வொண்ணுமைக்கு.''

இப்படியறிந்து வைத்தும் எத்துகையிலே நீர் பிரவர்த்தித்தது என் ? என்ன, விஷயம் பரமரஸ்யமாக இருப்பதனுலும், இதிலே கைவைக்கும்படி அவன் பண்ணின மஹோபகாரத்தைச் சிந்தை செய்ததனுலும் எத்தப்புகுந்தே னென்கிருர் பின்னடிகளினுல். எத்தாதிருக்கில் பிழைத்திருக்க மாட்டாமையாலும் எத்தினேனென்கிருர் யான் உய்வான் என்பதனுல். ... ... ... ... ... (ய)

உய்வுபாயம்மற்றின்மைதேறிக் கண்ணனேண்கழல்கள்மேல் *
செய்யதாமரைப்பழனத் தென்னன்குருகூர்ச்சடகோபன் *
பொய்யில்பாடலாயிரத்துள் இவையும்பத்தும்வல்லார்கள் *
வையம்மன்னிவீற்றிருந்து விண்ணுமாள்வர்மண்ணூடே. (கக)

| | | | |
|---|---|---|---|
| மற்று | வேறு வழியினுல் | சடகோபன் | ஆழ்வார் (அருளிச் செய்த தான) |
| உய்வு உபாயம் இன்மை | தரிக்கவிரகில்லாமையை | பொய் இல் பாடல் ஆயிரத்துள் | யதார்த்தம் பொருந்திய ஆயிரத்தினுள்ளும் |
| தேறி | துணிந்து | இவை பத்தும் | இப்பத்துப் பாசுரங்களையும் |
| கண்ணன் | எம்பெருமானுடைய | வல்லார்கள் | ஓதவல்லவர்கள் |
| ஒண் கழல்கள் மேல் | அழகிய திருவடிகள் விஷயமாக, | வையம் | இப்பூமண்டலத்திலே |
| செய்ய தாமரை பழனம் | செந்தாமரைகள் நிறைந்த நீர்நிலங்களையுடைய | மன்னி வீற்றிருந்து | நெடுங்காலம் பொருந்தி யிருந்து |
| தென் நன் குருகூர் | தென் திசையிலுள்ள அழகிய திருக்குருகூர்க்குத் தலைவரான | மண்ணூடே | இந்நிலத்திலேயே |
| | | விண்ணும் ஆள்வர் | பரம பதத்தையும் ஆளப் பெறுவர்கள். |

* * *—இத்திருவாய் மொழி கற்ருர்க்குப் பயனுரைத்துத் தலைக்கட்டுகிறது இப் பாட்டு. இத்திருவாய் மொழியை ஓதுமவர்கள் உபய விபூதியையும் தாம் இட்ட வழக்காக நிர்வஹிக்கப் பெறுவர்களென்கிருர்.

இத்திருவாய்மொழியினுல் எம்பெருமானுடைய ப்ரணயித்வகுணத்தைப் பேசப் புகுந்தது, பேசித் தலைக்கட்டலாமென்கிற எண்ணத்தினுலன்று; இங்ஙனே பேசினுலல்லது வேறொன்ருலே தரிக்க வொண்ணுமையாலே பேசிற்றென்பதை வெளியிடுகிருர் உய்வுபாயம் மற்றின்மைதேறி யென்பதனுல்.

பொய்யில் பாடலாயிரம்—வால்மீகிபகவானுக்குக் காட்சிதந்த நான்முகக் கடவுள் " நதே வாகநுதா காவ்யே காசிதத்ர பவிஷ்யதி । குரு ராமகதாம் புண்யாம் ச்லோகபத்தாம் மநோரமாம்—நதே வாகந்ருதா காவ்யே காசிதத்ர பவிஷ்யதி, குரு ராமகதாம் புண்யாம் ச்லோகபத்தாம் மனோரமாம்'' என்று அருள் செய்ததனுல் ஸ்ரீராமாயணம் பொய்யில் பாடலாக அமைந்ததாயிற்று. "வேதநூல் ஓதுகின்றதுண்மையல்லதில்லை மற்றுரைக்கிலே'' (திருச்சந்தவிருத்தம்) என்று வடமொழிவேதத்திற்குச் சொல்லப்பட்ட ஸத்யவாதித்வம் தமிழ்வேதத்திற்கும் குறையற்றதென்க.

வையம்மன்னி வீற்றிருந்து மண்ணூடே விண்ணுமாள்வர்—"பூமியிலே எம்பெருமானைப்போலே ஸ்ரீவைஷ்ணவ ஸ்ரீயோடே நெடுங்காலமிருந்து இங்கே யிருக்கச்செய்தே பரமபதம் தங்கள் சிறுமுறிப்படி செல்லும்படி ஆள்வர்கள்; அங்கேபோனல் 'ஆண்மின்கள் வானகம் ஆழியான்தமர்' என்கையன்றிக்கே இங்கேயிருக்கச்செய்தே தாங்களிட்ட வழக்காகப்பெறுவர்." என்பது நம்பிள்ளையீடு.

நஞ்சீயர் பட்டர் திருவடிகளில் ஆச்ரயித்தபின்பு நெடுங்காலம் பட்டர்பாடே அர்த்த விசேஷங்கள் கேட்டு இன்புறவேணுமென்று இருந்தார், இருக்கையில் பட்டர் திருநாட்டுக் கெழுந்தருள நேர்ந்துவிட்டது; இந்த வருத்தத்தினல் நஞ்சீயர் "வையம்மன்னி வீற்றிருந்து" என்ற இவ்விடத்தை அருளிச்செய்யும்போது உருத்தோறும் வெகுநிர்வேதப்படுவராம்.

பட்டர் இருபத்தெட்டு (அல்லது 32) பிராயத்திலே திருநாட்டுக்கெழுந்தருளினரென்று சிலர் கூறுவதுண்டு. இதற்குப் போதுமான ப்ரமாணம் கிடைத்திலது; ஆராய்ந்து பார்க்குமளவில்; பட்டர் ஐம்பது ஐம்பத்தைந்து பிராயம் எழுந்தருளியிருந்தார் என்று சொல்வதற்குச் சான்றுகள் உள்ளன. நூற்றிருபது திருநக்ஷத்திரம் எழுந்தருளியிருந்த எம்பெருமானரை நோக்குமிடத்து பட்டர் எழுந்தருளியிருந்தது மிகவும் ஸ்வல்பகாலம் என்று சொல்லலாம்படியுள்ளது. ... .... ... (கக)

மூன்றாந் திருவாய்மொழியுரை முற்றிற்று.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## நான்காம்பத்து நான்காந் திருவாய்மொழி — மண்ணையிருந்துதுழாவி.

உரையவதாரிகை.—ஆழ்வாருடைய பரமவைஷ்ணவத்வத்தை வெளியிடுவதாயிற்று இத்திருவாய்மொழி. எம்பெருமானுடைய ஸம்பந்தம்பெற்ற பொருள்களையும் எம்பெருமானுக்குப் போலியான பொருள்களையுங்கண்டு அப்பெருமான்றன்னையே கண்டதாகக்கொண்டு களிக்கையே பரமவைஷ்ணவத்வமாகும். அந்த நிலைமையே ஆழ்வார்க்கு இத்திருவாய்மொழியில் உண்டாயது.

கீழ்த்திருவாய்மொழியில் எம்பெருமானுடைய ப்ரணயித்வகுணத்தைப் பேசிப் பரமானந்தம் பொலிய நின்றாராழ்வார்; அந்த நிலைமையைக்கண்ட எம்பெருமான் அந்த ரஸத்தை அரையாறுபடுத்தி ஸாத்மிப்பிக்கைக்காக அந்த ஸம்ச்லேஷத்தைச் சிறிது குறைத்து நின்றான்; அதனால் ஆழ்வார்க்கு ஆற்றாமை மீதூர்ந்தது. பணமுடிப்பைப் போக்கடித்தானொருவன் அத்தோடு போலியான முடிப்புகளெல்லாவற்றையும் அவிழ்த்தவிழ்த்துப் பார்க்குமாபோலே அவனோடொத்த பதார்த்தங்களையும் அவனோடு ஸம்பந்தமுள்ள பதார்த்தங்களையு மெல்லாம் அவனாகக்கொண்டு ப்ரமித்துக் கிட்டிப் பார்த்துப் பிச்சேறுகிறபடியாய்ச் செல்லுகிறது இத்திருவாய்மொழி.

பெருமாள் பஞ்சவடியில் பிராட்டியைப் பிரிந்தபோது "𑌕𑍍𑌵𑌚𑌿𑌦𑍁𑌦𑍍𑌭𑍍𑌰𑌮𑌤𑍇 𑌵𑍇𑌗𑌾𑌤𑍍 𑌕𑍍𑌵𑌚𑌿𑌦𑍍𑌵𑌿𑌭𑍍𑌰𑌮𑌤𑍇 𑌬𑌲𑌾𑌤𑍍। 𑌕𑍍𑌵𑌚𑌿𑌨𑍍𑌮𑌤𑍍𑌤 𑌇𑌵𑌾𑌭𑌾𑌤𑌿 𑌕𑌾𑌨𑍍𑌤𑌾𑌨𑍍𑌵𑍇𑌷𑌣𑌤𑌤𑍍𑌪𑌰𑌃 = க்வசிதுத்ப்ரமதே வேகாத் க்வசித் விப்ரமதே பலாத். க்வசிந் மத்த இவாபாதி காந்தாந்வேஷணதத்பர:" என்று வால்மீகி கூறினபடியே பட்டபாடுகளெல்லாம் இப்போது ஆழ்வார் படுகிறாராயிற்று.

நம்பிள்ளையீடு;—" பிராட்டியைப் பிரிந்த வனந்தரம் ஆற்ருமையாலே மேல் நோக்கிப் பார்த்து விலங்க ஸஞ்சரிப்பது, அதுதானும் மாட்டாதொழிவது, ஒரு வ்ருக்ஷத்தில் நின்றும் வ்ருக்ஷாந்தரத்திலே சென்று கிட்டுவது, மைதிலியைக் கண்டிகோளோவென்று கேட்பது, ஆறு பெண்ணாறுக ளொன்றின்றிக்கே தேடுவதாய் அவர் பட்டாப்போலே இவளும் அப்படியே படுகிருளிப்போது. இப்படி நோவுபடுகிறவிவள் தசையை அநுஸந்தித்த திருத்தாயார் இவள் படுகிற பாடுகளையும் இவள் சொல்லுகிற வார்த்தைகளையுஞ் சொல்லி, இதுகண்டு தான் பொறுக்கமாட்டாமே நோவுபடுகிறபடியுஞ் சொல்லி இவள் கை வாங்குமளவாக, அவன் வந்து முகங்காட்டி ஆச்வஸிப்பிக்க தரித்ததாய்த் தலைக்கட்டுகிறது இத்திருவாய்மொழி."

மண்ணையிருந்துதுழாவி வாமனன்மண்ணிதுவென்னும்*
விண்ணைத்தொழுதவன்மேவு வைகுந்தமென்றுகைகாட்டும் *
கண்ணையுண்ணீர்மல்கநின்று கடல்வண்ணனென்னுமன்னே ! * என்
பெண்ணைப்பெருமயல்செய்தாற்கு என்செய்கேன் பெய்வளையீரே ! (1.)

| | | | |
|---|---|---|---|
| பெய் வளையீர் | கையில் வளையணிந்த மாதர்காள்!, | கை காட்டும் | தன் கைகளாலே (பிறர்க்கும்) காட்டா நின்ருள்; |
| மண்ணை இருந்து துழாவி | (என் மகளானவள்) பூமியைத் துழாவி | உள் நீர் | அகவாயில் கண்ணீரானது |
| இது வாமனன் மண் என்னும் | இது (எம்பெருமான்) வாமனனுய் அளந்து கொண்ட மண்' என்று கூறுகின்ருள்; | கண்ணை மல்க நின்று | கண்ணையும் விஞ்சிப் புறப்படும்படி நின்று |
| விண்ணை தொழுது | ஆகாசத்தை (நோக்கி) அஞ்சலி பண்ணி | கடல் வண்ணன் என்னும் | கடல்போலும் நிறத்தை யுடையவன் என்று சொல்லுகின்ருள்; |
| அவன் மேவு வைகுந்தம் என்று | 'அவ்வெம்பெருமான் நித்ய வாஸம் பண்ணுகிற ஸ்ரீ வைகுண்டம்' என்று சொல்லி | அன்னே | அம்மே! |
| | | என் பெண்ணை பெரு மயல் செய்தார்க்கு | என்னுடைய மகளை இப்படி அதிசயமான பிச்சேறும்படி பண்ணினவருக்கு |
| | | என் செய்கேன் | யாது செய்வேன்?. |

* * *—பராங்குச நாயகியின் திருத்தாயார் மகளுடைய செய்தியை வினவ வந்தவர்களுக்கு அறிவியா நின்றுகொண்டு ' இப்படி யிவளை எம்பெருமான் பிச்சேற்றினனே! இதற்கு நான் என் செய்வேனென்கிருள். 'பண்டு எம்பெருமான் இவ்வுலகத்தை அளந்தருளினபோது அவன் திருவடிகளோடே ஸம்பந்தம் பெற்றது இந்த மண்' என்று சொல்லி ஆழ்வார் போதுபோக்குகிறபடியை முதலடி தெரிவிக்கும். உலகத்தில் எல்லாரும் மண்ணை மண்ணாகவே நினைத்துக்கிடப்பர்கள் ; ஆழ்வார் அங்ஙனன்றிக்கே அதுதன்னிலே ஒரு விசேஷ ப்ரதிபத்தி பண்ணுகிறபடி.

விச்வாமித்ரமுனிவன் யாகரக்ஷணார்த்தமாக ஸ்ரீராம லக்ஷ்மணர்களை அழைத்துச் செல்லாநிற்கையில், பெருமாள் ஒரு சோலையைக்கண்டு 'இதுஎன்ன' என்றுகேட்க, முனிவன் "இஹ ராம மஹாபாஹோ—அயம் ஸித்தாச்ரமோ நாம" என்று தொடங்கிச் சொல்லி வந்து "ததாச்ரமபதம் தாத தவாப்யேதத் யதா மம—மயா து பக்த்யா தஸ்யைவ வாமநஸ்யோப புஜ்யதே." என்ருன்; இது முன்பு ஸித்தாச்ரமமாய் ஸ்ரீவாமநமூர்த்தி எழுந்தருளி யிருந்த தேசமாயிற்று; அப்பெருமான் இவ்விடத்தைவிட்டு அகன்ற பின்பு அவன் பக்கல் பக்தியாலே விடமாட்டாமல் அம்மண்ணை மோந்து கொண்டு கிடக்கின்றேன்—என்பது விச்வாமித்ரன் சொன்ன வார்த்தையின் கருத்து. அபிநிவேசமுடையார்படி இதுவாயிற்று.

நிலத்திற்குக் குணம் மணமென்று சாஸ்த்ரஜ்ஞர்களின் கொள்கை; "கந்தவதீ ப்ருதிவீ—கந்தவதி ப்ருதிவி" என்பர்கள்; எம்பெருமானுடைய நறுமணம் மிக்க திருவடியின் ஸம்பந்தம் பெற்றதனால்தான் மண்ணுக்கு மணமுண்டாயது என்று பராங்குச நாயகியின் உபந்யாஸம் போலும்.

விண்ணைத்தொழுது அவன் மேவு வைகுந்தமென்று கைகாட்டும்—மண்ணைத்துழாவிப் பேசினபடி கீழே சொல்லிற்று; விண்ணைத்தொழுது பேசுகிறபடி இதில் சொல்லுகிறது. ஆகாசத்தை நோக்கித் தொழுது 'எம்பெருமான் நித்யவாஸம் பண்ணுகிற திருநாடு அதோ பாருங்கள்' என்று சொல்லிக் கைகாட்டுகின்றாளென்கை.

இங்கே ஈட்டு ஸ்ரீஸூக்தி;—"ஆர்ஷ்டிஷேணனாச்ரமத்திலே நின்று பரமபதம் கண்டார்களிறே சிலர்" என்றுள்ளது. மஹாபாரதத்தில் வநபருவத்தில் நூற்றறுபதாமத்யாயத்தில் ஆர்ஷ்டிஷேணனென்னும் ராஜர்ஷிக்கும் தருமபுத்திரர்க்கும் ஸம்வாதம் நடைபெறுகின்றது. அங்கு "ஸுபக்ஷா வாயுபக்ஷாஶ்ச—அப்பக்ஷா வாயுபக்ஷாச் ச" என்கிற பதினாறாவது சுலோகம் தொடங்கிச்சொல்லி வருகையில் இவ்விஷயம் காணத்தக்கது. "அஸ்யாதிக்ரம்ய ஶிகரம் கைலாஸஸ்ய யுதிஷ்டிர। கதி: பரமஸித்தாநாம் தேவர்ஷீணாம் ப்ரகாஶதே—அஸ்யாதிக்ரம்ய சிகரம் கைலாஸஸ்ய யுதிஷ்டிர, கதி: பரமஸித்தாநாம் தேவர்ஷீணாம் ப்ரகாசதே." என்கிற ச்லோகம் இங்கு விவக்ஷிதமாயிருக்கலாம்போல் தோன்றுகிறது.

[கண்ணையுள் இத்யாதி] ஹஸ்தசேஷ்டையாலே திருநாட்டைக் காட்டின வத்தனையொழிய, திருநாட்டில் அவனிருக்கிறபடியைக் காணப்பெறாமையாலே கண்ணீர்மல்க நின்று தன்னாற்றாமையாலே திருவடிவத்தை நினைத்துக் கடல்வண்ணனே யென்கிறாள். கடல் போன்ற திருமேனியைக் காட்டியன்றோ என்னை இங்ஙனே வியாமோஹிக்கச் செய்தது என்று தெரிவித்தவாறு.

[என்பெண்ணை இத்யாதி] இங்ஙனே என்மகளுக்கு லோகவிலக்ஷணமான வியாமோஹத்தை உண்டுபண்ணின மஹாநுபாவன் விஷயத்தில் நான் செய்யக்கூடியது யாது? அவரை இங்குவந்து சேரும்படி செய்யவல்லேனோ? அவர் வருமளவும் ஆறியிருக்கும்படி இவளுக்குச் சொல்லவல்லேனோ? ஒன்றும் மாட்டுகிறிலேன் என்று கருத்து. ... (க)

பெய்வளைக்கைகளைக்கூப்பிப் பிரான்கிடக்கும்கடலென்னும் *
செய்யதோர்ஞாயிற்றைக்காட்டிச் சிரீதரன்மூர்த்தியீதென்னும் *
நையும்கண்ணீர்மல்கநின்று நாரணனேயென்னுமன்னே! * என்
தெய்வவுருவிற்சிறுமான் செய்கின்றதொன்றறியேனே. (2)

| | | | |
|---|---|---|---|
| | (என் மகளானவள்) | கடல் என்னும் | கடல் (இது) என்று சொல்லுவாள்; |
| பெய் வளை கைகளை | (பலகாலும் கழன்று பிறகு) இடப்படாநிற்கிற வளைகளையுடைய தனது கைகளை | செய்யது ஓர் ஞாயிற்றை காட்டி | சிவந்த ஒளியில் ஒப்பற்றவனான ஸூரியனைச் சுட்டிக் காட்டி |
| கூப்பி | குவித்து அஞ்சலி பண்ணி (கடலைப் பார்த்து) | சிரீதரன் மூர்த்தி ஈது என்னும் | 'பெரிய பிராட்டியாரோடே கூடியுள்ள எம்பெருமானது வடிவு இது' என்று சொல்லுவாள்; |
| பிரான் | உபகார சீலனான எம்பெருமான் | | |
| கிடக்கும் | (எனக்கு முகங்காட்டப்) பள்ளிகொண்டிருக்கிற | நையும் | (தான் அவனைக்கிட்டி அநுபவிக்கப்பெறாமையாலே) வாடுவாள்; |

| | |
|---|---|
| **கண் நீர் மல்க நின்று** | (அந்த வாட்டத்தினாலே) கண்ணீர் பெருக நின்று |
| **நாரணன் என்னும்** | 'நாராயணன்' என்று வாய் வெருவுவாள், |
| **அன்னே** | அம்மே! |
| **என் தெய்வம் உரு வில் சிறுமான்** | என்னுடைய (நித்யஸூரி கள் வடிவுபோல) அப்ராக்ருதமான வடிவை யுடையளாய் மானபோல இளையபருவத்தையுடைய ளான இவள் |
| **செய்கின்றது ஒன்று அறியேன்** | செய்கின்ற காரியங்கள் ஒன்றும் அறிகிலேன். |

* * *—எம்பெருமானோடு ஸம்பந்தமுடைய கடலையும் ஸூர்யனையுங்கண்டு பராங்குசநாயகி சொல்லுமவற்றைத் திருத்தாயார் கூறுகின்றார். திவ்யமான வடிவுபடைத்த விவள் செய்வதொன்றும் எனக்கு இன்னதென்று தெரிகின்றதில்லை யென்கிறார்.

பெய்வளைக் கைகளைக்கூப்பி—இப்போது ஆழ்வார்க்கு விச்லேஷதசையன்றே செல்லுகின்றது; இப்பிரிவு நிலைமையில் கையில்வளைகள் கழன்றனவாகப் பேசுகையன்றே முறைமை; பெய்வளைக் கைகளென்னலாமோ? என்று சங்கை தோன்றும்; இந்த சங்கையை நம்பிள்ளை திருவுள்ளத்திற்கொண்டு ஸமாதானமாக அருளிச்செய்கிறார்—"கடல் வண்ணன் என்றவாறே, கழன்ற வளைகளொழியச் சரிந்தவளைகள் பூரித்தனகாணும்" என்று. இவ்விடத்தில் ஒரு சுலோகம் நினைக்கத்தக்கதுண்டு; அதாவது "யாமி நயாமீதி யவெ வஒதி வ-ஃரஷூாஃ க்ஷணெ ந தநு ஹ்யா: ஶுதா நிவ-ரொவஷயாநி சுவராணிவ-நஷுசைவஒுதாநி—யாமி நயாமீதி தவே வததி புரஸ்தாத் க்ஷணேந தந்வங்க்யா:, களிதாநி புரோவலயாநி அபராணி புநஸ் ததைவ தளிதாநி." என்பதாம். (இதன் கருத்து.) கையில் பலவளைகளை அணிந்து கொண்டிருந்த நாயகியோடு நாயகன் பேசிக்கொண்டிருக்கும்போது அவளை நோக்கி யாமி என்றான்; வெளியூருக்குப் போவதாக இருக்கிறேன் என்றபடி. இங்ஙனே பிரிவை ப்ரஸங்கித்தவாறே அக்காதலி பிரிவு வந்திட்டதாகவே கருதி அப்போதே மேனி மெலிந்து கை ஈர்க்குப்போலேயாகி வளைகள் சரிந்துவிழத் தொடங்கின; அந்நிலையைக்கண்ட காதலன் அவளுடைய பிரிவாற்றாமையைக் கண்டு நொந்து, தான் பிரிந்து செல்வது தகாதென்று துணிந்து நயாமி என்றான்; இதை இரண்டு சொற்களாகக் கொண்டால் 'நான் பிரிந்து போவேனல்லேன்' என்று பொருளாகும்; ஒரே சொல்லாகக் கொண்டால் 'உன்னையும் உடனழைத்துக்கொண்டு போகிறேன்' என்று பொருளாகும். இங்கே ஏகப்ரயோகத்திலே இரண்டு பொருளும் விவக்ஷிதமாகலாம். காதலன் இங்ஙனே சொன்னதைக்கேட்ட காதலி அந்த க்ஷணத்திலேயே பிரிவாற்றாமைத்துயர் தொலையப்பெற்று உடல் பூரிக்கப்பெற்றதனால் முன் க்ஷணத்திலே கழன்றொழிந்த வளைகள்போக சேஷித்தவை (உடல் பூரிப்பாலே) படீலென்று வெடித்து விழுந்தொழிந்தனவாம். இந்த ரீதியில் விச்லேஷ தசையில் இருக்கின்ற பராங்குச நாயகிக்குக் கையில்வளை பெய்யப்பெற்றிருத்தல் கூடுமோ? என்று சங்கை; விச்லேஷ தசையா யிருக்கச்செய்தேயும் (கீழ்ப்பாட்டில்) கடல்வண்ணனென்று தலைவனது திருநாமத்தை உச்சரிக்கப்பெற்ற உவப்பினால் சிலவளைகள் கையில் தங்கியிருந்தன வென்று சங்காபரிஹாரம் செய்ததாயிற்று.

அஞ்ஜலி மாறாதே யிருந்தாள்; கடலோசைவந்து செவிப்பட்டது; கண்ணுக்கு இலக்காக வேண்டிய எம்பெருமான் காதுக்கு இலக்கானதாகக் கருதினாள்; கடலோசை வழியாய்க் கடலை நினைத்துக் கடல்வண்ணனான எம்பெருமானை நினைத்து, அப்பெருமான் பள்ளி கொண்டருளுங் கடலன்றே இது! என்னா நின்றாள். பிரான் என்றது இராமபிரான் என்றபடியாய், அவன் ஒரு பிராட்டியைப் பெறுதற்காகக் கடற்கரையிலே தரைக்கிடை கிடந்த வாற்றை நினைத்துப் பிரான்கிடக்குங்கடல் என்றதாகவுங் கொள்ளலாம்.

செய்யதோர் ஞாயிற்றைக் காட்டிச் சிரீதரன்மூர்த்தி யீதென்னும் = இரவெல்லாம் கடலோசையோடே வருந்திக்கிடந்து, பொழுதுவிடிந்தவாறே ஸூர்யனைக் கண்டதும் 'ஸ்ரீதரனுடைய வடிவு இது' என்கின்றாள். கீழே கடல்வண்ணனாக அநுஸந்திக்கப்பட்ட எம்பெருமானை இப்போது ஸூர்யனாக அநுஸந்திப்பதற்கு, என்ன பொருத்தம்? என்று சங்கை பிறக்கும். இங்கு ஆறாயிரப்படி யருளிச்செயல் காண்மின்;—"எம்பெருமானும் பிராட்டியும், ஆதித்யனும் அவனுடைய ப்ரபையும்போல இருக்கையாலே, அந்த ஆதித்யனைக்காட்டி ஸ்ரீதரன் மூர்த்தியீதென்னும்" என்பதாம்.—ஸ்ரீ ராமாயணத்தில் ராவணனை நோக்கிப் பிராட்டி சொல்லுகையில் "அநந்யா ராகவேணாஹம் பாஸ்கரேண ப்ரபா யதா" என்றாள்; ராவணவதத்திற்குப் பிறகு பிரமன் முதலிய தேவர்களை நோக்கி ஸ்ரீராமபிரான் சொல்லுகையில் "அநந்யா ஹி மயா ஸீதா பாஸ்கரேண ப்ரபா யதா" என்றான். இங்ஙனே திவ்ய தம்பதிகளின் திருவாக்கினால் எம்பெருமான் ஸூர்யனோடொப்பப் பரிகணிதனானமையால் ஸூர்யனைப் பார்க்கும்போது சிரீதரன் நினைவுக்கு வரக் குறையில்லை. "ப்ரபா ப்ரபாவான்களைக் கண்டவாறே அவளுமவனுமாக இருக்குமிருப்பை நினையா நின்றாள்." என்பது ஈடு முப்பத்தாறாயிரம்.

ஆசார்ய ஹ்ருதயத்தில் "பரவியேழொருகாலுடைய தேரிலே" என்று தொடங்கியுள்ள சூர்ணிகையில் "சிரீதரன்மூர்த்தி யீதென்னும்" என்கிற இந்தப் பாசுரம் எடுத்தாளப்பட்டுள்ளது. அவருடைய திருவுள்ளத்தின்படி பார்க்குமளவில், "த்யேயஸ் ஸதா ஸவித்ரு மண்டல மத்யவர்த்தீ நாராயண:" என்கிறபடியே எம்பெருமான் ஸூர்யமண்டல மத்யஸ்தனானதலால் அதுபற்றி "செய்யதோர் ஞாயிற்றைக் காட்டிச் சிரீதரன்மூர்த்தி யீதென்னும்" என்றதாகக் கொள்ளலாம்.

கண்ணீர்மல்க நின்று நையும் = சிரீதரன் என்னும்படியே புருஷகாரபூதையான ஸ்ரீ மஹாலக்ஷ்மி அருகேயிருக்கச் செய்தேயும் பேறிழந்த நான் இனி யார் புருஷகாரமாகப் பெறவிருக்கிறேனென்று உடைகுலைப்படா நின்றாள். ஸ்ரீமந் நாராயணனென்று கூடச் சொல்லமாட்டாதே நாரணன் என்கின்றாள்.

எம்பெருமானுக்குப் போலியான பொருள்களையும் அவனோடு தொடர்புள்ள பொருள்களையும் அநுஸந்திக்க வநுஸந்திக்க, நித்யாநுபவசாலிகளான நித்ய ஸூரிகளின் வடிவில் பிறக்கும் புகர் இவட்குப் பிறக்கின்றமையைத் தாய் தெரிவிக்கின்றாள் என் தெய்வ வுருவிற் சிறுமான் என்பதனால்.

செய்கின்றதொன்று அறியேன் = இவள் தொடங்குவது என்ன? தலைக்கட்டுவது என்ன? என்பதொன்று மறிகின்றிலேனென்றபடி. ... ... ... (உ)

அறியும்செந்தீயைத்தழுவி அச்சுதனென்னும்மெய்வேவாள் *
எறியும்தண்காற்றைத்தழுவி என்னுடைக்கோவிந்தனென்னும் *
வெறிகொள்துழாய்மலர்நாறும் வினையுடையாட்டியேன்பெற்ற *
செறிவளைமுன்கைச்சிறுமான் செய்கின்றதென்கண்ணுக்கொன்றே. (ங)

| | | | |
|---|---|---|---|
| வினையுடை யாட்டியேன் பெற்ற | கொடுவினையேனாகிய நான் பெற்ற, | அறியும் | சுடுமென்று எல்லாராலும் அறியப்பட்ட |
| செறி வளை முன் கை சிறு மான் | நெருங்கின வளையல்களை யணிந்த முன்கைகளையுடைய இவ்விளம் பெண்ணானவள், | செம் தீயை தழுவி | சிவந்த நெருப்பைத் தழுவி |
| | | அச்சுதன் என்னும் | 'எம்பெருமான்' என்கிறாள்; |
| | | மெய் வேவாள் | உடம்பு வேகின்றிலள்; |
| | | எறியும் | வீசுகின்ற |

| | | | |
|---|---|---|---|
| தண் காற்றை தழுவி | குளிர்ந்த காற்றைத் தழுவி | நாறும் | மணக்கப் பெற்றிருக்கின்றாள்: |
| என்னுடை கோவிந் தன் என்னும் | 'என்னுடைய கண்ணன்' என்கிறாள்; | செய்கின்றது | (இங்ஙனே இவள்) செய்கின்ற தொழில்கள் |
| வெறிகொள் | பரிமளம்மிக்க | என் கண்ணுக்கு ஒன்றே | என் கண்களுக்கு ஒன்று தானா? பலபல. |
| துழாய் மலர் | திருத்துழாய் மலர்கள் | | |

* * *—மகளுடைய அதிப்ரவ்ருத்திகளைச் சொல்லப் புகுந்து, இவற்றுக்குக் கணக்கில்லையென்கிறாள். எம்பெருமானுடைய திருவடிவைச் சொல்லுமிடங்களில் "தேஜஸாம் ராசிம் ஊர்ஜிதம்" என்றும், "குழுமித் தேவர்குழாங்கள் கைதொழச் சோதி வெள்ளத்தினுள்ளே யெழுவதோருரு" என்றும் தேஜ:புஞ்ஜமாகவே சொல்லுவர்கள். பராங்குச நாயகியானவள் செவ்விய தீயைக் காணும்போது அதனை அச்சுதனாகவே ப்ரதிபத்தி பண்ணித்தழுவுகின்றாள்; அந்த ப்ரதிபத்தியின் சுத்தியாலே, மெய்வேவாள்—உடம்பில் தாஹமுண்டாவது கிடையாது. அக்னிதேவதை தன் காரியத்தைச் செய்யாதிருக்குமோவென்னில், ப்ரஹ்லாதாழ்வானுக்குச் செய்தாலன்றோ பராங்குசநாயகிக்குச் செய்வது. "தாதைஷ வஹ்நி: பவநேரிதோபி ந மாம் தஹதி அத்ர ஸமந்ததோஹம். பச்யாமி பத்மாஸ்தரணஸ்த்ருதாநி சீதாநி ஸர்வாணி திசாம் முகாநி." என்றானிறே ப்ரஹ்லாதாழ்வான். என்னை நெருப்புச் சுடுகின்றதில்லையே யென்றான்; அதுபோலேயாயிற்று இதுவும்.

எறியுந் தன்காற்றைத் தழுவி யென்னுடைக் கோவிந்தனென்னும்=வீசுகிற குளிர்ந்த காற்றை, பசுமேய்த்துவிட்டுத் தன்னோடே கலக்க வருகிற க்ருஷ்ணனாகக்கொண்டு தழுவப் ப்ரீதியுள்ளடங்காமையாலே என்னுடைய கோவிந்தன் என்கிறாள்.

வெறிகொள் துழாய்மலர் நாறும்=திருத்துழாய்ப்பரிமளம் கமழ்கின்றது தலைமகளிடத்து. பிரிவு நிலைமையில் திருத்துழாய் நறுமணம் கமழ ப்ரஸக்தியேதென்னில்; இதற்கு முன் ஸம்ச்லேஷ தசையிலுண்டான பரிமளம் பத்தெட்டு குளிக்கு நிற்குமே. அன்றியும், இரண்டாமடியிற் கூறியபடி, எம்பெருமான் காற்றோடே கலந்து புகுந்து கலவிசெய்ததாகவுங் கூடும்.

வினையுடையாட்டியேன் பெற்ற=நல்வினை யென்றாவது தீவினை யென்றாவது சிறப்பித்துக் கூறவில்லை; ஆயினும் நிர்வேத ப்ரகரணமாகையாலே தீவினையுடையேன் என்றே பொருள்படும்; பட்டாலும், இப்படி பகவத் விஷயத்தில் அவகாஹிக்கும்படியான பெண்ணைப் பெற்றது நல்வினையின் பயனாகவே உள்ளூறக் கருதத்தக்கதாதலால் நல்வினையாட்டியேன் என்பதே உள்ளுறை பொருளாம். உண்மையில் தாயின் நிலைமையும் ஆழ்வார்க்கே உள்ளதாதலால் இவ்வினையுடைமை ஆழ்வார்க்கேயாகும்.

ஒன்றே?—ஒன்றல்ல, பல என்றபடி. ... .... ... (௩)

ஒன்றியதிங்களைக்காட்டி ஒளிமணிவண்ணனேயென்னும் *
நின்றகுன்றத்தினைநோக்கி நெடுமாலே! வாவென்றுகூவும் *
நன்றுபெய்யும்மழைகாணில் நாரணன்வந்தானென்றாலும் *
என்றினமையல்கள்செய்தான் என்னுடைக்கோமளத்தையே. (௪)

| | | | |
|---|---|---|---|
| ஒன்றிய | (எல்லாக்கலைகளும்) பொருந்திய | திங்களை காட்டி | பூர்ண சந்திரனை (அருகில் நின்றார்க்குக்) காட்டி |

| | | | |
|---|---|---|---|
| ஒளி மணிவண்ணனே என்னும் | ஒளியையுடைத்தான நீல மணிபோன்ற வடிவை யுடையவனே! என்று கூப்பிடுகிறாள்; | நன்று பெய்யும் மழை காணில் | நன்றாகப்பொழியும் மேகத்தைக்கண்டால் |
| நின்ற குன்றத்தினை நோக்கி | (அந்தச் சந்திரமண்டலத் தளவு உயர்ந்து) நிற்கிற மலையைப்பார்த்து | நாரணன் வந்தான் என்று | நாராயணன் வந்தான் என்று கூறி |
| (ஸகல உலகங்களையும் அளக்கைக்கு வளர்ந் தருளின எம்பெருமான் என்று நினைத்து) | | ஆலும் | மேகத்தைக் கண்ட மயில் போலே கூத்தாடுகின்றாள்; |
| நெடுமாலே வா என்று கூவும் | 'நெடுமாலே! வாராய்' என்று அழைக்கிறாள்; | என்னுடை கோமளத்தை | மெல்லியலாளான எனது மகளுக்கு |
| | | என்று இன மையல்கள் செய்தார் | இப்படிப்பட்ட மயக்கங்களை பண்ணினார். |

* * *—எல்லாக்கலைகளும் நிரம்பப்பெற்ற சந்திரனைச் சுட்டிக்காட்டி 'நீலமணிவண்ணனே!' என்று அழைக்கின்றாள். உயரநின்றவொரு மலையைப்பார்த்து, உலகங்களை அளந்தருள்வதற்காக நிமிரவளர்ந்து நிற்கிற ஸர்வேச்வரனென்று கொண்டு 'என் ஆர்த்தி தீரவாராய்' என்றழைக்கின்றாள். நன்றாகப் பெய்யும் மேகத்தைக்கண்டால் 'நாராயணன் நம் உறுவுதல் தீர வந்தான்' என்று, மேகத்தைக்கண்டு மயில் கூத்தாடுமாபோலே கூத்தாடுகின்றாள். அந்தோ! இப்படிப்பட்ட வியாமோஹங்களை எனது பெண்பிள்ளைக்கு உண்டு பண்ணிவிட்டாரே! என் செய்வேன்! என்கிறாள் திருத்தாய்.

ஒன்றிய என்றது ஸகலகலைகளும் பொருந்தப்பெற்ற என்றபடி. "சந்த்ரமா மநஸோ ஜாத:—சந்த்ரமா மநஸோ ஜாத:" என்று புருஷஸூக்தத்தில் சந்திரன் எம்பெருமானுடைய திருவுள்ளத்தில் நின்று தோன்றினதைச் சொல்லிற்று. "காரணவஸ்துவின் குணங்கள் கார்ய வஸ்துவிலே ஸங்க்ரமிக்கும்" என்கிற நியாயப்படி காரண பூதனான எம்பெருமானுடைய குளிர்ச்சியடியாகவே சந்திரனுக்குக் குளிர்ச்சி யுண்டாயிற்றென்று பக்தர்கள் அபிஸந்தி கொள்வதுண்டு; குளிர்ந்த சந்திரனைக் கண்டவாறே குளிர்ந்த திருவுள்ளமுடைய எம்பெருமானாகவே பாவனை செல்லுகின்றது. ஒளிமணிவண்ணனே! என்று விளியாகவுங்கொள்ளலாம்; ஏகாரத்தை விளியுருபாகக் கொள்ளாமல் பிரிநிலைப் பொருளதாக்கி 'இவன் ஒளிமணிவண்ணனேயன்றி வேறல்லன்' என்பதாகவுங் கொள்ளலாம்.

இரண்டாமடியில் இரண்டு நிர்வாஹங்களுண்டு:—நின்ற குன்றமொன்று தென்பட்டது; வடிவில் பெருமையைக் கண்டவாறே, ஜகத்தையெல்லாம் தன் திருவடிகளின் கீழே யிட்டுக்கொள்ளும்படி பெரிய வடிவையுடையனான த்ரிவிக்ரம பகவான் என்றெண்ணி, எழுந்தருளாய் என்றழைக்கின்றாள் என்பதாகப் பிள்ளானுடைய நிர்வாஹம். மலைபெயராமல் நின்று அடிக்கடி மழைபெய்யப்பெறுவதனால் அழுக்கற்றுப் பசுகு பசுகென்றிருக்குமாறு கண்டு பராங்குச நாயகி என்ன நினைத்தாளென்னில்; எம்பெருமான் நெடுநாள் உபேக்ஷித்திருந்த குற்றவாளி யாகையாலே உள்ளபடியே வந்துநிற்க வெட்கப்பட்டு, பச்சைப்போர்வையிட்டு முட்டாக்கிட்டு நிற்கிறானாகக்கொண்டு 'சுணைகேடனே! நீ இங்ஙனே வெள்கவேணுமோ? வந்துநில்' என்கிறாள்—என்று நஞ்சீயர் நிர்வஹிக்கும்படி. நஞ்சீயருடைய ஒன்பதினாயிரப்படி ஸ்ரீஸூக்திகள் காண்மின்'—"நின்றதொரு மலையைப்பார்த்து, ஸகல லோகங்களையும் அளக்கைக்கு வளர்ந்தருளின எம்பெருமானென்றே கொண்டு என்னார்த்தி தீரவாராய் என்று அழைக்கும். ஸாபராதனாகையாலே கிட்டவர அஞ்சி நிற்கிறானாகக் கொண்டு 'உன்னுடைய ஸ்நேஹாதிசயம் அறியோமோ? வாராய்' என்று க்ஷேபபூர்வகமாக அழைக்கும் என்றுமாம்."

***இந்த நிர்வாஹ பேதத்திற்கு நிதானம் ஏதென்னில்;*** நெடுமால் என்கிற சொல்லே ***யாகும். மால் என்னுஞ்சொல்லுக்குப் பெருமை, வியாமோஹம் முதலிய பல பொருள்களுண்டு: பெருமையென்னும் பொருளிலே நோக்குவைத்தார் பிள்ளான் ; வியாமோஹமென்னும் பொருளை நோக்கினர் நஞ்சீயர்.***

*நன்று பெய்யும் மழையைக்கண்டால் நாரணன் வந்தானென்று களிப்பதற்குப் பல வகையான கருத்துக்களுண்டு; "ஒக்குமம்மானுருவமென்று உள்ளங்குழைந்து நாணும், தொக்க மேகப் பல்குழாங்கள் காணுந்தோறும் தொலைவன் நான்" என்கிறபடியே மேகத்தைக் காணும்போதே * மின்னுமாமழை தவழும் மேகவண்ணனான நாராயணனுடைய ஞாபகம் வந்தேதீரும். "தழைகளுந் தொங்கலும் ததும்பி யெங்குந் தண்ணுமை யெக்கம் மத்தளி தாழ்பீலி, குழல்களும் கீதமுமாகி யெங்கும் கோவிந்தன் வருகின்ற கூட்டங்கண்டு, மழைகொலோ வருகின்றதென்று சொல்லி" [பெரியாழ்வார் திருமொழி 3—4—1] என்ற பாசுரப் படியும் கொள்ளலாம். "எத்தனையும் வான் வறந்த காலத்தும் பைங்கூழ்கள், மைத்தெழுந்த மாமுகிலே பார்த்திருக்கும் மற்றவைபோல், மெய்த்துயர் வீட்டாவிடினும் வித்துவக்கோட்டம்மா! என்சித்த மிக வுன்பாலே வைப்பனடியேனே" [பெருமாள் திருமொழி 5—7.] என்கிறபடியே அநந்யகதிகளால் எதிர்பார்க்கப் படுந்தன்மை மழைக்கும் திருமாலுக்கும் ஒக்குமாதலாலும் மழையைக்கண்டு நாரணன் வந்தானென்று ஆனுதல் அமையும்.*

**இன மையல்கள்**—*இப்படிப்பட்ட மயக்கங்கள்.* **இன்ன** *என்பது 'இன' என்று தொக்கிக் கிடக்கிறது.* **என்று** *என்பதற்கு 'என்றைக்கு' என்று பொருளுரைத்தார் பன்னீராயிர வுரைகாரர்.* .... .... .... ... .... (4)

கோமளவான்கன்றைப்புல்கிக் கோவிந்தன்மேய்த்தனவென்னும் *
போமிளநாகத்தின்பின்போய் அவன்கிடக்கையீதென்னும் *
ஆமளவொன்றுமறியேன் அருவினையாட்டியேன்பெற்ற *
கோமளவல்லியைமாயோன் மால்செய்துசெய்கின்றகூத்தே. (ரு)

| | | | |
|---|---|---|---|
| கோமளம் வான் கன்றை புல்கி | இளையபெரிய கன்றுகளைத் தழுவி (இவை) | அவன் கிடக்கை | அவன் பள்ளிகொள்ளும் படுக்கை |
| கோவிந்தன் மேய்த்தன என்னும் | பசுமேய்க்க முடிசூடின கண்ணன் (இனிது உகந்து) மேய்த்தவை என்று கூறுவாள்; | ஈது என்னும் | இது என்று சொல்லுவாள்; |
| போம் இளம் நாகத்தின் பின் போய் | இஷ்டப்படி ஓடுகின்ற இளைய நாகத்தின் பின்னே (இதுபோன விடத்தில் அவனையும் காணலாம் என்று நினைத்துச்) சென்று | அரு வினையாட்டியேன் பெற்ற | (அநுபவித்து முடிக்க) அரிய பாபத்தை யுடையேனான நான் பெற்ற |
| | | கோமளம் வல்லியை | ம்ருதுஸ்வபாவையாய், கொடிபோன்ற இவளை |
| | | மாயோன் | எம்பெருமான் |
| | | மால் செய்து | மயக்கி |
| | | செய்கின்ற கூத்து | பண்ணுகிற இத்தகைய கூத்தாட்டு |
| | | ஆம் அளவு ஒன்றும் அறியேன் | எவ்வளவில் ஆகும் என்று ஒன்றும் அறிகிலேன். |

* * *—*இங்கு 'ஆன் கன்றை' என்றும் 'வான் கன்றை' என்றும் பிரியும். "ஆண் கன்றை என்று பாடமாகவுமாம்" என்று பன்னீராயிரத்திலுள்ளது. பசுக்களை மேய்ப்பதிற் காட்டிலும் கன்றுகளை மேய்ப்பதில் கண்ணபிரானுக்கு மிக்க ஆவலுண்டு; "திவத்திலும் பசு நிரைமேய்ப்பு உவத்தி செங்கனிவாயெங்களாயர் தேவே" என்று பசுக்கூட்டங்களை மேய்ப்பதில் வெறும் உவப்பு உள்ளதாகச் சொல்லப்பட்டது; "கன்று மேய்த்து இனிது உகந்த காளாய்" என்று கன்றுகளை மேய்ப்பதில் இனிதுவப்பு உள்ளதாகச் சொல்லப்பட்டது. பிறர்*

கை பார்த்திருக்கும் அசக்தர்களை ரக்ஷிப்பதிலேயே ஊக்கமுடையவன் எம்பெருமான் என்பது உள்ளுறை பொருள்.

கண்ணபிரான் கன்றுகளை மேய்த்தானென்பதறிந்த பராங்குச நாயகி, தெருவில் திரியும் கன்றுகளைப்பிடித்து அணைத்துக்கொண்டு ‘நம் கண்ணபிரான் மேய்த்த கன்றுகள் இவை’ என்கின்றாள். இங்கே ஈட்டு ஸ்ரீ ஸூக்தி:—“கன்றின் கழுத்தைக் கட்டிக்கொண்டவாறே அது துள்ளிப்போகா நிற்குமே; அவன் பரிகரமாயே யிருந்ததென்னும்” என்பதாம். “காற்றில் கடியனாய் ஓடி அகம்புக்கு மாற்றமுந்தாரான்” என்கிறபடியே கைக்கு எட்டாமல் ஓடுகிற தன்மை கண்ணபிரானுக்குப்போலவே கன்றுக்கும் கண்டதனால் “கோவிந்தனுடைய பரிகரமே இவை” என்று திண்ணமாகச் சொல்லுவளென்றபடி. கோமளமென்று இளமைக்கும் மென்மைக்கும் பெயர்; மாணிக்கத்தில் ஒருவகைக்கும் பெயர். ஆன்கன்று என்றால்—பசு ஈன்றகன்று என்றபடி. வான்கன்று என்றால்—திவ்யமான கன்று என்றபடி. கோவிந்தன்—பசுக்களையும் கன்றுகளையும் மேய்த்த பெருமேன்மைக்கு முடிசூடினவன்.

[போம் இளநாகத்தின் இத்யாதி.] ஸர்ப்பம் ஓடக்கண்டால் அஞ்சாதே அதன் பின்னேயோடி ‘எம்பெருமானுடைய திருப்பள்ளி மெத்தை இது’ என்கின்றாள். “ஐந்து பைந்தலையாடரவணை மேவிப் பாற்கடல் யோகநித்திரை சிந்தைசெய்த வெந்தாய் உன்னைச் சிந்தை செய்து செய்தே” என்கிறபடியே அவனுடைய சேஷசயன வைபவத்தையே இடைவிடாது சிந்திப்பவராதலால் அதுவே நினைவானபடி. அவனோடே கூடித் தானும் படுக்கலாமென்ற ஆசையோடே நாகத்தின் பின்னே நடந்தாள்போலும்.

“ஆமளவு ஒன்றுமறியேன்” என்பதை உள்ளவிடத்திலேயே அந்வயிக்கவுமாம்; ‘மாயோன் அருவினையாட்டியேன் பெற்ற கோமளவல்லியை மால் செய்து செய்கின்ற கூத்து ஆமளவொன்று மறியேன்’ என்று அந்வயிக்கவுமாம். முந்தினபக்ஷத்தில், **கூத்தே!** என்பது ‘இப்படியும் ஒரு கூத்து ஆவதே!’ என்று முடியும். ... ... ... (௫)

கூத்தர்குடமெடுத்தாடில் கோவிந்தனாமெனாவோடும் *
வாய்த்தகுழலோசைகேட்கில் மாயவனென்றுமையாக்கும் *
ஆய்ச்சியர்வெண்ணெய்கள்காணில் அவனுண்டவெண்ணெயீதென்னும் *
பேய்ச்சிமுலைசுவைத்தாற்கு என்பெண்கொடியேறியபித்தே! (௬)

| | | | |
|---|---|---|---|
| கூத்தர் குடம் எடுத்து ஆடில் | யாரேனும் கூத்தாடுமவர்கள் குடத்தை எடுத்து ஆடினார்களாகில் | அவன் உண்ட வெண்ணெய் ஈது என்னும் | அவன் அமுது செய்தருளின **வெண்ணெய்** இது என்கிறாள்: |
| கோவிந்தன் ஆம் எனா ஓடும் | (குடக்கூத்தாடுதலை ஸ்வபாவமாகவுடைய) க்ருஷ்ணன் ஆம் என்று கருதி (காண்கைக்கு) ஓடுவாள்; | பேய்ச்சி முலை சுவைத்தாற்கு | பூதனையினுடைய முலையை ப்ராணனோடே சுவைத்து முடித்த கண்ணபிரானுக்கு |
| வாய்த்த குழல் ஓசை கேட்கில் | இனிய குழலின் ஓசையைக் கேட்டாளாகில் | கொடி என்பெண் | கொடிபோன்றவளான என்னுடைய மகள் |
| மாயவன் என்று மையாக்கும் | க்ருஷ்ணன் என்று நினைத்து மோஹியா நிற்பாள்; | ஏறிய | தலைமண்டையிடும்படி கொண்ட |
| ஆய்ச்சியர் வெண்ணெய்கள் காணில் | இடைச்சிகள் கையிலே வெண்ணெயைக் கண்டாளாகில் | பித்து | பிச்சு இருந்தபடி |
| | | ஏ | ஆச்சரியம். |

* * *—ஜீவனத்திற்காகக் குடக்கூத்தாடித் திரிகிறவர்களுண்டே; அவர்கள்வந்து குடங்களை வீசியெறிந்து ஆடுமதுகண்டால் * குடங்களெடுத்தேறவிட்டுக் கூத்தாடவல்ல

கோவாகிய **கோவிந்தனே** ஆடுவதாக ப்ரதிபத்திபண்ணி அதனை அருகேயிருந்து காண ஓடுகின்ருள். எப்படிப்பட்டவர்களையு மீடுபடுத்தவல்ல புல்லாங்குழலின் இசைவந்து செவிப்பட்டால், **கண்ணபிரானென்று** சொல்லி வியாமோஹிக்கின்ருள். இடைச்சிகள் கொணர்ந்து விற்கும் வெண்ணெயைக் கண்டால், அன்று அவன் திருவாய்ப்பாடியில் களவுகண்டு அமுதுசெய்த வெண்ணெயோடொத்த வெண்ணெய் இது என்று சொல்லா நின்ருள்; தாய் உதவாத தனிமையிலே பூதனையென்பவள் தாய்வடிவுகொண்டு வந்து நலியப்புக, அவளை முடித்துத் தன்னைச் சேமமாகத் தந்த உபகாரத்துக்குத் தோற்று இவள் பித்தேறினளாயிற்று; இப்படியும் ஒரு விலக்ஷணமான பிச்சு உண்டோ வென்கிருள் திருத்தாய்.

குடமெடுத்தாடில் என்கையாலே, ஸாதாரணமான கூத்துக்களைப்பொருள் படுத்தாள்; குடக்கூத் தொன்றிலேயே யீடுபடுவாளென்பது பெறப்பட்டது. அந்தணர்க்குச் செல்வம் விஞ்சினல் யாகம்செய்யுமாபோலே இடையர்க்குச் செல்வம்விஞ்சினல் களிப்புக்குப் போக்கு விடாகக் குடக் கூத்தாடுவர்கள் என்று ப்ரஸித்தி. கண்ணபிரானும் சாதிமெய்ப்பாட்டுக்காகக் குடக்கூத்தாடினனும்; அதில் ஆழ்வார்கள் மிக ஈடுபடுவர்கள். "நீரார் கமலம்போல் செங்கண்மாலென்ருெருவன், பாரோர்களெல்லாம் மகிழப்பறைகறங்கச், சீரார் குடமிரண்டேந்திச் செழுந்தெருவே ஆராரெனச் சொல்லியாடுமதுகண்டு, ஏராரிள முலையாரன்னையரு மெல்லாரும், வாராயோ வென்ருர்க்குச் சேன்றேனென் வல்வினையால்" என்று தொடங்கியுள்ள சிறிய திருமடற் பாசுரம் காண்க.

குடக்கூத்தாடுமது கண்டு கோவிந்தன் என்று சொல்லி ஓடினளாம்; யாரோ வயிற்றுப்பிழைப்புக்காக ஆடித்திரிகிருர்களத்தனை; கண்ணனல்லன்' என்று விவேகிகள் கூற ஞல் 'கோவிந்தனும்' என்று சொல்லி ஓடினளாம். 'கோவிந்தனேகிடீர்; திண்ணமாக நானறிவேன்' என்றவாறு.

**வாய்த்த குழலோசை** இத்யாதி. கண்ணபிரானுடைய வேணுகானச் சிறப்பு பெரியாழ்வார் திருமொழியில் * நாவலம் பெரிய தீவினில் வாழும் * என்கிற பதிகத்திலும், ஸ்ரீரங்கராஜ ஸ்தவ—உத்தரசதகத்தில் "மௌமெ ஸ்ரீஜஜூரம்பஹவுவ—சைலோக்நிச் ச ஜலாம்பபூவ" இத்தியாதி ச்லோகத்திலும் பரக்கக் காணத்தக்கது.

**மாயவனென்று**='மாயவனை கண்ணன் ஊதுகிற குழலின் ஓசையென்று' என்று பொருள் கொள்வது தவிர 'மாயவனை கண்ணனேயென்று' என்கிற பொருளும் கொள்ளத்தகும். கீழே *புகழுநல்லொருவனில் 'நுடங்கு கேள்வியிசை யென்கோ" என்றருளிச் செய்திருக்கையாலே எம்பெருமான்றன்னையே ஸங்கீதமாகக் கொள்ளுகிற புடையுமுண்டிறே; குழலோசையை எம்பெருமானகவே பிரதிபத்தி பண்ணு நின்ருளென்றபடி. கண்ணனுடைய குழலோசையாக நினைத்து மோஹிக்கின்ருளென்ற பொருளில் மாயவன் என்ற சொற்சுவையில் நோக்காக நம்பிள்ளை அருளிச்செய்யும் அர்த்தம் மிக அழகியது; அதாவது—சில கோபிமார்களுடனே கலந்து பிரிந்தால் அத்தலையில் பிரணய ரோஷம் தலையெடுத்திருக்கும்; மீண்டும் அவர்களோடு கலக்க நினைக்கும்போது அந்த ஊடலை ஆற்றவேண்டிச் சில தாழ்ந்த சொற்களைக் குழலிலேயிட்டுப் பாடிக்கொண்டே செல்வனும்; 'பகலெல்லாம் பசுக்களின் பின்னே போனேன்; தாய் தந்தையர்க்குப் பரதந்திரனயிருந்தேன்; பிரிந்தேன்; தரிக்கமாட்டிற்றிலேன்; ஒருபகல் ஆயிர ஊழியாய்ச்செல்லா நின்றது, என்றிங்ஙனே பாசுரங்களை உள்ளே யிசைத்துப் பாடுவதுண்டு; அது தோன்ற மாயவன் என்றதாக.

*மையாத்தல்— மோஹித்தல்.*

*“ஆய்ச்சியர் வெண்ணெய்” என்றவிடத்து, ப்ராம்மண ஸ்த்ரீகள் கடைந்து திரட்டிய வெண்ணெயைக்கண்டால் ஒன்றும் பேசாள்; இடைச்சிகள் கையில் முடை நாற்றம் பெற்ற வெண்ணெய் கண்டால்—என்று இன்சுவைப் பொருளுரைப்பர் நம்பிள்ளை.*

**அவனுண்ட வெண்ணெய் ஈதென்னும்** — *கண்ணபிரான் அக்காலத்து அமுதுசெய்த வெண்ணெய் இப்போது காணமுடியாததாகலால், அவனுண்ட வெண்ணெயோடு ஸாஜாதீயமான வெண்ணெய் என்றபடி.*

*முன்னடிகளில் கோவிந்தன், மாயவன் என்று திருநாமங்களைச் சொன்னதுபோலே இங்கும் [மூன்றுமடியிலும்] ஒரு திருநாமம் சொல்லலாமாயிருக்க அது சொல்லாது* **அவன்** *என்றது—வெண்ணெயுண்ண அவன் பட்டபாடுகளையெல்லாம் உளப்படுத்தியவாறு. “வாரார் வனமுலையாள் மத்தாரப் பற்றிக்கொண்டு, ஏராரிடைநோவ எத்தனையோர் போதுமாய், சீரார் தயிர்கடைந்து வெண்ணெய் திரண்டதனை, வேரார்நுதல் மடவாள் வேறோர் கலத்திட்டு, நாரா ருறி யேற்றி நன்கமைய வைத்ததனைப், போரார் வேற்கண் மடவாள் போந்தனையும் பொய் யுறக்கம், ஓராதவன் போலுறங்கியறிவுற்றுத், தாரார் தடந்தோள்களுள்ளளவுங் கைநீட்டி, ஆராத வெண்ணெய் விழுங்கி” (சிறிய திருமடல்) இத்யாதி.*

*ஈற்றடிக்கு நம்பிள்ளையீடு;—“இவள் இப்படிக் கலங்குகைக்கு நிதாநமென்னென்னில்; [பேய்ச்சி முலை சுவைத்தாற்கு.] அவன் முன்பே யொரு உபகாரத்தைப் பண்ணிவைத்தான்; அதிலே தோற்றவன்று தொடங்கி இவள் பிச்சேறத் தொடங்கினாள்; தாயுங்கூட உதவாத ஸமயத்திலே பூதனைவந்து முலைகொடுக்க, அவ்வளவிலே உணர்த்தியுண்டாய் அவளை முடித்துத் தன்னை நோக்கித்தந்தானே; அவ்வுபகாரத்திலே தோற்று அன்று தொடங்கி இவள் பிச்சேறினாள்.—பூத்தருபுணர்ச்சி, புனல்தரு புணர்ச்சி, களிறுதரு புணர்ச்சி என்றிவை புணர்ச்சிக்கு ஹேது. அதாவது—எட்டாத கொம்பிலே நின்றதொரு பூவை ஆசைப்பட்டால் இவன் தன்னைப் பேணாதே இவளாசையை முடித்துக்கொடுக்க ‘இவன் தன்னைப் பேணாதே நம் நினைவை முடித்தானே’ என்று அதுக்காகத் தன்னைக்கொடுக்கை பூத்தரு புணர்ச்சி. ஆற்றிலே அழுந்துகிறவளைத் தான் புக்கேறவிட, அதற்காகத் தன்னைக் கொடுக்கை புனல்தரு புணர்ச்சி. அகிஞ்சிதமாக ஆனையின் கையிலே அகப்பட்டவளை மீட்டுக்கொடுக்க, அதுக்காகத் தன்னைக் கொடுக்கை களிறுதரு புணர்ச்சி. இவை யொன்றுமல்ல; அவன் தன்னை நோக்கினதுக்கு இவள் தன்னை யெழுதிக்கொடுக்கிறாள்.”* ... ... .... .... (6)

ஏறியபித்தினோடு எல்லாவுலகுகண்ணன்படைப்பென்னும் *
நீறுசெவ்வேயிடக்காணில் நெடுமாலடியாரென்றோடும் *
நாறுதுழாய்மலர்காணில் நாரணன்கண்ணியீதென்னும் *
தேறியுந்தேறாதும் மாயோன்திறத்தனளேயித்திருவே. (எ)

*ஏறிய பித்தினொடு* } *மிகுந்த மயக்கத்தோடே கூடியிருக்கச்செய்தே*
(வேதாந்த வித்துக்கள் சொல்லுமாபோல)
*எல்லா உலகு* — *ஸகலலோகங்களும்*
*கண்ணன் படைப்பு என்னும்* } *க்ருஷ்ணனுடைய ஸ்ருஷ்டி என்று கூறுகிறாள்;*
*நீறு செவ்வே இட காணில்* } *பஸ்மத்தை மேல்நோக்கி இடக்கண்டாளாகில்*
*நெடுமால் அடியார் என்று ஓடும்* } *ஸர்வேச்வரனுடைய அடியார் என்று கொண்டு (அவர்களைத் தொடர்ந்து) ஓடுகிறாள்;*

| | | | |
|---|---|---|---|
| நாறு துழாய் மலர் காணில் | பரிமளம் வீசும் திருத்துழாயின் பூந்தாரைக் கண்டாளாகில் | தேறியும் தேறு தும் | தேறினவளவிலும் கலங்கினவளவிலும் |
| நாரணன் கண்ணி ஈது என்னும் | ஸர்வஸ்வாமியான நாராயணனுடைய மாலை இது என்கிருள்; | இத் திரு | திருமகள் போல்வாளான இப்பெண்பிள்ளை |
| | | மாயோன் திறத்தனள் | எம்பெருமான் விஷயமல்லது வேறென்றறியாள். |

* * *—"என்பெண்கொடி யேறியபித்தே" என்று கீழ்ப்பாட்டில் தலைக்கட்டிற்று. உலகில் பித்துக்கொள்ளிகளாயிருக்குமவர்கள் வாயில் வந்தபடி எதையேனும் தப்புந்தவறுமாய்ப் பேசுவதுண்டே; அப்படி இவள் ஏதேனும் பேசுகின்ருளோ என்ன; பித்தேறின நிலைமையிலும் பகவத்விஷயத்தில் தெளிவு சிறிதும் மாறிற்றில்லை யென்கிருள். பராசரமஹர்ஷி முதலானர் தெளிந்திருந்து என்னவார்த்தை சொல்லுவர்களோ அந்தவார்த்தை இவள் சொல்லுகின்ருள் காண்மின். "வராஶரஂ உ-நிவரஂ கூ தவளவ-ூரஹிககி யழ। மெஜெதெ யஃ வரிவவூஹ ஊணிவ தூாஹிவாஉ தூ அ—பராசரம் முநிவரம் க்ருதபௌர்வாஹ்நிகக்ரியம், மைத்ரேய: பரிபப்ரச்ச ப்ரணிபத்யாபிவாத்ய ச" என்கிறபடியே வணங்கி வழிபட்டுக் கேள்விகேட்ட மைத்ரேய பகவானுக்கு, நற்றெளிவு கொண்டிருந்த பராசரபகவான் "விஷெணா ஸகாஶாஉ-ஊூதஂ ஜமதுமெதுவ அ ஷிதழ। ஷிதிஸ யஉகதூாஸௌ ஜமதொஹு ஜமது ஸஃ—விஷ்ணோஸ் ஸகாசாத் உத்பூதம் ஜகத் தத்ரைவ ச ஸ்திதம். ஸ்திதி ஸம்யமகர்த்தாஸௌ ஜகதோஸ்ய ஜகச்ச ஸ:." என்று உபதேசித்த அரும்பெரும் பொருளை இவள் பித்துக்கொண்டிருக்கிற நிலையிலே அவலீலையாக எடுத்துரைக்கின்ருளாயிற்று. நன்குவேதமோதிய அந்தணன் பித்தேறினும் வேதவாக்கியங்களையே சொல்லித் திரியுமாபோலே இவளும் வாஸநாபலத்தாலே பகவத் விஷயமல்லது பேசாளென்கை.

நீறு செவ்வேயிடக்காணில் நெடுமாலடியாரென்றேடும் = திருமாலடியார்களுக்கு பஸ்மதாரணம் சாஸ்த்ர நிஷித்தம் என்னுமிடம் ஆழ்வாரறியாததன்று; நீறு இடுமவர்களை நெடுமாலடியாரென்று பிரதிபத்தி பண்ண ப்ரஸக்தியில்லை; அப்படியிருக்க இங்கு அருளிச்செய்வதற்குக் கருத்தென்னென்னில்; "த்ரவ்யம் ஏதேனுமாகிலும் ஊர்த்த்வமாக இடக்காணில் நெடுமாலடியாரென்றேடும்." என்பது ஆறுயிரப்படி யருளிச்செயல். இதனை அடியொற்றியே மற்ற வியாக்கியானங்களு முள்ளன. பஸ்மதாரணம் பண்ணினவர்களேயாயினும் அந்த பஸ்மத்தைக் குறுக்கே பூசாதே நெடுக இட்டால் 'ஊர்த்த்வபுண்ட்ரதாரிகளிவர்கள்' என்று அவ்வளவுக்காக ப்ரதிபத்தி பண்ணுமென்றபடி.

ஸ்ரீமத் வேதாந்த தேசிகன் அருளிச்செய்த ஸச்சரித்ரரக்ஷையில் ஊர்த்வ புண்ட்ரதாரண விதிப்பகுதியில்— "நநு ஸஉஹூஹாமவதஸாயஃஸஂமூஹீத வகூமுயாஉஹஷிஃஉூஷெஉ ஶிஙிமெஉ கயஂ ஹமவகி கிஂகரமூாஂஅநதயா ஹிமொாயஃவஷுணவூதிவாஉநழ?"

என்று தொடங்கி அருளிச்செய்யப்பட்டிருக்கும் விஷயங்களும் குறிக்கொள்ளத்தக்கவை. (அவற்றின் கருத்துச் சுருக்கம் வருமாறு:—) ஸகல பாகவதர்களாலும் சிரமேற் கொள்ளப்பட்ட தமிழ் வேதமாகிய திருவாய்மொழியில் 'நீறு செவ்வேயிடக் காணில் நெடுமாலடியாரென்றேடும்' என்கிற பாசுரத்தினல் பகவத் பக்தர்களுக்கு பஸ்மதாரணம் லக்ஷணம்போல் தெரிவிக்கப்பட்டிருக்கிறதே, இது எப்படி? என்று க்ஷேபித்துக்கொண்டு சில ஸமாதானங்கள் அருளிச் செய்யப்பட்டுள்ளன. கீழே நாம் காட்டியவகையிலே ஒரு ஸமாதானம். மற்றொரு ஸமாதானமாவது—நீறு என்னுஞ் சொல் பஸ்மத்தையே சொல்லும் என்கிற நியதியில்லை, ஆழ்வார்தாமே "மாயன் தமரடி நீறு கொண்டு அணிய முயலில்" என்று வேறோரிடத்

தில் அருளிச்செய்திருக்கையாலே பாகவதர்களின் திருவடிப் பொடியையும் பொருளாகக் கொள்ளலாமென்பதாம்.

பஸ்மதாரணம் பண்ணுகிறவர்கள் குறுக்கே பூசக் காண்பதொழிய ஊர்த்வமாக இடுவதுமுண்டோவென்று சிலர் முற்காலத்திலேயே சங்கித்தார்கள்; அதற்குப் பரிஹாரமும் நம்பிள்ளை யருளிச்செய்தார். ஈட்டு ஸ்ரீஸூக்தி காண்மின்;—"அவர்கள் செவ்வேயிடுவர்களோவென்னில், அதுவுமன்றிக்கே இதுவுமன்றிக்கே மசகப்ராயரா யிருப்பார்கள் தரிப்பர்களிறே." (அதாவது) இரண்டுங் கெட்டான் என்று சொல்லப்படுகிற சிலர் பஸ்மத்தையே ஊர்த்வ புண்ட்ரமாகவும் தரிப்பர்களென்றபடி.

[நாறுதுழாய் இத்யாதி] நறுமணம் மிக்க திருத்துழாயைக் கண்டால், என் நாயன் *தோளிணைமேலும் நன் மார்பின்மேலும் சுடர்முடி மேலும் தாளிணைமேலும் புனைந்த தண்ணந்துழாய் இது என்கின்றாள்.

பலசொல்லி என்? பித்துக்கொள்ளாமலிருக்கிற காலத்தோடு பித்துக்கொண்டிருக்கிற காலத்தோடுவாசியற என்மகள் பகவத்விஷயமான வார்த்தைகளில் தெளிவுபெற்றேயிருக்கின்றாளென்கிறது ஈற்றடி. "இத்திரு" என்றதனால் இப்பராங்குச நாயகி ஸ்ரீ மஹாலக்ஷ்மியின் அம்சம் என்பது தெரிவிக்கப் படுகிறது. இதைப்பற்றின விவரணம் ஆசார்ய ஹ்ருதயத்தில் (இரண்டாம் ப்ரகரணத்தில்)"இரானெனில் நஅவாகக் குழைத்தவன்" என்கிற சூர்ணையிலும், "இத்திரு மண்ணேரன்ன வொண்ணுதல் பின்னைகொ லென்கிறவொப்பு" என்கிற சூர்ணையிலும் காணத்தக்கது. ... ... .... ... (எ)

திருவுடைமன்னரைக்காணில் திருமாலைக்கண்டேனேயென்னும் *
உருவுடைவண்ணங்கள்காணில் உலகளந்தானென்றுதுள்ளும் *
கருவுடைத்தேவில்களெல்லாம் கடல்வண்ணன்கோயிலேயென்னும் *
வெருவிலும்வீழ்விலுமோவாக் கண்ணன்கழல்கள்விரும்புமே. (அ)

| | | | |
|---|---|---|---|
| திரு உடை | பூர்ணமான செல்வத்தை யுடைய | கரு உடை | விக்ரஹயுக்தமான |
| மன்னரை காணில் | அரசர்களைக் கண்டால் | தேவு இல்கள் எல்லாம் | தேவாலயங்கள் யாவும் |
| திரு மாலை | திருமகள் கொழுநனை எம்பெருமானை | | |
| கண்டேனே என்னும் | கண்டேனே ! என்று கூறுவாள்; | கடல்வண்ணன் கோயிலே என்னும் | எம்பெருமான் (எழுந்தருளியுள்ள) கோவில்களே என்று கூறுவாள் |
| உரு உடை | விலக்ஷண வடிவங்களை யுடைய | | |
| வண்ணங்கள் காணில் | (காயாம்பூ முதலிய) பதார்த்தங்களைக் கண்டால் | வெருவிலும் வீழ்விலும் | அஞ்சினபோதும் (ஆர்த்தியாலே) மோஹித்தபோதும் |
| உலகளந்தான் என்று துள்ளும் | (இச்செவ்வியுள்ளது) திருவுலகளந்தருளின எம்பெருமானுக்கு' என அதியவனித்து ப்ரீதியோடே ஆடுவாள்! | ஓவா | ஒழியாதவளாகி |
| | | கண்ணன் கழல்கள் விரும்பும் | க்ருஷ்ணன் திருவடிகளையே பேணுகின்றாள். |

* * *—செல்வம் மிக்க அரசர்களைக் கண்டால் திருமாலைக்கண்டதாகவே சொல்லுவளாம். ஏனென்னில்; "நாவிஷ்ணுஃ ப்ருதிவீபதி:" என்று சாஸ்த்ரம் கூறுகின்றது; விஷ்ணுவின் அம்ஶமில்லாமல் அரசனாக அமைய முடியாதென்பது இந்த ப்ரமாணத்தின் கருத்து. பூதத்தாழ்வார் தமது திருவந்தாதியில்—"கோவாகி மாநிலங்காத்து நங்கண் முகப்பே, மாவேகிச் செல்கின்ற மன்னவரும்—பூமேவுஞ் செங்கமல நாபியான் சேவடிக்கே யேழ்பிறப்பும், தண்கமல மேய்ந்தார்தமர்." என்றருளிச்செய்கிறார். பலகாலம்

பகவானை ஆராதித்து அதன்பலனாகவே அரசர்களாகிச் சீரிய சிங்காசனம் ஏறுகின்றார்க ளென்கை.

இங்கே சில ஐதிஹ்யங்கள் ஈட்டில் அருளிச் செய்யப்படுகின்றன. அரசன் ஸ்வாமீ தன் தலையிலே அடியிட்டு ஆனைக்கழுத்திலே ஏறும்போது நாதமுனிகள் கண்டு "ஸர்வேச்வரன் ப்ரஹ்மாதிகள் தலையிலே அடியிட்டுப் பெரியதிருவடியின் மீது ஏறும்படி இதுவன்றோ" என்று சொல்லி மோஹித்தாராம். ஒரு ராஜாவைக்கண்டு அவன்பின்னே தொடர்ந்து போனார் என்று மூன்று.

**உருவுடை வண்ணங்கள் காணில் உலகளந்தானென்று துள்ளும்**=விலக்ஷணரூபங்களை யுடைய பதார்த்தங்களைக்கண்டால் (அதாவது, நீலம் குவளை காயா முதலிய உருவழகிய பொருள்களைக் கண்டால் 'உலகளந்த என்னையன்' என்று சொல்லித் துள்ளுகின்றாள்.

**(கருவுடை யித்யாதி.]** கல்புதைத்துக் கிடக்கும் ஸ்தானங்களைக்கண்டால் அவையெல் லாம் பெரிய பெருமாள் பள்ளிகொண்டருளுகிற கோயிலே யென்று சொல்லுகின்றாள். எந்த ப்ரதிமையிலும் எம்பெருமானுடைய ஆவேசம் இருந்தே தீருமென்பது கருத்து. நாலு பேர் கையெடுத்துக்கும்பிடவேண்டும்படி யிருக்குமிடம் எதுவானாலும் அங்கு எம்பெருமா னுடைய ஸாந்நித்யம் உண்டாகியே யிருக்குமென்க. இங்குக் **கடல்வண்ணன்** என்றதனால் "**ஆகாஶாத்பதிதம் தோயம் யதா க³ச்ச²தி ஸாக³ரம் । ஸர்வதே³வ நமஸ்கார: கேஶவம் ப்ரதி க³ச்ச²தி**—ஆகாசாத் பதிதம் தோயம் யதா கச்சதி ஸாகரம். ஸர்வதேவநமஸ்கார: கேசவம் ப்ரதி கச்சதி." என்கிற ஸுப்ரஸித்த ச்லோகம் நினைவுக்கு வருகின்றது. எந்தத் தண்ணீரும் கடலிலேபோய்ப் புகுமாபோலே எந்தத் தெய்வத்தைப் பற்றின நமஸ்காரமும் கடல்வண்ண னிடத்தே போய்ச் சேருமென்பது மேலெடுத்த வசனத்தின் கருத்து.

**வெருவிலும் வீழ்விலும்**=வெருவுதலாவது அஞ்சுதல்; வீழ்தலாவது மோஹித்தல். தெளிவோடே கூடியிருந்து பந்துக்களைக்கண்டு அஞ்சி யிருக்கும்போதும், அறிவழிந்து மோஹித்துக் கிடக்கும்போதும் இடைவிடாதே கண்ணன் கழல்களில் விருப்பமே இவளுக் குச் செல்லா நின்றது என்றதாயிற்று. ... .... .... ... (அ)

**விரும்பிப்பகவரைக்காணில் வியலிடமுண்டானேயென்னும் ***
**கரும்பெருமேகங்கள்காணில் கண்ணனென்றேறப்பறக்கும் ***
**பெரும்புலவாநிரைகாணில் பிரானுளனென்றுபின்செல்லும் ***
**அரும்பெறல்பெண்ணினைமாயோன் அலற்றியயர்ப்பிக்கின்றானே.** (௯)

| | | | |
|---|---|---|---|
| பகவரை | ஸந்நியாஸிகளை | ஏற பறக்கும் | (அங்கே செல்ல) மேலே யெழுந்து பறப்பதற்கு அலமரா நிற்பாள்; |
| காணில் | கண்டால் | | |
| விரும்பி | ஆதரவு கொண்டு பேணி | | |
| வியல் இடம் உண் டானே என்னும் | அகன்ற உலகத்தை ப்ரள யாபத்திலே உண்டு திருவயி ற்றிலே வைத்து ரக்ஷித்த ஸர்வரக்ஷகனே என்பாள்; | பெரு புலம் ஆநிரை காணில் | பருத்து அழகிய பசுக் களைக் கண்டால் |
| | | பிரான் | (அவற்றை மேய்த்து ரக்ஷிப் பவனான) உபகாரகன் |
| கரு பெரு மேகங் கள் காணில் | கறுத்துப்பெருத்த மேகங்களைக்கண்டால் | உளன் என்று | கூடவருகிறான் என்று நினைத்து |
| கண்ணன் என்று | கண்ணபிரான் என்று நினைத்து | பின் செல்லும் | அப்பசுக்களின் பின்னே போகிறாள் |

| | | | |
|---|---|---|---|
| பெறல் அரு பெண்ணினை | பெறுதற்கு அரியளான இப் பெண்ணை | அலற்றி | வாய்விட்டு அலறும்படி பண்ணி |
| மாயோன் | எம்பெருமான் | அயர்ப்பிக் கின்றான் | (அதற்குமேலே) மோஹிக் கும்படி பண்ணுகிறான். |

* * *—பகவர் என்றது பரமைகாந்திகள் என்றபடி. ஜ்ஞாநாநுஷ்டான பரிபூர்ணர்களான உத்தமாச்ரமிகள் என்று கொள்க. பகவானைச் சொல்லுகிற சொல்லையிட்டே அவர்களைக் கூறினது—அவர்கள் பகவானில் வேறுபடாதவர்கள் என்பதைக் காட்டுதற்கென்க.

அப்படிப்பட்டவர்களைக் கண்டால், உலகங்களையெல்லாம் திருவயிற்றிலே வைத்து நோக்கின பெருமானாகவே பிரதிபத்தி பண்ணுவள். *ஜ்ஞாநீது ஆத்மைவ மே மதம்* என்கிற பகவத்கீதையிலே நோக்குப்போலும்.

கரும்பெரு மேகங்கள் காணில்=கறுத்துப் பெருத்து விடாய்தீர்க்குமதான மேகத்தைக் கண்டவாறே அப்படிப்பட்ட வடிவையுடையனான கண்ணபிரான் தானே வந்து தோன்றினானாகக்கொண்டு கோலாஹலங்கள் செய்யா நிற்பள். இங்கே ஒரு இதிஹாஸம் ஈட்டில் அருளிச்செய்யப்படுகிறது:—ராஜேந்த்ரசோழன் என்னும் ஊரில் திருவாய்க்குலத்தாழ்வார் என்று ஒருவரிருந்தாராம்; அவர் கார்காலத்திலே பயிர் பார்க்கவென்று புறப்பட்டு வயலருகில் சென்றவாறே மேகத்தைக் கண்டு மோஹித்து விழுந்தாராம்; இவர் விழுந்ததைக் கண்டு நின்ற குடிமகன் ஓடிவந்து அவரை யெடுத்துக்கொண்டு வந்து க்ருஹத்திலேவிட்டு 'இவருடைய ப்ரக்ருதியை அறிந்திருந்தும் இந்நாளிலே இவரை வயல் பார்க்கப் புறப்படவிடலாமோ? என்றானும். மேகத்தைக் கண்டு பகவானாகவே யெண்ணி மோஹித்து விழுதல் பக்தர்களுக்கு உள்ளதென்று இதனால் விளங்கிற்று.

பெரும்புலவாநிரை காணில் பிரானுளனென்று பின் செல்லும்=பசுக்கூட்டங்கள் வயல்களிலே மேய்ந்துவிட்டு மாலைப்போதிலே மீண்டு ஊர்க்குள்ளே புகுதல் எங்குமுண்டே; அத்தகைய திரளைக் கண்டால், * கன்றுகள் மேய்த்துத் தன் தோழரோடு கலந்து தழைகளுந் தொங்கலும் ததும்பி யெங்குந் தண்ணுமையெக்கம் மத்தளி தாழ்பீலிக் குழல்களுங் கீதமுமாகி யெங்குங் கோவிந்தன் வருகின்ற கூட்டமாகவே யெண்ணி, முன்னணியிலே கண்ணனைக் காணாமல் பிற்குழையிலே அவன் எழுந்தருளக் கூடுமென்று கருதிப் பின்னாலேசென்று பார்க்கின்றாள். இப்பசுக்களின் கோஷ்டிக்குள்ளே கண்ணபிரான் இருக்கக்கூடுமென்று நினைத்து, எப்படியும் அவனைக் காணவேணுமென்று கருதி அவற்றைத் தொடர்ந்துகொண்டே செல்லாநின்றாள் என்றுமாம்.

புலம் என்றது இந்திரியங்களை அபஹரிக்குமதான என்றபடி: அழகிய என்பது தேர்ந்தபொருள்.

எப்போதும் தன்னையே வாய் வெருவும்படியாகவும் மோஹிக்கும்படியாகவும் இப்படி எம்பெருமான் செய்துவிட்டானே! என்கிறாள் ஈற்றடியில். ஆழ்வார் இவ்வுலகில் திருவவதரித்தது மிக்க தவப்பயன் என்பது அரும்பேறல் பெண்ணினை என்பதனால் தெரிவிக்கப்பட்டது. "அருவினையேன் நெடுங்காலமும் கண்ணன் நீண்மலர்ப்பாதம் பரவிப்பெற்ற" என்ற திருவிருத்தமும் இங்கு அநுஸந்தேயம். ... ... .... (௬)

அயர்க்கும்சுற்றும்பற்றிநோக்கும் அகலவேநீணேக்குக்கொள்ளும் *
வியர்க்கும்மழைக்கண்துளும்ப வெவ்வுயிர்க்கொள்ளும்மெய்சோரும் *
பெயர்த்தும்கண்ணுவென்றுபேசும் பெருமானே!வாவென்றுகூவும் *
மயல்பெருங்காதலென்பேதைக்கு என்செய்கேன்?வல்விணையேனே. (௧0)

| | |
|---|---|
| அயர்க்கும் | மோஹியா நிற்பள்; |
| சுற்றும் பற்றி நோக்கும் | (கண்ணன் தன்னிடத்து வாராதொழியானென்று நினைத்து அவன் வருகையை)சுற்றிலும் பலகாலும் பார்ப்பள்; |
| (அவ்வளவிலும் காணமையினலே அவன் தூரத்திலே நிற்கிருனகவெண்ணி) | |
| அகல நீள் நோக்கு கொள்ளும் | பார்த்த கண்ணை ஓட்டி நெடும்போது பாராநிற்பள்; |
| (அங்கும் காணமையினலே) | |
| வியர்க்கும் | வேர்த்து நீராக நிற்கும்; |
| மழை கண் துளும்ப | மழைபோலக் கண்களில் நீர் துளும்பும்படி |
| வெம் | வெவ்விதாக |
| உயிர்க்கொள்ளும் | நெடுமூச்செறிகின்ருள்; |
| மெய் சோரும் | (இத்தகைய பரிதாபத்தாலே) சரீரம் தரிக்க மாட்டாமல் வாடுவாள்; |
| பெயர்த்தும் | பின்னையும் (ஆசைமிகுதியினலே) |
| கண்ண என்று பேசும் | க்ருஷ்ணனே! என்று கூப்பிடுவாள்; |
| (அவ்வளவிலே வந்தானகவெண்ணி) | |
| பெருமானே | என்னுடைய ஸ்வாமியே! |
| வா என்று கூவும் | வரலாகாதோ? என்று அழைப்பாள்; |
| மயல் | (இப்படிப்) பிச்சேறும்படி |
| பெரு காதல் | பெரிய காதலையுடையளான |
| என் பேதைக்கு | என் சொற்கேளாப் பெண்ணுக்கு |
| வல்விணையேன் | (இவளை இப்படிக் காணும்படி) கொடிய பாபத்தையுடைய நான் |
| என் செய்கேன் | என்ன செய்வேன்? |

* * *—பராங்குசநாயகியின் பலவகைப்பட்ட நிலைமைகளை யெடுத்துரைக்கின்ருள் திருத்தாய். **அயர்க்கும்**=சிலகாலங்களிலே அறிவழிந்து கிடக்கின்ருள். **சுற்றும் பற்றி நோக்கும்**—சிலகாலங்களிலே அறிவு குடிபுகுந்திருந்து, தனக்குக் காட்சி தருவதற்காக எம்பெருமான் அருகே வந்திருந்தானகக்கொண்டு மிக்க ஆவலுடனே சுற்றும் நோக்குகின்ருள். **அகலவே நீள் நோக்குக்கொள்ளும்**—சுற்றும் பார்த்தும் காணதொழிந்தவாறே, பரமபதத்தில் நின்றும் இப்போதே புறப்பட்டிருக்கக் கூடும்; அங்கிருந்து எழுந்தருளுகிற அழகைக் காண்போம்" என்று நெடுந்தூரத்திலே கண்ணைவிட்டுப் பாராநின்ருள். **வியர்க்கும்**=அங்குங் காணப்பெருமையாலே இளைப்பாலே வியர்வை மிகும். [மழைக்கண் இத்யாதி.] வேர்வையாய்ப் புறப்பட்டதுபோக மிகுந்தது கண்ணீராய்ப் புறப்படும்; அதிலும் மிகுந்தது நெடு மூச்சாய்ப் புறப்படும். அந்த பரிதாபத்தாலே சரீரம் தரிக்கமாட்டாமல் சோரும்; பின்னையும் ஆசை பேசாதிருக்கவொட்டாமையாலே, பெண்களுக்கு அற்றுத் தீர்ந்த க்ருஷ்ணனே! என்று கூவுகின்ருள். அங்ஙனம் கூவினவாறே உருவெளிப்பாட்டாலே அவன்முன்வந்து தோன்றினனகக் கொண்டு 'பெருமானே! வா' என்று அன்புதோற்ற அழைக்கின்ருள்.

மயற் பெருங்காதல் என் பேதைக்கு வல்விணையேன் என்செய்கேன்?=இவள் திறத்திலே நான் செய்யக்கூடியதான உபாயம் ஒன்றும் தோன்றவில்லையே!; இவளுடைய காதலோ கரையழிந்து கிடக்கிறது. அதுதானே வடிவுகொண்டாற்போலே யிருக்கின்ற விவளுக்கு நான் என்ன செய்யவல்லேன்? 'இப்படியெல்லாம் நீ இருக்கத்தகாது' என்று நான் சொன்னல் அதுகேட்கும்படியான நிலைமையன்றே. 'இப்படிப்பட்ட காதல் உனக்கு ஆகாது' என்று சொல்லலாமென்[illegible]ார்த்தாலோ, அது விஞ்சிக் கிடக்கின்றதே! என்செய்வேன்! என்கிருள்.

மயற்பெருங்காதல்—மோஹத்தை விளைக்கக்கடவதான பேரன்பு என்றபடி. "வல்வினையேனே" என்றவிடத்து ஈடு;—"இவளை இப்படி காணும்படி மஹாபாபத்தைப் பண்ணினேன். ஆழ்வான் திருநயனங்கள் நோவுபட்ட பின்பு எம்பெருமானார் திருவுள்ளம் நோவுபட்டாப்போலே காணும் திருத்தாயார் திருவுள்ளம்படுகிறது." ... ... (கம)

வல்வினைதீர்க்கும்கண்ணனை வண்குருகூர்ச்சடகோபன் *
சொல்வினையால்சொன்னபாடல் ஆயிரத்துள்ளிவைபத்தும் *
நல்வினையென்றுகற்பார்கள் நலனிடைவைகுந்தம்நண்ணி *
தொல்வினைதீரவெல்லாரும் தொழுதெழவீற்றிருப்பாரே. (கக)

| | | | |
|---|---|---|---|
| வல் வினை தீர்க்கும் கண்ணனை | ஸகல பாபங்களையும் போக்குமியல்வினனான க்ருஷ்ணனை | நலன் உடை | (பகவதநுபவமாகிற) ஆனந்தத்தை யுடைத்தான |
| வண் குருகூர் சடகோபன் | வளப்பமுடைய திருநகரிக்குத் தலைவரான ஆழ்வார் | வைகுந்தம் நண்ணி | பரமபதத்தைக் கிட்டி |
| சொல் வினையால் | சொல்லுந் தொழில் வன்மையால் | தொல் வினை தீர | அநாதியான பாபங்கள் மறுவவிடாதபடி ஒழிய |
| சொன்ன பாடல் | அருளிச்செய்த பாட்டுக்கள் | எல்லாரும் தொழுது எழ | அங்குள்ள நித்யஸூரிகள் எல்லாரும் வணங்கிப் பெரியகிளர்த்தியை யுடையராம்படியாக |
| ஆயிரத்துள் இவை பத்தும் | ஆயிரத்துள் இவை பத்துப் பாட்டுக்களையும் | | |
| நல் வினை என்று கற்பார்கள் | இது நல்ல செய்கை என்று கருதிக் கற்குமவர்கள் | வீற்றிருப்பார் | இருக்கப்பெறுவர்கள். |

* * *—இத்திருவாய்மொழி கற்பவர்கள் எல்லாத்துன்பங்களும் தொலையப்பெற்றுத் திருநாட்டிலே நித்யஸூரிகள் ஆதரிக்கும்படியான பெருமைபெற்று மகிழ்வரென்று பயனுரைத்துத் தலைக்கட்டுகிறார்.

கீழ்ப்பாட்டிற் கூறியபடி ஆழ்வார்க்கு ஆற்றாமை மீதூர்ந்தவாறே இனி யிவரை இங்ஙனே துடிக்கவிட வொண்ணாதென்று திருவுள்ளம்பற்றிய எம்பெருமான் பதறி ஓடிவந்து ஸேவை ஸாதித்து இவருடைய துயரங்களைப் போக்கியருளினனென்பது விளங்க **வல்வினை தீர்க்குங் கண்ணனை** யென்கிறார். இங்கு நம்பிள்ளை யீட்டில்—"பெற்றவர்கள் கைவிட்டால் பிடித்தவர்கள் கைவிடார்களே" என்றுள்ள ஸ்ரீஸூக்தி மிகவும் ரஸிக்கத்தக்கது. கீழ்ப்பாட்டில் "மயற்பெருங்காதலென் பேதைக்கு என் செய்கேன் வல்வினையேனே" என்று தாய் சொல்லித் தலைக்கட்டுகையாலே பெற்றவர்கள் கைவிட்டமை விளங்கிற்று. உடனே "வல்வினை தீர்க்குங் கண்ணனை" என்கையாலே பிடித்தவர்கள் கைவிட்டிலாமை விளங்கிற்று. பிடித்தவர்கள் என்றது—பரகத ஸ்வீகாரமாகப்பற்றின எம்பெருமான் என்றபடி.

"வண் குருகூர்ச் சடகோபன்" என்றவிடத்து வண்மையைக் குருகூர்க்கு விசேஷணமாக்கியுரைத்தார் பன்னீராயிரத்தில்; சடகோபனுக்கு விசேடணமாக்கியருளினர் மற்ற பேராசிரியர்கள். உதாரரான ஆழ்வார் என்றபடி. இன்று நாமுங்கூட பகவத்குணநுபவம் பண்ணுகைக்குப் பாங்காகப் பாசுரம்பாடிவைத்த ஔதார்யத்தை என்னென்போம்!

சொல்வினையால் சொன்னபாடல் என்றது—வாசிக கைங்கர்யமாகப்பாடின பாசுரம் என்றபடி. நல்வினை என்று கற்பார்கள்—இப்பாசுரங்களின் இனிமை நெஞ்சிலே பட்டால் இவற்றையொழிய வேறொன்றால் போதுபோக்கவரிது; அப்படி இனிமையிலே தோற்றுக் கற்காவிடினும் 'இது நமக்கு நன்மை பயக்குமது' என்று கொண்டாகிலும் கற்பவர்கள் என்றபடி.

"தொல்வினைதீர நலனிடை வைகுந்தம் நண்ணி" என்று அந்வயிப்பது. 'நலனிடை, நலனுடை" என்று இருவகையான பாடம் காண்கிறது. பொருள் ஒக்கும். ஆனந்த ப்ரசுரமான வென்றபடி. எல்லாரும் தொழுதெழ வீற்றிருப்பார்—இப்பாசுரம் பயின்றவர்கள் பரமபதத்தேறச் சென்றால் அங்குள்ள நித்யமுக்தர்கள் இவர்களை ஆதரிக்கும் பரிசு வாசாமகோசரம். "பதியினில் பாங்கினில் பாதங்கள் கழுவினர்" என்கிறபடியே மஹோபசாரங்கள் செய்யப்பெற்று முடியுடை வானவராய் வீற்றிருப்பர்கள் என்கை. திருநாட்டிலுள்ளார் இவ்வருளிச்செயல்களிலே ஈடுபட்டிருக்கும்திறம் "கேட்டு ஆரார் வானவர்கள் செவிக்கினிய செஞ்சொல்லே" என்ற திவ்யஸூக்தியாலும் அறியத்தக்கது. .... ... (கக)

நான்காந்திருவாய்மொழி யுரை முற்றிற்று.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

## நான்காம்பத்து—ஐந்தாந் திருவாய்மொழி—வீற்றிருந்தேழுலகும்.

**உரையவதாரிகை** :—கீழ்த் திருவாய்மொழி பெருவிடாயோடே சென்றது. இங்ஙனே ஆழ்வார் விடாய்க்க வேணுமென்பதுதானே எம்பெருமானுடைய திருவுள்ளம்! சோறு உண்பதற்குப் பசி உபகரணமாமாப்போலே எம்பெருமானை யநுபவிப்பதற்கு அளவு கடந்த ஆசையன்றோ உபகரணமாவது. அந்த ஆசையுண்டானாலன்றித் தன்னுடைய பரிபூர்ணாநுபவத்தைத் தந்தருள எம்பெருமான் திருவுள்ளம் பற்றுவதில்லை. அத்தகைய ஆசை *முனியே நான்முகனில் உண்டாகின்றது. "முடிந்த அவா" என்பது அங்குத்தான். அதற்குக் கீழுள்ள தெல்லாம் அந்த அவாவுக்குப் பண்ணுகிற க்ருஷியாயிருக்கும். எம்பெருமான் இடையிடையே வந்து காட்சிதாரா தொழியில் ஆழ்வாரை இழக்க நேருமே. "தொண்டர்க் கமுதுண்ணச் சொன்மாலைகள் சொன்னேன்" என்னும்படி பகவத்குணரஸிகர்களுக்குத் தண்ணீர்ப்பந்தல் வைக்கைக்காகவன்றோ ஆழ்வாரை இங்கு வைத்திருப்பது. ஸம்ச்லேஷ விச்லேஷங்கள் மாறிமாறி நடந்தாலல்லது எம்பெருமானுடைய திருவுள்ளம் நிறைவேற வழியில்லை; நம் போலியர்களின் பாக்கியமும் பரிபக்குவமாக வழியில்லை.

இத்திருவாய்மொழியில் ஆழ்வார்க்குச் செல்லுகிற ஆனந்தம் பேச்சுக்கு நிலமன்று. "இனி யென்னகுறை யெழுமையுமே?" என்றும் "இனியாவர் நிகரகல் வானத்தே" என்றும் மார்பு தட்டிப் பேசலாம்படி யாக்கியருளினான் எம்பெருமான். இத்திருவாய்மொழியின் அமைப்பை நோக்குமிடத்து இதற்கு மேற்பட்ட பரிபூர்ணாநுபவம் வேறில்லை என்றே சொல்லலாம்படியிராநின்றது. ஆனதுபற்றியே இத்திருவாய்மொழி *சூழ்விசும்பணி முகிலுக்கு அடுத்த திருவாய்மொழியாக இருந்திருக்கலாம் என்று நஞ்சீயர் ரஸோக்தியாக அருளிச் செய்வராம்.

கீழ்த்திருவாய்மொழியில் போலிகண்டு ப்ரமித்து மயங்கி ஆற்றாமைமீதூர்ந்த ஆழ்வாருக்கு எம்பெருமான் உபயவிபூதிநாதனாயிருக்கிற தன் படிகளில் ஒன்றுங் குறையாதபடி முற்றூட்டாகக் காட்டிக்கொடுத்து 'ஆழ்வீர்! நம்முடைய படிகளெல்லாங் கண்டீரே; நமது இந்த ஐச்வர்யமெல்லாம் நிறம் பெற்றதாவது உம்முடைய திருவாக்காலே ஒழுங்குபடப் பாடினலாயிற்று. ஆகவே பாடிக்காணீர்' என்று சொல்லி ஆழ்வார் திருக்கையிலே தாளத்தைக் கொடுக்க, அவ்விருப்புக்குப் பல்லாண்டுபாடி மகிழ்கிறாராய்ச் செல்லுகிறது இத்திருவாய்மொழி.

வீற்றிருந்தேழுலகும் தனிக்கோல்செல்ல,வீவில்சீர் *
ஆற்றல்மிக்காளுமம்மானை வெம்மாபிளந்தான்தன்னை *
போற்றியென்றேகைகளாரத் தொழுதுசொல்மாலைகள் *
ஏற்றநோற்றேற்கு இனியென்னகுறையேழுமையுமே? (க)

| | | | |
|---|---|---|---|
| வீற்றிருந்து | (பரமபதத்திலே) எழுந்தருளியிருந்து | போற்றி என்றே | போற்றி போற்றி என்று வாழ்த்திக்கொண்டே |
| ஏழ் உலகும் | எவ்வுலகங்களிலும் | கைகள் ஆர தொழுது | கைகளின் விடாய் தீரும்படி அஞ்சலிபண்ணி |
| தனி கோல் செல்ல | அத்விதீயமான செங்கோல் நடக்கும்படி | சொல் மாலைகள் | சொற்களாகிற மாலைகளை |
| வீவு இல் சீர் | முடிவில்லாத கல்யாண குணங்களையுடையனாய் | ஏற்ற | (அவன் உகக்கும்படி) ஸமர்ப்பிக்கைக்கு |
| ஆற்றல் மிக்கு ஆளும் | சாந்தியுடனே ஆள்கின்ற | நோற்றேற்கு | புண்ணியஞ் செய்துள்ள எனக்கு |
| அம்மானை | ஸ்வாமியாய், | இனி | இனிமேல் |
| வெம் மா பிளந் தான் தன்னை | கொடிய (கேசி என்னும் அசுரனை) குதிரையை வாய்பிளந்து கொன்ற பெருமானை | ஏழுமையும் | ஏழேழுபடியான ஜன்மங்களிலும் |
| | | என்ன குறை | என்ன குறையுண்டாம்! |

* * *—எல்லாவுலகங்களையும் நிர்வஹிக்க வல்லவனை எம்பெருமானை ஏத்தப்பெற்றவெனக்கு ஒரு காலத்திலும் ஒரு குறையுமில்லை யென்கிறார்.

திருநாட்டில் திருவனந்தாழ்வான் மீது பெரியபிராட்டியாரோடுகூட எழுந்தருளியிருந்து "பொங்கோதஞ் சூழ்ந்த புவனியும் விண்ணுலகும், அங்காதுஞ் சோராமே ஆள்கின்ற வெம்பெருமான்" என்கிறபடியே உலகமெல்லாம் செங்கோல் செலுத்தி நியமிப்பவனாய், இங்ஙனம் நியமிப்பதற்குறுப்பான ஞானம் சக்திமுதலிய திருக்குணங்கள் நிரம்பப்பெற்றவனாய் தன்னுடைய ப்ரபுத்வத்தினால் கொடுங்கோன்மை காட்டாதே சாந்தியோடே யிருந்து ஆள்பவனாய், ஸ்ரீ க்ருஷ்ணனாய்த் திருவவதரித்துக் கேசிவதம் பண்ணின எம்பெருமானைப் பல்லாண்டு பல்லாண்டென்று வாயாரப்பாடிக் கையாரத் தொழுது, ஆனந்தத்திற்குப் போக்குவீடாகச் சொல்மாலைகள் சொல்லும்படியான பாக்கியம் பண்ணினவெனக்கு எற்றைக்கு மேழேழ்பிறவிக்கும் ஒரு குறையில்லை யென்றாராயிற்று.

திருநாட்டில் அநுபவத்தையும் இங்கிருந்தே யநுபவிக்கப் பெற்ற நான் 'அங்கே போகப்பெற்றிலேன்' என்கிற குறையுடை யேனல்லேன் என்றவாறு.

ஆற்றல்மிக்கு என்பதற்கு "அநுத்ரிக்த ஸ்வபாவனாய்" என்று ஆறாயிரப்படி. உபய விபூதியுக்தனான செருக்காலே தன்பக்கல் சிலர்க்குக் கிட்டவொண்ணாதபடி யிருக்கையல்லாமல் ஸவிநயமாக அரசுபுரிகையைச் சொன்னபடி. ஸ்ரீராமபிரான் அரசாண்டபடியைச் சொல்லுமிடத்து "ராமோ ராஜ்யமுபாஸித்வா"—ராமோ ராஜ்ய முபாஸித்வா" என்றார் வால்மீகிமுனிவர். இங்கு உபாஸித்வா என்ற ப்ரயோகம் மிகவழகியது. தன்பக்கலில் குடிமக்கள் அஞ்சுகையன்றிக்கே குடிமக்களிடத்தில் தான் அஞ்சிவர்த்திப்பன் போலும் ஸ்ரீராகவன். அப்படியேயாயிற்று எம்பெருமான் ஏழுலகும் தனிக்கோல் செலுத்தும்படி. ஆறுதல் என்கிற பொருளிலே ஆற்றல் என்றிருப்பதாகக் கொள்க. அதாவது—சாந்தி. ஆற்றல் என்று மிடுக்குக்கும் பேராதலால், இவ்வளவையும் நிர்வஹிக்கவல்ல ஸாமர்த்தியம் மிகுந்தவன் என்றதாகவுமாம்.

வெம்மாபிளந்தானென்று இங்கு அருளிச் செய்ததைப்பற்றி இரண்டு வகையான நிர்வாஹமுண்டு; கீழே "ஆற்றல் மிக்காளும்" என்றதற்கு மிடுக்கோடே கூடியாளும்படியைப் பொருளாகச் சொல்லும் பக்ஷத்தில் அதற்கு இந்த வெம்மா பிளந்த சரிதை த்ருஷ்டாந்தமாகக் கடவது. 'இது உபலக்ஷணமாய் இப்படி மிடுக்குடையனாய்ச்செய்த செயல்களையெல்லாம் எடுத்துக்கொள்ளலாம். இது பட்டருடைய நிர்வாஹம்.

"வெம்மா பிளந்தான்" என்றதை அந்தக் காரியத்தில் நோக்காகக் கொள்ளாமல் கண்ணபிரான் என்று வ்யக்தியைக் காட்டுவதற்காகச் சொன்ன சொல்லாகக்கொண்டு, ஆற்றல்மிக்காளுமவன் யாவனென்றால் கண்ணபிரான் = என்று காட்டுவதாகக்கொள்க. ஆற்றல் என்பதற்கு 'சாந்தி' என்னும் பொருளில் இந்த நிர்வாஹம். சாந்தியோடே ஆளுந்தன்மை ஸ்ரீராமபிரானிடத்திலுமிருந்தாலும் கண்ணபிரானிடத்தில் இது செவ்வனே காணத்தக்கதாம். பிறந்தவன்றே கம்ஸனைக்கொன்று முடிக்க வல்லமையிருந்தும் நெடுநாள் ஒளித்து வளர்ந்ததும், அடியவர்களுக்கு இழிதொழில் செய்து திரிந்ததும் முதலானவை காண்க. இது அம்மங்கியம்மாளுடைய நிர்வாஹம். ... .... ... (க

மையகண்ணாள்மலர்மேலுறைவாள் உறைமார்பினன் *
செய்யகோலத்தடங்கண்ணன் விண்ணோர்பெருமான்தன்னை *
மொய்யசொல்லாலிசைமாலைகளேத்தி உள்ளப்பெற்றேன் *
வெய்யநோய்கள்முழுதும் வியன்ஞாலத்துவீயவே. (உ

| | | | |
|---|---|---|---|
| மைய கண்ணாள் | மை யெழுதப்பட்ட கண்ணை யுடையளாய் | மொய்ய சொல்லால் | செறிந்த சொற்களாலே சமைந்த |
| மலர் மேல் உறைவாள் | தாமரைமலரிலே வஸிப்பவளான லக்ஷ்மி | இசை | இசையை யுடைத்தான |
| | | மாலைகள் | மாலைகளாலே |
| உறை | நித்யவாஸம் பண்ணப் பெற்ற | வியல் ஞாலத்து | அகன்ற புவியிலே யிருக்கச்செய் |
| மார்பினன் | மார்பையுடையனாய் | வெய்ய நோய்கள் முழுதும் | கொடிய க்லேசங்கள் அனைத்தும் |
| செய்ய கோலம் தட கண்ணன் | சிவந்து அழகையுடைத்தாய் விசாலமான திருக் கண்களையுடையனாய் | வீய | நசிக்கும்படியாக |
| | | ஏத்தி | துதித்து |
| விண்ணோர் பெருமான் தன்னை | நித்யஸூரி நாதனை எம்பெருமானை | உள்ள பெற்றேன் | என்னெஞ்சாலே அநுபவிக்கப் பெற்றேன். |

* * *—கீழ்ப்பாசுரத்திற் சொன்ன மேன்மைக்கு அடியான பிராட்டி ஸம்பந்தத்தையுடையவனை ஸகலதாபங்களும் தீரும்படி புகழப்பெற்றேனென்கிறார். **மையகண்ணாள்**—கறுத்த கண்ணையுடையவள் என்றபடி. ஸ்த்ரீகளுக்கு இது லக்ஷணம். வடநூலார் அஸிதேக்ஷணா என்று பிரயோகிப்பர்கள். பிராட்டி எம்பெருமானுடைய கரிய திருமேனியை இடைவிடாது கண்டுகொண்டிருப்பதனால் கருமை மிக்க கண்ணையுடையளாயினள்போலும் என்று ரஸோக்தியாகவும் நம் முதலிகள் அருளிச்செய்வர்கள். "பெரிய பிராட்டியார் திருக்கண்களாலே ஒருகால் கடாக்ஷித்தால் ஒருபாட்டம் மழை பொழிந்தாப்போலே ஸர்வேச்வரன் திருமேனி குளிரும்படியாயிற்றிருப்பது" என்ற ஈட்டு ஸ்ரீஸூக்தியும் நோக்குக.

**மலர்மேலுறைவாளுறை மார்பினன்**=பூவிலும் கூசி அடியிடுமவள் பொருந்தி வாழப்பெற்ற திருமார்வை யுடையவன். ஸ்ரீஜநகராஜன் திருமகள் பெருமானைக் கைப்பிடித்த பின்பு ஸ்ரீ மிதிலாபுரியை நினையாதாப்போலே ஸ்ரீமஹாலக்ஷ்மியும் இவன் மார்பில் சுவடு அறிந்தபின்பு தாமரைப் பூவையும் நினைக்கமாட்டாளாம்.

செய்யகோலத் தடங்கண்ணன் = பிராட்டியானவள் எம்பெருமானுடைய கரியகோலத் திருவுருவைக் கண்டுகொண்டேயிருந்து கருங் கண்ணியானதுபோலே, எம்பெருமானும் அப் பிராட்டியினுடைய செய்ய திருமேனியையே கடாக்ஷித்துக்கொண்டிருக்கையாலே அத்திரு மேனியிற் சிவப்பு ஊறி இவன் செய்யகோலத்தடங்கண்ணனாயிருக்கும். இக்கண்ணழகும் இச்சேர்த்தியழகும் காட்டிவெறித்த நிலாவாகாமே அநுபவிக்கைக்கு ஒரு நாடாகவுண்டு என் கிறது விண்ணோர்பெருமான்தன்னை என்று.

ஆக இப்படிப்பட்ட எம்பெருமானைத் தொடையழகு பொருந்திய சொல்மாலைகளைக் கொண்டு துதிக்கவே, அநுபவித்தே அறவேண்டும்படியான கருமபந்தங்களடங்கலும் தொலைந் தொழிந்தன வென்கிறார் பின்னடிகளில். இன்னாருடைய கருமபந்தங்கள் என்று பிரித்துச் சொல்லாமையாலே, உலகத்திலேயே கருமபந்தங்கள் இல்லையாம்படி செய்துவிட்டமை தோன்றுகின்றது. நம்பிள்ளையீடு:—"பனை நிழல்போலே என்னையொருவனையும் நோக்கிக் கொள்ளுகையன்றிக்கே * ஊரும்நாடு முலகமும் தன்னைப்போலேயாம்படி நானிருந்த விபூதியிலுண்டான கருமங்களுமடைய நசித்ததென்கை. .... .... ... (உ)

வீவிலின்பம்மிக எல்லைநிகழ்ந்தநம்மச்சுதன் *
வீவில்சீரன்மலர்க்கண்ணன் விண்ணோர்பெருமான்தன்னை *
வீவில்காலமிசைமாலைகளேத்தி மேவப்பெற்றேன் *
வீவிலின்பம்மிக எல்லைநிகழ்ந்தனன்மேவியே. (௩)

| | | | |
|---|---|---|---|
| வீவு இல் இன்பம் | அழிவில்லாத ஆனந்தமானது | வீவு இல் காலம் | ஒழிவில்லாத காலமெல்லாம் |
| மிக எல்லை நிகழ்ந்த | மிகுதியான எல்லையிலே வர்த்திக்கிற(படியினாலே) | இசை மாலைகள் | இசைமிக்கசொல்மாலைகளாலே |
| நம் அச்சுதன் | அச்சுதன் என்னும் திருநாமத்தையுடையனாய் | ஏத்தி | துதித்து |
| | | மேவ பெற்றேன் | கிட்டப்பெற்றேன்; |
| வீவு இல் சீரன் | முடிவில்லாத வைலக்ஷண்யத்தையுடையனாய் | மேவி | கிட்டி. |
| மலர் கண்ணன் | தாமரை மலர்போன்ற கண்களையுடையனாய், | வீவு இல் இன்பம் | முடிவில்லாத ஆனந்தத்தினுடைய |
| விண்ணோர் பெருமான் தன்னை | விண்ணோர்க்குத் தலைவனானவனை | மிக எல்லை | முடிவான எல்லையிலே |
| | | நிகழ்ந்தனன் | இராநின்றேன். |

* * *—திருவாய்மொழிபாடி அடிமை செய்யப்பெறுகையால் தமக் குண்டான ஆனந்தம் எம்பெருமானுடைய ஆனந்தத்தையும் அதிசயித்தது என்கிறார். முதலடி ஆனந்தவல்லியை யடியொற்றி அருளிச்செய்ததென்று ஆசாரியர்கள் திருவுள்ளம்பற்றுகிறார்கள். ஆனந்தவல்லியாவது தைத்திரீயோப நிஷத்தில் ஒரு பகுதி. அது எம்பெருமானுடைய திருக்குணங்களுள் ஒன்றான ஆனந்த குணத்தைப்பற்றிப் பேசுகின்றது. அந்த ஆனந்தம் இவ்வளவு கொண்டதென்று சொல்ல முடியாதென்பதைக் காட்டுவதற்கு அங்கு ஒருவகையான கல்பனை செய்யப்பட்டிருக்கிறது. (அதாவது—) ஒரு மநுஷ்யன்; அவன் நல்ல யௌவந பருவத்திலுள்ளவன்; ஸகல சாஸ்திரங்களையும் ஒன்று விடாமல் ஓதிப் பிறர்களுக்கும் ஓதுவிப்பவன். ஆலஸ்யமின்றி எல்லாக் காரியங்களையும் வழுவாமற் செய்பவன்; தேஹத்திலும் மனத்திலும் திடமுள்ளவன்; இவ்வளவும் வாய்ந்தாலும் தரித்ரனாயிருந்தால் பயனில்லையே. அப்படியன்றிச் செல்வமெல்லாம் நிறைந்த பூமண்டலம் முழுவதையும் செங்கோல் செலுத்தி ஆளும்படியான ஒப்புயர்வற்ற ஸம்பத்தும் வாய்ந்தவன். இப்படிப்பட்ட அதிசயங்கள் நிறைந்த ஒரு மநுஷ்யனிருந்தால் அவனுக்கு உண்டாகக்கூடிய ஆனந்தத்தை முன்னே எடுத்துக்காட்டி, அதைவிட நூறு பங்கு அதிகமான ஆனந்த முடையவர்களாக மநுஷ்ய கந்தர்வர்கள் என்ற வகுப்பைக்கூறி,

அவர்களைவிட நூறுபங்கு அதிகமான ஆனந்த முடையவர்களாக தேவகந்தர்வர்களைக் கூ
இப்படியே நூறுநூறுபங்கு அதிகமான ஆனந்த முள்ளவர்களாக வரிசையாய் சிரலோகவோ
பித்ருக்களையும், ஆஜாநஜ தேவர்களையும், கர்மதேவ தேவர்களையும், தேவர்களையும் இந்திரனையு
ப்ருஹஸ்பதியையும் பிரஜாபதியையும் சொல்லிவந்து, அந்த ப்ரஜாபதியின் ஆனந்தத்தைவிட
நூறுபங்கு அதிகமான ஆனந்தமுடையது பரப்ரஹ்மம் என்று சொல்லப்பார்த்து, 'பரப்ரஹ்ம
தின் ஆனந்தத்தை இவ்வளவு மட்டமாகவா சொல்லிவிடுகிறது' என்று குறைப்பட்டு "யதோ
வாசோ நிவர்த்தந்தே" என்றபடி மறுபடியும் திரும்புகிறதாம்; அதாவது கீழ்ச் சொல்லி
கொண்டுவந்த ப்ரக்ரியையில் கடைசியாக யாதொரு ப்ரஜாபதி சொல்லப்பட்டானோ, அவ
அடுத்த பர்யாயத்தில் மநுஷ்ய ஸ்தானத்திலே நிறுத்தி அவன் முதலாக ப்ரஜாபதி யளவு
சொல்லிக்கொண்டுபோய், அந்த ப்ரஜாபதியின் ஆனந்தத்தைவிட நூறுபங்கு அதிகமான ஆன
தம் பரப்ரஹ்மத்தினுடையது என்று சொல்லி முடிக்கப்பார்த்து அதுவும் கூடாமையாலே
முன்போலே மறுபடியும் ஒரு பர்யாயம் சொல்லுவது—இப்படியே அந்தாதியாக இன்றை
கும் புநஃபுநராவ்ருத்தியிலேயே கிடக்கின்றானும் வேத புருஷன்.

இப்படி அபரிச்சேத்யமான ஆனந்த முடையவனெம்பெருமான் என்று இப்பாட்டி
முதலடியில் அருளிச்செய்து, ஈற்றடியில், "வீவிலின்பம் மிகவெல்லை நிகழ்ந்தனன்" என்கை
யாலே எம்பெருமானுடைய ஆனந்தவல்லியிற் காட்டிலும் ஆழ்வாருடைய ஆனந்தவல்லி
மேம்பாடுடையதாகக் கொள்ள இடமுண்டு.

வீவு—விச்சேதம்; அது இல்லாத இன்பம்—அவிச்சிந்நமான ஆனந்தம். அதுதா
எவ்வளவென்னில், மிகவெல்லைநிகழ்ந்த—'இனி இதுக்கு மேலில்லை' என்னலாம் படியா
எல்லையிலுள்ளதாம்.

வீவில்சீரன் என்று நித்ய விபூதியுடைமையையுஞ் சொல்லும்; கல்யாண குணமுடை
மையையுஞ் சொல்லும். மலர்க்கண்ணன்—இயற்கையான ஆனந்தமுடையவ னென்னு
மிடம் திருக்கண்கள்தானே கோட்சொல்லித் தருமாம். ... ... ... (ரு)

மேவிநின்றுதொழுவார் வினைபோகமேவும்பிரான் *
தூவியம்புள்ளுடையான் அடலாழியம்மான்தன்னை *
நாவியலாலிசைமாலைகளேத்தி நண்ணப்பெற்றேன் *
ஆவியேன்னாவியை யானறியேன்செய்தவாற்றையே. (சு)

| | | | |
|---|---|---|---|
| மேவி நின்று தொழுவார் வினை போக | நெஞ்சு பொருந்தியிருந்து அனுபவிப்பாருடைய பாபங்கள்யாவும் நசிக்கும்படி | அம்மான் தன்னை | ஸர்வேச்வரனை |
| மேவும் | தான் அவர்களோடே கலக்கின்ற | நா இயலால் | நாவினுடைய தொழிலாலே |
| பிரான் | மஹோபகாரகனாய் | இசை மாலைகள் | இசைரூபமான மாலைகளையிட்டு |
| தூவி அம் புள் | சிறகுகளையுடைய அழகிய பெரிய திருவடியை | ஏத்தி நண்ண பெற்றேன் | ஏத்துகையாகிற நண்ணுதலைப் பெற்றேன்; |
| உடையான் | ஊர்தியாகவுடையனாய் | ஆவி | எனக்கு அந்தராத்ம பூதனான எம்பெருமான் |
| அடல் ஆழி | போர்வல்ல திருவாழியையுடையனை | என் ஆவியை | என்னுடைய ஆத்மாவை |
| | | செய்த ஆற்றை | இங்ஙனம்செய்த ப்ரகாரத்தை |
| | | யான் அறியேன் | நான் அறியமாட்டேன். |

* * *—நித்ய ஸூரிநாதனாயிருந்துவைத்து நித்ய ஸம்ஸாரியான என்பக்கலில் பண்ணி
யருளின மஹோபகாரம் என்னே! என்று ஈடுபடுகிறார்.

எம்பெருமானுக்கு ப்ரணதார்த்திஹரன் என்று ஒரு திருநாமமுண்டு; அதன் பொருளை முதலடியில் அநுஸந்திக்கிறார். மேவி நின்று தொழுகையாவது தன்னையே விரும்பித் தொழுகை; ப்ரயோஜநாந்தரங்களுக்கு மடியேலாதே அநந்யப்ரயோஜநர்களாய்த் தொழுகை. "நம்புர் மேவும் நசையாகும்மே" என்கிறபடியே மேவுதலாவது ஆசைப்படுகை; தன்னையே ஆசைப்பட்டு என்றபடி. ப்ரயோஜநாந்தரங்களை ஆசைப்பட்டுத் தொழுவாருடைய வினைகளைப் போக்கமாட்டானோ? என்று கேட்கவேண்டா.

தூவி அம் புள்ளுடையான்—தூவியென்று சிறகுக்குப்பெயர்; கருத்மானுக்குச் சிறகிருக்கின்றமையை இவர் எடுத்துரைக்க வேணுமோ? வேண்டா; ஆயினும் உரைப்பது அநுபவரஸிக்யத்தாலேயாகும். "பண்கொண்ட புள்ளின் சிறகொலி பாவித்துத் திண்கொள்ள வோர்க்கும் கிடந்தென் செவிகளே" என்று கீழே அருளிச்செய்தாரே, ஆழ்வாருடைய திருவுள்ளத்திலே பெரியதிருவடியின் சிறகே உறைத்திருக்கும் போலும். அம்புள்—அழகிய புள்; என்ன அழகு என்னில்; "க்ஷமம் ஸம்ஸ்ருதி கிணாங்கஶோபிநா—த்வதங்க்ரி ஸம்மர்த்த கிணாங்க சோபிநா." என்று ஆளவந்தார் அருளிச்செய்தபடியே எம்பெருமானுடைய திருவடி பட்டுப் பட்டுத் தழும்பேறின அழகு.

அடலாழியம்மான் = அடல்—கொல்லுகை, வலிமை, போர், வெற்றி என நான்கு பொருள்களுண்டு.

நா இயலால் இசைமாலைகளேத்தி — நாப்புரட்டினதெல்லாம் இயலும் இசையுமாயிற்றென்பர். கவிபாடவேணுமென்கிற முயற்சியின்றியே நாக்கு இயம்பிற்றெல்லாம் நல்லிசை மாலைகளாயினவாம். திருவாய்மொழியைக் கொண்டு அவனையேத்தி அநுபவிக்கப் பெற்றேனென்கை.

[ஆவி என்னுவியை இத்யாதி.] ஆவி என்கிறது எம்பெருமானை; உலகுக்கு ஓருயிராயிருக்கையாலும், வேதாந்தங்களிலே ஆத்மா என்று எம்பெருமானை வழங்கியிருக்கையாலும் ஆவியென்னத் தட்டில்லை, [என் ஆவியைச் செய்தவாற்றை யானறியேன்] விபுவான தான் அணுவான வென்னைத் தன்னிலும் மேற்பட்ட (அல்லது, தன்னோடொத்த) ஆனந்தத்தையுடையேனாம்படி பண்ணினவிதம் ஆச்சரியம் என்றவாறு. .... ... ... (௪)

ஆற்றநல்லவகைகாட்டும் அம்மானை * அமரர்தம்
ஏற்றை எல்லாப்பொருளும்விரித்தானையெம்மான்தன்னை *
மாற்றமாலைபுனைந்தேத்தி நாளும்மகிழ்வெய்தினேன் *
காற்றின்முன்னம்கடுகி வினைநோய்கள்கரியவே. (௫)

| | | | |
|---|---|---|---|
| ஆற்ற | பொறுக்கப்பொறுக்க | எம்மான் தன்னை | எம்பெருமானை, |
| நல்ல வகை | விலக்ஷணமாயுள்ள (ஜ்ஞாந பக்திகள் பரபக்தி பரஜ்ஞாந பரம பக்திகளாகிற) ப்ராகாரங்களை | வினை | பாபங்களும் |
| | | நோய்கள் | பெரிய வ்யாதிகளும் |
| காட்டும் | அடியார்களுக்குக் காட்டிக் கொடுக்கின்ற | காற்றின் முன்னம் கடுகி | காற்றிலும் வேகமாய் ஓடிப்போய் |
| | | கரிய | வெந்துபோம்படியாக |
| அம்மானை | சர்வேச்வரனாய் | மாற்றம் மாலை புனைந்து | சொல்மாலையைத் தொடுத்து |
| அமரர் தம் ஏற்றை | நித்தியஸூரிநாதனாய் | ஏத்தி | துதித்து |
| எல்லாப் பொருளும் | எல்லா அர்த்த விசேஷங்களையும் (கீதோபநிஷந் முகத்தாலே) | நாளும் | ஸர்வகாலமும் |
| விரித்தானை | விரிவாக உபதேசித்தவனை | மகிழ்வு எய்தினேன் | மகிழ்ச்சியைப்பெற்றேன் |

* * *—எம்பெருமான் அடியார்களுக்குக் செய்தருள நினைக்கும் நன்மைகளை ஒருகாலே செய்து முடிப்பதில்லை; பொறுக்கப் பொறுக்கச் சிறிது சிறிதாகச் செய்தருள்வன். ஆசார்யஹ்ருதயத்தில் இரண்டாவது ப்ரகாணத்திலுள்ள * புணர்தோறு மென்னக் கலந்துபிரிந்து * இத்யாதி சூர்ணிகை இங்கு அநுஸந்தேயம்: அதன் கருத்தாவது—* பொய்ந்நின்ற ஞானமும் பொல்லாவொழுக்கு மழுக்குடம்புமிந் நின்ற நீர்மையினி யாமுறாமை யென்று பிரார்த்தித்தபோதே ஆழ்வாருடைய அபேக்ஷிதம் செய்துவிடலாமாயிருக்க இவரை இந்நிலத்திலே வைத்துத் தன்னுடைய ஸம்ச்லேஷ விச்லேஷங்களாலே ஜ்ஞானபக்திகளை வளர்த்தது எதுக்காக வென்னில்; கனமான கர்ணபூஷணமிடுதற்கு இடமாம்படி நூலிட்டுத் திரியிட்டுக் குதம்பையிட்டுக் காது பெருக்குமாபோலவும், ஒருமாஸம் உபவாஸமிருந்தவர்களுக்கு முதலிலே போஜனமிட்டால் பொறாதென்று சோற்றையரைத்து உடம்பிலே பூசிப் பொரிக்கஞ்சி கொடுத்துப் பொரிக்கூழ் கொடுத்து நாளடைவிலே போஜனம் பொறுப்பிக்குமா போலவும்; பகவதநுபவம் கணக்கண்டறியாத விவர்க்கு அதிச்லாக்யமாய் நித்யஸூரிகள் அநுபவிக்கிற போகத்தை முதன் முதலிலே கொடுத்தால் ஸாத்மியாதென்று கருதி அதஸாத்மிக்கைக்காக ச்ரமம் செய்வித்தபடி என்கை.

ஆற்ற நல்லவகை இன்னாருக்குக் காட்டும் என்னுமையாலே இது பொதுவிலே சொன்னதித்தனை. ஆழ்வாரிடத்திலே ஸமந்வயம் காணலாம்.

எல்லாப்பொருளும் விரித்தானை = அறியவேண்டிய பொருள்களையெல்லாம் பகவத்கீதை முகமாக விரித்தருளிச் செய்தவனென்றபடி. அப்பொருள்களாவன '—ஜீவாத்மாக்களுக்கும் பரமாத்மாவுக்கும் பேதம், ஜீவர்களுக்குள் பரஸ்பர பேதம், அசித்திற்காட்டில் சித்துக்குண்டான வாசி, ஆத்மாக்களின் நித்யத்வம் தேஹங்களின் அநித்யத்வம், ஸகல ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளையும் பண்ணுவித்தலாகிற நியாமகத்வம் ஈச்வரனுக்கேயுள்ள தென்பது பக்திமான்கள் நிமித்தமாகவும் அவதார ப்ரயுக்தமாகவும் அவன் எளியனாகின்றானென்பது, ஆச்ரயிக்குமிடத்து அனைவர்க்கும் ஸமனாயிருக்கிறானென்பது (அதாவது) அறிவு ஒழுக்கம் ஜாதி முதலியவற்றால் ஏற்றத்தாழ்வு பெரிது முடைய எவ்வகுப்பினர்க்கும் ஒருங்கே ஆச்ரயணீயனாக இருத்தல், அஹங்காரதோஷம், இந்த்ரிய ப்ராபல்யம், மற்றை யிந்திரியங்களிற் காட்டிலும் மநஸ்ஸினுடைய ப்ராதாந்யம், நான்கு வகைப்பட்ட ஸுக்ருதிகளின்பேதம், **தேவாஸுர விபாகம், விபூதியோகம், விச்வரூபதர்சநம்.** ஸாங்கபக்தி, அங்கப்ரபத்தி ஸ்வதந்த்ரப்ரபத்தியாகிற இருவகை ப்ரபத்தி—என்றிப்படிப்பட்ட பொருள்களாம். ஸ்ரீவசநபூஷணத்தில் முதல் ப்ரகரணத்தில்—"அறியாதவர்த்தங்களையடைய அறிவித்து" என்றவிடத்து மணவாளமாமுனிகளின் வியாக்கியானத்தில் இவ்வர்த்த விசேஷ விவரணம் நன்கு காணத்தக்கது.

இப்படி எம்பெருமான் பண்ணின வுபகாரத்திற்குக் கைம்மாறு காணாமையாலே எத்தினேன், அது திருவாய்மொழியாய்த் தலைக்கட்டிற்று; துக்கங்களும் துக்கஹேதுவான கருமங்களுமெல்லாம் விரைவாகவே தொலைந்தன வென்கிறார்

காற்றில் முன்னங்கடுகி என்றது—விரைவின் மிகுதியைச் சொன்னபடி. (௫)

கரியமேனிமிசை வெளியநீறுசிறிதேயிடினும் *
பெரியகோலத்தடங்கண்ணன் விண்ணோர்பெருமான்தன்னை *
உரியசொல்லாலிசைமாலைகளேத்தி உள்ளப்பெற்றேற்கு *
அரியதுண்டோவெனக்கு? இன்றுதொட்டுமினியென்றுமே. (௬)

| | | | |
|---|---|---|---|
| கரிய மேனி மிசை | கூரிய விழியின் மேலே | இசை மாலைகள் | இசைவடிவான மாலைகளை யிட்டு |
| வெளிய நீறு | அஞ்சன நீற்றினை | ஏத்தி | துதித்து |
| சிறிதே இடும் | அளவாக அணிகிற | உள்ள | அநுபவிக்க |
| பெரிய கோலம் | அளவிறந்த அழகினையுடைய | பெற்றேற்கு எனக்கு | பெற்றவனான எனக்கு |
| தடம் கண்ணன் | விசாலமான திருக்கண்களையுடையனாய் | இன்று தொட்டும் | இன்று தொடங்கி |
| விண்ணோர் பெருமான் தன்னை | நித்யஸூரிகளுக்குத் தலைவனான ஸர்வேச்வரனை | இனி என்றும் | இனிமேலுள்ள காலம் எல்லாம் |
| உரிய சொல்லால் | (இவ்வழகுக்குத்) தகுதியான சொற்களாலே | அரியது உண்டோ | துர்லபமாயிருப்பதும் ஒன்றுண்டோ |

* * *—'ஆழ்வீர் ! உமக்கு வேண்டுவது என் ?' என்று எம்பெருமான் கேட்க, இது வரையில் நான் பெறுதே இனி ஸாதித்துத்தரவேண்டுவதொரு பொருளுண்டோ வென்கிறார். [கரியமேனி மிசை வெளிய நீறு சிறிதேயிடும்] இதற்குப் பலவகையாகப் பொருள் பணிப்பர்கள். மேலே "பெரிய கோலத்தடங்கண்ணன்" என்று திருக்கண்களின் ப்ரஸ்தாவமிருக்கையாலே கரிய மேனி மிசை என்றது—திருக்கண்களில் கருவிழியினுடைய கறுத்த நிறத்தால் வந்த அழகுக்கு மேலே என்றபடி. வெளிய நீறு சிறிதேயிடும்—அஞ்ஜன சூர்ணத்தை மங்கலமாகச் சிறிது அணிந்து கொள்ளுகிற என்றபடி. "வெளியம்—அஞ்ஜனம்" என்று பன்னீராயிரம். வேதாந்த தேசிகன் தாத்பர்யரத்நாவளியில் இப்பாசுரத்திற்காக "கர்ப்பூராலேபசோபே" என்றருளிச் செய்திருக்கக்காண்கையாலே, சாமளமான திருமேனியிலே பச்சைக்கருப்பூர தூளியையணிந்து கொள்ளுகிற என்றும் பொருள் கொள்ளலாம். வெளிய என்றது வெள்ளிய என்றபடி.

கரி அம்மேனிமிசை வெளிய, நீறு சிறிதேயிடும் என்று கொண்டு, கரி—குவலயாபீட யானையானது, அம்மேனிமிசை—கண்ணபிரானது அந்தத் திருமேனியிலே, வெளிய—சீறிப் பாய்ந்தவளவிலே, சிறிதே—க்ஷணகாலத்திற்குள், நீறு இடும்—அந்த யானையைப் பொடி படுத்தின—என்றுமொரு தமிழன்.

உரிய சொல்லால்—திருவாய்மொழிக்கு இது அஸாதாரணமான பெருமை ராம கதையைச் சொல்லுவதாக ராமாயணமென்று தொடங்கி, கங்கையின் உற்பத்தி, ஸுப்ரம் மண்யனுடைய உற்பத்தி, புஷ்பகவர்ணநம் முதலான கதைகளைப் பரக்கப் பேசுவதால் அஸத்கீர்த்தநம் பண்ணி வாக்கிலே அசுத்தி படைத்தான் வால்மீகி; 'நாராயண கதை' என்பதாகத் தொடங்கி ஸம்பவபர்வத்திலே பீஷ்மர் முதலான பற்பலருடைய உத்பத்தி ப்ரகாரங்களை விரிவாகப்பேசுகையாலும், 'பூசல்பட்டோலை' [யுத்த புஸ்தகம்] என்னும்படி பாரதப் போர் வகைகளையே பரக்கநின்று வருணித்த படியாலும் அஸத்கீர்த்தனத்திலே மிகவும் பரந்து அசுத்திபடைத்தான் வேத வ்யாஸபகவான். ஆகவிப்படி, தொடக்கினபடிக்குச் சேராமே அஸத்கீர்த்தநத்தைப் பண்ணி வாக்கை அசுத்தமாக்கிப் பின்பு "அஸத்கீர்த்தந காந்தார பரிவர்த்தந பாம்ஸுலாம்। வாசம் ஸௌரிகதாலாப கங்கயைவ புநீமஹே.'' அஸத்கீர்த்தந காந்தார பரிவர்த்தந பாம்ஸுலாம், வாசம் சௌரிகதாலாப கங்கயைவ புநீமஹே.'' என்று அதற்கு சுத்திபண்ண வேண்டாதபடி "திருமாலவன் கவி யாது கற்றேன்" (திருவிருத்தம்) என்று திருமால் விஷயமான கவியென்று அடியில்வாயோலை யிட்டபடியே இதர விஷயஸம்பந்தமுள்ள ஒரு சொல்லும் ஊடு கலசாதபடி சொற்களைத் தெரிந்தெடுத்து விஷயத்திற்குத் தகுதியான சொற்களாலே அருளிச் செய்ததிறே திருவாய்மொழி.

இப்படித் திருவாய்மொழிபாடி அநுபவிக்கப் பெற்ற வெனக்கு இனி அருமை யானது எதுவுமில்லை யென்ருராயிற்று. (க

என்றுமொன்ருகி ஒத்தாரும்மிக்கார்களும் * தன்தனக்கு
இன்றிநின்ருனை எல்லாவுலகுமுடையான்தன்னை *
குன்றமொன்ருமல்மழைகாத்தபிரானைச் சொல்மாலைகள் *
நன்றுசூட்டும்விதியெய்தினம் என்னகுறைநமக்கே ? (எ

| | | | |
|---|---|---|---|
| என்றும் | பரத்வம் முதலான ஸர்வாவஸ்தைகளிலும் | மழை | மழையை |
| ஒன்று ஆகி | ஒரேப்ரகாரமுடையனுய்க் கொண்டு | குன்றம் என்றுல் | மலை ஒன்றினுலே |
| ஒத்தாரும் மிக்கார்களும் | ஸமராயும் அதிகராயும் இருப்பார் | காத்த பிரானை | தடுத்த மஹோபகாரகனை வனைக்குறித்து |
| தன்தனக்கு | தனக்கு | சொல் மாலைகள் | சொல்மயமான மாலைகளை |
| இன்றி நின்ருனை | இல்லாமலிருப்பவனுய் | நன்று சூட்டும் விதி | அவன் ஆதரித்துச் சூடும்படி சூட்டுகைக்குற்ற பாக்கியத்தை |
| எல்லா உலகும் உடையான் தன்னை | எல்லாவுலகத்தையும் தனக்கு சேஷமாக வுடையனுய், | எய்தினம் | கிட்டப் பெற்றோம்; (ஆதலால்) |
| | | நமக்கு என்னகுறை | நமக்கு ஒருகுறை யுண்டோ |

* * *- ம்ப்பாட்டில் "அரியதுண்டோ வெனக்கு இன்று தொட்டு மினி யென்றுமே" என்று செருக்குத் தோற்றப் பேசினர். இத்தகைய செருக்கு எத்தாலே வந்ததென்ன, எம்பெருமானருளாலே வந்த தென்கிருரிப் பாட்டில்.

பரமபத நிலயனுய் நிற்கும் நிலைமையோடு, மநுஷ்யாதி ஸஜாதீயனுய் அவதரிக்குமவதாரங்களோடு வாசியற எல்லா நிலைமைகளிலும் தன்னோடு ஒத்தவர்களும் மேம்பட்டவர்களுமின்றிக்கே யிருப்பவனுய், ஸகல லோகங்களையும் தனக்கு சேஷமாகவுடையனுய், அந்த சேஷவஸ்துக்களுக்கு இந்திரனுல் நேர்ந்த ஆபத்தை, கண்டதொரு மலையாலே போக்கினவனுன ஸர்வேச்வரனைத் திருவாய்மொழியாகிற சொல்மாலைகளாலே அழகாக அலங்கரிக்கும்படியானபாக்கியம் பெற்றோம்; ஆனபின்பு நமக்கு ஒரு குறையுண்டோ வென்கிருர்.

என்றும் ஒன்ருகி என்றது—மேலே சொல்லப்படுகிற, ஒத்தாரும் மிக்கார்களும் தனக்கு இல்லாமையாகிற விஷயம் எல்லா நிலைமைகளிலும் ஒரே விதமாகவேயிருக்கு மென்றபடி. பரவ்யூஹ விபவ அந்தர்யாமி அர்ச்சாவதாரமென்கிற நிலைமைகளுக்குள்ளே ஒவ்வொரு நிலைமையும் ஒத்தாரும் மிக்காருமின்றி யிருக்குமென்கை.

தன்தனக்கின்றி நின்ருனை என்கிற விடத்திற்கு ஒரு விசேஷார்த்தமுண்டு, ஆளவந்தார் மகனுர் சொட்டை நம்பி பணித்தாராம்;—"தன் தனக்கு என்றது தானுன தனக்கு என்றபடி: ஒருவகைக்கு ஒப்பின்றிக்கே யிருக்கிறது பரத்வத்தில் அல்ல 'ஆத்மாநம் மாநுஷம் மந்யே' என்கிறபடியே, அவதரித்து மனிசு ஏறிட்டுக்கொண்டு நிற்கிறநிலையிலே" என்று.

மேலே கூறப்பட்ட அர்த்தம் எந்தச் சொல்லிலிருந்து கிடைக்கின்றது? என்று ஆராயவேணும். கேண்மின்: தனக்கு என்னுமல் தன்தனக்கு என்றதில் உட்புகுந்து ஆராயவேணும்; ஸ்ரீ பரதாழ்வானேடுகூட சித்திரகூடஞ் சென்ற வஸிஷ்டபகவான் ஸ்ரீராமபிரானை நோக்கி "[illegible]—ஆத்மாநம் நாதிவர்த்தேதா:" என்ருன்; 'தன்னைமீருதே' என்பது சப்தார்த்தம். இங்கே ஆத்மாநம் என்பதற்கு- 'உயிர் நிலையான பரதாழ்வானை' என்று சிலர் பொருள் கூறுவதுண்டு. அப்படியல்லாமல் பட்டர் அருளிச்செய்வதாவது—

ஆத்மாநம் என்பது தானான தன்மையை யென்றபடி; தானான தன்மையாவது ஆச்ரித பாரதந்திரியம்; அதனை இழக்கவேண்டா என்பதாம். வடமொழியில் ஆத்மா என்பது போலத் தமிழில் தான் என்பதாம். அது தன்னிலும் தனக்கு என்பதற்கும் மேலாக, 'தன்தனக்கு' என்கையாலே எம்பெருமானுடைய தானானதன்மையையே சுட்டிக்காட்டுகிற சொல் இது என்று கொள்ளவேணும். எம்பெருமானுடைய தானான தன்மை எதுவென்றால் ஆச்ரித பாரதந்திரியமே யென்பது கீழே நிரூபிக்கப்பட்டது. ஆகவே, ஆச்ரிதபாரதந்திரனாக அவதரித்த விடத்திலே ஒத்தாரும் மிக்காரு மில்லாதிருப்பவன் என்றதாயிற்று. இதனால் தேறிய கருத்து யாதெனில்; எம்பெருமானுடைய பரத்வத்திற்கு எல்லைகண்டாலும் காணலாம்; அவனுடைய ஸௌசீல்யத்திற்கு அளவுகாண முடியாது என்பதாம்.

இங்ஙனே பூர்ணனான விஷயத்தை நாம் எங்ஙனே பேசுவது! என்று கொண்டு மீளாதே, அவன் திறத்திலே நிரம்பப் பேசப் புகுந்த என்னுடைய பாக்கியமே பாக்கியம் என்றாராயிற்று.

நமக்கும்பூவின்மிசைநங்கைக்கும் இன்பனை*ஞாலத்தார்
தமக்கும் வானத்தவர்க்கும்பெருமானை*தண்டாமரை
சுமக்கும்பாதப்பெருமானைச் சொல்மாலைகள்*சொல்லுமாறு
அமைக்கவல்லேற்கு இனியாவர்நிகராகல்வானத்தே? (எ)

| | | | |
|---|---|---|---|
| நமக்கும் | நித்ய ஸம்ஸாரிகளான நமக்கும் | பாதம் பெருமானை | திருவடிகளை யுடையனுமான ஸர்வேச்வரன் விஷயத்தில் |
| பூவின் மிசை நங்கைக்கும் | தாமரை மலரில் வசிக்கும் பெரிய பிராட்டியாருக்கும் | சொல்மாலைகள் | திருவாய்மொழியை |
| இன்பனை | இன்பமளிப்பவனும் | சொல்லும் ஆறு | சொல்லும்படியாக |
| ஞாலத்தார் தமக்கும் | லீலாவிபூதியிலுள்ளார்க்கும் | அமைக்க வல்லேற்கு | அமைதியைப்பெற்ற எனக்கு |
| வானத்தவர்க்கும் | பரமபத வாசிகளுக்கும் | அகல்வானத்து | அகன்ற நித்ய விபூதியிலும் |
| பெருமானை | தலைவனும் | யாவர் இனிநிகர் | யார்தான் இனி ஒப்பாவார்? |
| தண் தாமரை சுமக்கும் | குளிர்ந்த தாமரை மலர் சுமக்கும்படியான | | |

* * *—ஆழ்வார், தம் பக்கலிலே எம்பெருமானுக்குண்டான அபிநிவேசத்தைக் கண்டு, இப்படிப்பட்ட எம்பெருமானைக் கவிபாட வல்ல எனக்குப் பரமபதத்தில் ஸூரிகளும் கொல்லர் என்கிறார்.

பெரியபிராட்டியாரிடத்திலும், அவளுடைய பரிகரமான நம்மிடத்திலும் ஸ்நேஹித்திருப்பவன் எம்பெருமான் என்று இக்கிரமத்திலே யிட்டுப் பாசுரமருளிச்செய்ய வேண்டியிருக்க, "நமக்கும் பூவின்மிசை நங்கைக்கும்" என்று தம்மை முந்துறச் சொல்லிப் பிறகு பிராட்டியைச் சொல்லியிருப்பது கொண்டு ஒரு விசேஷார்த்தம் சிக்ஷிக்கப்படும். [ஆசார்ய ஹ்ருதயத்தில் இரண்டாம் பிரகரணத்தில்—"இன்பு மன்பும் முற்படுவது கொழுந்துவிடுவதாகிறது" இத்யாதி சூர்ணிகை இங்கே அநுஸந்தேயம்.] எம்பெருமான் ப்ரீதிபண்ணுமிடத்தில் நித்யாநபாயிநியான பிராட்டியிற்காட்டிலும் அதிகமாகவே நம்மிடத்தில் பண்ணுவனென்னுமிடம் இதனால் அறியத்தக்கது. இங்கே ஈட்டு ஸ்ரீஸூக்திகாண்மின்;—"இன்பனை யிடத்தில் முற்பாடு இங்கேயாய்ப் பின்பாயிற்று அவளுக்கு ஸ்நேஹித்திருப்பது" என்று.

இவ்வர்த்தம் ஸ்ரீராமாயணத்தில் ஒரு ஸந்தர்ப்ப விசேஷத்தில் பெருமாளாலேயே வெளியிடப்பட்டது; எங்ஙனே யென்னில், பெருமாள் எழுந்தருளி நிற்கச்செய்தே இராவ

ணன் கோபுர சிகரத்திலேவந்து தோன்றினவாறே 'ராஜ த்ரோஹியான பயல் இங்ஙனம் கூச்சமின்றித் திருமுன்பே நிற்பதும் நீதியோ' என்று சீற்ற முற்ற ஸுக்ரீவமஹாராஜர் அவன் மேலே எழப்பாய்ந்து மீண்டு வந்தபோது பெருமாள் " ஷுயி கிஂசி ஸூஜாவஞெ கிஂகாயஷு, ஸீதயா ஊ—த்வயி கிஞ்சித் ஸமாபந்நே கிம் கார்யம் ஸீதயா மம?" என்றார்; 'உனக்கு ஓர் அனர்த்தம் விளையுமாகில் பின்னை ஸீதாபிராட்டிதான் எனக்குக்கிடைத்தென்ன? என்பது இதன் பொருள். இதனால், பிராட்டி பக்கலிற்காட்டிலும் அடியவர் திறத்தில் எம்பெருமானுக்குள்ள அன்பின் கனம் அறியவெளிதாம்.

**ஞாலத்தார் தமக்கும் வானத்தவர்க்கும் பெருமானை** = இங்கும் வானத்தவர்க்கு முன்னே ஞாலத்தார் முற்படுகிறார்கள். இங்கே ஈடு:—"மாதாபிதாக்கள் ப்ரஜைகளில் குறைவாளர் பக்கலிலேயிறே; அத்தாலே ஸம்ஸாரிகள் முற்படவேண்டுகிறது" என்று. நித்ய விபூதியிலுள்ளார்க்கு இரங்குவது மீனுக்குத் தண்ணீர்வார்ப்பது போலேயாமித்தனை. ஞாலத்தவர்க்கு இரங்குவதே பாலை நிலத்தில் தண்ணீர்ப்பந்தல் வைத்தவாறாம்.

**தண்தாமரை சுமக்கும் பாதப்பெருமானை** = குளிர்ந்த ஆஸநபத்மத்தாலே தரிக்கப்பட்ட திருவடிகளையுடையவனென்கை. எம்பெருமானுடைய திருவடிகளின் கீழ் பத்மாஸநமிருப்பது அறியத்தக்கது. "அடிச்சோதி நீ நின்ற தாமரையாய் அலர்ந்ததுவோ" என்றதும் அநுஸந்தேயம். தண்டாமரையின் மீது விளங்குகின்ற பாதங்களையுடையவன் என்னவேண்டுமிடத்தில் "**தண்டாமரை சுமக்கும் பாதன்**" என்றது ஒரு உத்ப்ரேக்ஷையில் நோக்காக. அதாவது—குளிர்த்தியிலும் பரிமளத்திலும் செவ்வியிலும் தாமரைப்பூவானது திருவடிக்குத் தோற்றுப்போயிற்றும்; தோற்றவர்கள் வென்றவர்களைச் சுமப்பது என்கிற ஒரு வியவஸ்தை உலகில் காண்பதாதலால், தோல்வியடைந்த தாமரைப்பூ வெற்றிபெற்ற திருவடியைச் சுமக்கவேண்டியதாயிற்றுப்போலு மென்கை.

ஆழ்வான் ஸுந்தரபாஹுஸ்தவத்தில் இக்கருத்தை அமைத்து ஒரு ச்லோகமருளிச் செய்தார்;— * ஸௌஂஜய ஊா஢ ஊவஸெு ஹஸாரஸஷூவாஹெஃ ஸஂதெஹி ஸுஂஜாஸுஜஸு வஞாரவிஹெ। சுஂஹொஜஸஂஹவெரிரஂஹணஊஷூெஜஷாஂ தஹெெ வராஜிதஊிஊ ஶிரஸா விஹதீ-ஃ = ஸௌந்தர்ய மார்த்தவ ஸுகந்தரஸப்ரவாஹை: ஏதே ஹி ஸுந்தரபுஜஸ்ய பதாரவிந்தே, அம்போஜடம்பபரிரம்பணமப்யஜைஷ்டாம் தத் வை பராஜிதமிமே சிரஸா பிபர்த்தி.' என்பதாமது. அழகு, ஸௌகுமார்யம், நறுமணம், மகரந்தரஸப்ரவாஹம் ஆகிய இவற்றாலே அழகருடைய இந்தத் திருவடிகளானவை தாமரையை வென்றிட்டபடியினால் தோல்வியடைந்த அந்தத் தாமரைப்பூ இந்தத் திருவடிகளைச் சுமக்கின்றது என்றவாறு. இப்படிப்பட்ட எம்பெருமான் விஷயத்திலே சொல்மாலைகள் சொல்லுமாறு அமைக்கவல்ல எனக்குத் திருநாட்டிலும் இனி நிகரில்லை யென்கிறார்.

**சொல்மாலைகள் சொல்லுமாறு அமைக்க வல்லேற்கு** என்ற விடத்தில் நிர்வாஹ பேத முண்டு; பட்டருக்கு முன்புள்ள முதலிகள் எப்படி நிர்வஹித்தார்களென்றால், ஆழ்வாரை நோக்கி ஸர்வேச்வரன் 'ஆழ்வீர்! நம்மைக்குறித்து ஒரு கவி சொல்லும்' என்றால் சிறிதும் மயங்காமல் அப்போதே சடக்கெனக் கவி சொல்லி முடிக்கும்படியான **வல்லமை** வாய்ந்த எனக்கு—என்று நிர்வஹித்துப் போந்தார்களாம்: பட்டர் நிர்வஹிப்பதாவது—மேலே ஏழாம் பத்தில் * **என்றைக்கு மென்னை** என்கிற திருவாய்மொழியிற்படி ஸர்வேச்வரன் தானே கவி பாடின ஆகையாலே கவிபாடின ஸாமர்த்தியம் அவ்வளவாகப் பாராட்டத்தக்கதன்று; அந்த எம்பெருமான் திருக்கண்களாலே குளிரக் கடாக்ஷித்து 'நீர் ஒரு கவிசொல்லும்' என்றால்

* உள்ளெலாம் உருகிக் குரல்தழுத் தொழிந்தேன் * என்னுங் கணக்கிலே சிதிலராகாமே தரித்து நின்று சொல்மாலைகள் சொன்னதன்றோ பாராட்டத்தக்கது; அந்தத்தன்மையை ஆழ்வார் இங்கு அருளிச்செய்கிறார் என்றும். அமைக்க என்ற சொல்லின் ஸ்வாரஸ்யத்திற்கு மிகவும் பொருந்திய நிர்வாஹம் இது. அமைத்தல்—தரித்தல். .... .... (அ)

வானத்தும்வானத்துள்ளும்பரும் மண்ணுள்ளும்மண்ணின்கீழ்த்
தானத்தும் * எண்டிசையும்தவிராதுநின்றான் தன்னை *
கூனற்சங்கத்தடக்கையவனைக் குடமாடியை
வானக்கோனை * கவிசொல்லவல்லேற்கு இனிமாறுண்டே ? (9)

| | | | |
|---|---|---|---|
| வானத்தும் | ஸ்வர்க்கத்திலும் | கூன் நல் சங்கம் | வளைந்தவடிவால் அழகிய ஸ்ரீபாஞ்சஜந்யத்தை |
| உள்வானத்து உம்பரும் | அதுக்குள்ளாய்ப் பெரியதாயிருக்கிற மஹர்லோகாதிகளிலும் | தட கையவனை | பெரிய திருக்கையிலுடையவனும் |
| மண்ணுள்ளும் | பூமிக்குள்ளும் | குடம் ஆடியை | குடக்கூத்தினாலே ஸகல ஜனங்களையும் வசீகரித்தவனும் |
| மண்ணின் கீழ் தானத்தும் | பூமியின்கீழ் இருக்கிற பாதாள உலகத்திலும் | வானம் கோனை | நித்ய ஸூரிகளுக்குத் தலைவனுமான ஸர்வேச்வரன் விஷயத்திலே |
| எண் திசையும் | இவற்றிலுண்டான எட்டு விதமான பதார்த்தங்களிலும் | கவி சொல்ல வல்லேற்கு | கவி பாடவல்ல எனக்கு |
| தவிராது | ஒன்றிலும் நழுவாதபடி | இனி மாறு உண்டே | இனி எதிர் உண்டோ ? |
| நின்றான் தன்னை | வ்யாபித்து நிற்பவனும் | | |

* * *— இப்பாட்டு ஆழ்வாருடைய ஸர்வவிலக்ஷணமான பெருமையைக் காட்டுகின்றது. பரமபதத்திலுள்ள நித்யர்களென்ன. முக்தர்களென்ன, இவ்விபூதியிலுள்ள பராசர பாராசர்ய வால்மீகி ப்ரப்ருதிகளான மஹர்ஷிகளென்ன, ஆகிய இவர்களெல்லாரிற் காட்டிலும் ஆழ்வார்க்குண்டான வைலக்ஷண்யம் இப்பாசுரத்தில் வெளியாகின்றது. எம்பெருமானுடைய பரவ்யூஹவிபவ அந்தர்யாமி அர்ச்சாவதாரங்களென்ற எல்லா நிலைமைகளிலும் புக்குக் கவிசொல்லவல்ல வெனக்கு எதிருண்டோ வென்கிறார்.

நித்யமுக்தர்கள் பரத்வமல்லது வேறொன்றையும் அறியார்கள். மஹர்ஷிகளில் வந்தால், பராசர பகவானும் வேதவ்யாஸபகவானும் க்ருஷ்ணாவதாரமல்லது மற்றொன்று அறியார்கள். வால்மீகி பகவான் ஸ்ரீராமாவதாரமன்றி யறியான். ஸநக ஸநந்தநாதிகள் அந்தர்யாமித்வத்திலே அதிகமாக ஊன்றியிருப்பர்கள். இங்ஙனே பார்க்குமிடத்து ஒவ்வொருவர்க்கு ஒவ்வொன்று பாழியாயிருக்கும். நம்மாழ்வாருடைய தன்மை இங்ஙனேயன்று; * வானத்தும் வானத்துள்ளும்பரும் மண்ணுள்ளும் மண்ணின் கீழ்த்தானத்தும் எண்டிசையும் தவிராது நின்றானைக் கவிபாடுபவராயிற்றிவர். இங்கு விசேஷணம்ஸங்களில் முழுநோக்கு. விசேஷ்யபூதனான எம்பெருமான் விஷயத்திலே கவிபாடுதல் மற்றவர்கட்கும் உள்ளதேயானாலும், விசேஷணம்ஸங்களிலே தனித்தனியே புகுந்து அவ்வோ நிலைமைகளுக்கும் கவிபாடுதல் ஆழ்வாரொருவர்க்கேயாமித்தனை.

முன்னிரண்டடிகளாலே எம்பெருமானுடைய ஸர்வவ்யாபகத்வம் சொல்லப்படுகிறது. இந்த வ்யாப்தியை மற்றையோர்கள் பேசுவதிற்காட்டிலும் ஆழ்வார் பேசுவதிலே சுவை மிக்கிருக்கும். ''பரந்த தண்பரவையுள் நீர்தொறும் பரந்துளன்'' என்பது முதலான பாசுரங்கள் காண்க.

எம்பெருமானுடைய வ்யாப்தி விஷயத்திலே சிலர் விப்ரதிபத்தி பண்ணிப்போருவர்கள். அணுவான பதார்த்தங்களிலே எம்பெருமானுக்கு உள்ளீடாக வ்யாப்தி ஸம்பவிக்க

மாட்டாதென்றும், ஒரு பதார்த்தத்திலே அவனுக்குப் பரிபூர்ண வ்யாப்தியை அங்கீகரிக்குமளவில் மற்றொரு பதார்த்தத்தில் வியாபிக்க ப்ரஸக்தியில்லாமையாலே பரிஸமாப்ய வ்யாப்தியை அங்கீகரிக்கலாகாதென்றும் இங்ஙனே சில விப்ரதிபத்திகளைப் பண்ணுகிற்பர்கள். இவற்றுக்கெல்லாம் பரிஹாரமாக ப்ரஹ்மவ்யாப்தி பரிஷ்க்ரியா என்கிற வடமொழி க்ரந்தம் இயற்றியுள்ளோம்; அதிலே பார்க்கக் கண்டுகொள்வது.

கூனல் சங்கத் தடக்கையவனை = முன்னிரண்டடிகளிற் சொல்லியபடி எங்கும் வியாபித்து நிற்கிறவன் அடியவர்களைக் காத்தற்பொருட்டு மநுஷ்யஸஜாதீயனாய் வந்து அவதரிக்கும்படி சொல்லுகிறது. இங்குச் சங்கைச் சொன்னது சக்கரத்திற்கும் உபலக்ஷணம். கண்ணனாய்த் திருவவதரிக்கும் போது திருவாழி திருச்சங்கோடே வந்து பிறந்தமை அறியத்தக்கது. "ஜாதோஸி தேவதேவேஶ! ஶங்கசக்ர கதாதர!*" என்ற வஸுதேவர் வார்த்தையும் காண்க.

குடமாடியை என்று குடக்கூத்தைச் சொன்னது கிருஷ்ணாவதார சேஷ்டிதங்களுக்கெல்லாம் உபலக்ஷணம். இங்ஙனே கிருஷ்ணாவதாரத்தைத் தெரிவித்தது மற்றுமுள்ள விபவாவதாரங்களுக்கெல்லாம் உபலக்ஷணம்.

வானக்கோனை = ஸ்ரீவைகுண்டத்திலே ஒரு நாட்டுக்காகக் காட்சி கொடுத்துக்கொண்டிருக்கிறபடி. பரவ்யூஹ விபவாந்தர்யாமி யர்ச்சவதாரமென்கிற ஐந்தனுள் மூன்று இப்பாட்டில் சொல்லப்பட்டன; திருவாய்மொழி அர்ச்சாவதார வேதமாதலால் அர்ச்சாவதாரத்தை விசேஷித்து எடுக்கவேண்டா. வியூஹத்தைப்பற்றிச் சொல்லவேண்டுவது அதிகமில்லையென்று திருவுள்ளம்.

"எம்பெருமான்றன்னைக் கவிசொல்லவல்ல என்னை பொக்குமோ ஸர்வேச்வரனை எம்பெருமான்தானும்" என்பது ஆறாயிரப்படியருளிச் செயல்.

> உண்டுமுமிழ்ந்துங்கடந்துமிடந்தும் கிடந்துநின்றும் *
> கொண்டகோலத்தொடுவீற்றிருந்தும் மணங்கூடியும் *
> கண்டவாற்றால் தனதேயுலகெனநின்றான்தன்னை *
> வண்டமிழ்நூற்கநோற்றேன் அடியார்க்கின்பமாரியே.

| | | | |
|---|---|---|---|
| உண்டும் | (ப்ரளயத்திலே) உண்டு வயிற்றிலே வைத்தும் | மணம் கூடியும் | பதினாயிரம் ஆண்டு பூமியை ரக்ஷிக்கையாலே பூமிப்பிராட்டி விரும்பி யணைக்க அவளோடே ஸம்ச்லேஷித்தும் |
| உமிழ்ந்தும் | பிறகு வெளி நாடு காண உமிழ்ந்தும் | | |
| கடந்தும் | [மற்றொருகால்] அளந்து காற்கீழேயிட்டும் | கண்ட ஆற்றல் | இப்படி ப்ரத்யக்ஷமாகக் கண்ட சேஷ்டிதங்களால் |
| இடந்தும் | [அவாந்தர ப்ரளயத்திலே வராஹ ரூபியாய்] இடந்தெடுத்தும் | உலகு தனதே என | உலகம் தனக்கே சேஷம் என்று நாடாகச்சொல்லும்படி |
| கிடந்தும் | [ஸ்ரீராமாவதாரத்திலே] கடற்கரையிலே கிடந்தும் | நின்றான் தன்னை | நின்ற ஸர்வேச்வரன் விஷயத்தில் |
| நின்றும் | இராவணவதத்தின் பிறகு தேவர்கட்குக் காட்சி கொடுத்துநின்றும் | வண் தமிழ் நூற்க | அழகிய தமிழ்ப்பிரபந்தத்தை தொடுக்கைக்கு |
| கொண்ட கோலத்தொடு | மீண்டுவந்து பட்டாபிஷேகம் பண்ணின கோலத்தோடே | நோற்றேன் | புண்ணியம் பண்ணினேன்; [இத்திவ்யப்ரபந்தமானது] |
| வீற்றிருந்தும் | எழுந்தருளியிருந்தும் | அடியார்க்கு இன்பம் மாரி | எம்பெருமானடியார்கட்கு ஆனந்த மழைபொழியும் மேகமாயிராநின்றது. |

* * *—தாம் பாடுகிற கவிகளின் இனிமையைத் தாம் அநுஸந்தித்து, எம்பெருமானுக்கு நல்லராயிருக்கும் ஸ்ரீ வைஷ்ணவர்கள் இவற்றைக் கேட்டால் எங்ஙனே இனியராகிறரோ வென்கிறர். எம்பெருமானுடைய சேஷ்டிதங்களடங்க என் சொல்லுக்குள்ளேயாம்படி கவிபாட வல்லேனாய் ப்ராப்த விஷயத்திலே வாசிகமாக அடிமை செய்யப்பெற்றது மாத்திரமன்றிக்கே ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு ஆனந்தமளிக்கவல்லவனானே னென்கிறர்.

எம்பெருமானுடைய சேஷ்டிதங்கள் பலவற்றையும் முன்னடிகளில் கங்காப்ரவாஹம் போல் அருளிச்செய்கிறர். உண்டது ப்ரளயாபத்தில், உமிழ்ந்தது ப்ரளயம் நீங்கினவாறே; கடந்தது வாமநாவதாரத்தில். இடந்தது வராஹாவதாரத்தில். கிடந்தது கடற்கரையிலே; ஸேதுபந்தனத்திற்கு முன்னே ஸமுத்ரராஜனை நோக்கி அஞ்ஜலிபண்ணிக்கிடந்தகிடை. நின்றது-ராவண ஸம்ஹாரம் ஆனபிறகு தேவர்களுக்குக் காட்சி கொடுத்து நின்றது. கொண்ட கோலத்தொடு வீற்றிருந்தது-ஜடா வல்கலதாரியாய்ப் பர்ணசாலைகளிலே இருந்த இருப்பாதல்; மகுடாபிஷேகஞ் செய்துகொண்டு பதினோராயிரமாண்டு இருந்த இருப்பாதல். * தசவர்ஷ ஸஹஸ்ராணி தசவர்ஷ சதானி ச, ராமோ ராஜ்ய முபாஸித்வா * (தச வர்ஷஸஹஸ்ராணி தச வர்ஷசதானி ச, ராமோ ராஜ்யமுபாஸித்வா.) என்கிறபடியே பதினோராயிரமாண்டு பூமியை ரக்ஷிக்கையாலே பூமிக்கு அபிமானியான பிராட்டி விரும்பியணைக்க, அவளோடே ஸர்ச்லேஷித்தமை சொல்லுகிறது மணங்கூடியும் என்று.

கண்டவாற்றல் என்றது-இப்படி ப்ரத்யக்ஷஸித்தமான சேஷ்டித ப்ரகாரங்களாலே என்றபடி. ஒருவன் ஒரு நிலத்தைத் திருத்துவது செடிகொடிகள் வைப்பது எருவிடுவதாய் நெடுங்காலம் க்ருஷிபண்ணக்கண்டால் 'இந்த நிலம் இவனுடையது' என்று அறியலாமன்ரு; அதுபோல, உண்கை உமிழ்கை முதலான பலபல சேஷ்டிதங்களினல் 'உலகமெல்லாம் எம்பெருமானுடையது' என்று அறுதியிடக் குறையில்லையாயிற்று.

ஆக இப்படிப்பட்ட எம்பெருமான் விஷயமாகத் திருவாய்மொழிபாடுகைக்குப் பாக்கியம் பண்ணினேன்; இத்திருவாய்மொழியானது தொண்டர்கட்கு ஆனந்தத்தைப் பொழியும் மேகமாகவுள்ளது என்கிறது ஈற்றடி.

ஆசார்யஹ்ருதயத்தில் "வீட்டின்ப வின்பப்பாக்களில் த்ரவ்யபாஷா நிரூபணஸமம் இன்பமாரியிலாராய்ச்சி" என்றவிடத்து இன்பமாரி என்பதற்கு "திருவாய்மொழி முகத்தாலே ஆனந்தத்தை வர்ஷிக்கும் மேகமான ஆழ்வார்" என்று வியாக்கியானம் காண்கையாலே இங்கு "அடியார்க்கு இன்பமாரியாகிய நான் வண்டமிழ் நூற்கநோற்றேன்" என்று உரைத்துமாம். .... .... .... .... .... (க0)

மாரிமாறுததண்ணம்மலை வேங்கடத்தண்ணலை *
வாரிமாறுதபைம்பூம்பொழில்சூழ் குருகூர்நகர் *
காரிமாறன்சடகோபன் சொல்லாயிரத்திப்பத்தால் *
வேரிமாறுதபூமேலிருப்பாள் வினைதீர்க்குமே. (கக)

| | |
|---|---|
| மாரி மாறுத | மழைதப்பாதபடியினலே |
| தண் | குளிர்ந்து |
| அம் | அழகியதான |
| வேங்கடம் மலை | திருவேங்கடமலையிலேயுள்ள |
| அண்ணலை | ஸ்வாமி விஷயமாக |

| | |
|---|---|
| வாரி மாறுத | ஜலஸம்ருத்தி குறையாத |
| பை பூ பொழில் சூழ் | பரந்த பூஞ்சோலைகளாலே சூழப்பட்ட |
| குருகூர் நகர் | திருநகரியில் (அவதரித்த) |

| | |
|---|---|
| காரி மாறன் சடகோபன் | ஆழ்வார் |
| சொல் | அருளிச்செய்த |
| ஆயிரத்து | ஆயிரத்தில் |
| இப்பத்தால் | இப்பத்துப் பாசுரங்களினால், |
| வேரி மாருத | பரிமளம் அருத |
| பூ மேல் இருப்பாள் | தாமரை மலரிலே நித்ய வாஸம் பண்ணுகிற பிராட்டி |
| வினை தீர்க்கும் | எல்லாப் பாபங்களையும் போக்கி யருள்வள். |

* * *—இத்திருவாய்மொழி கற்பாருடைய தீவினைகளையெல்லாம் பெரியபிராட்டியார் தீர்த்தருளக்கூடுமென்று பயனுரைத்துத் தலைக்கட்டுகிறார். மழை ஒருநாளும் மாறாதபடியாலே குளிர்ந்து அழகியதான திருவேங்கடமலையிலே, தாழ்ந்தார்க்கு முகங்கொடுக்கைக்காக வந்து நிற்கிற சீலம்பொருந்திய எம்பெருமான் விஷயமாகப்பணித்ததாம் இப்பதிகம்; ஒரு பாசுரத்திலும் திருவேங்கடமுடையானுடைய ப்ரஸ்தாவமே இல்லையாயிருக்க இங்ஙனே சொல்லுவானேன்? என்னில்; தர்மியின் ஐக்கியத்தைக் காட்டினபடி. திருவாய்மொழிக்கு அர்ச்சாவதாரத்திலேயே முழுநோக்கு என்று காட்டினபடியுமாம். இப்பதிகத்தில் "நமக்கும் பூவின்மிசை நங்கைக்கு மின்பனை" என்று பெரிய பிராட்டியார்க்கு முன்பே நித்யஸம்ஸாரிகளுக்கு முகங்கொடுக்கும் சீலத்தைச் சொல்லிற்றாகையாலே சீலத்துக்கு எல்லையான திருவேங்கடமுடையானைக் கவிபாடினபடியாயிற்றென்ப.

"வேரிமாருதபூமேலிருப்பாள் வினைதீர்க்கும்" என்கையாலே பிராட்டிக்கும் எம்பெருமானுக்குப் போலவே பலனளிக்குந்திறன் உண்டென்று சிலர் சொல்லுவர்கள். நம்மை எம்பெருமான் அங்கீகரிப்பதற்கு இடையூறாக இருக்கும் தீவினைகளைப் புருஷகாரக்ருத்யத்தாலே பிராட்டி போக்குவாள் என்றதித்தனை. சதுச்ச்லோகீ பாஷ்யத்திலே ஸ்ரீமந்நிகமாந்ததேசிகன் "𑌅𑌸𑍍𑌤𑌿 𑌕𑌰𑍍𑌮𑌾𑌰𑍍𑌹𑌫𑌲𑌦𑍇 𑌪𑌤𑍍𑌯𑍌 𑌕𑍃𑌤𑍍𑌯𑌦𑍍𑌵𑌯𑌂 𑌶𑍍𑌰𑌿𑌯𑌃 । 𑌨𑌿𑌗𑍍𑌰𑌹𑌾𑌤𑍍 𑌵𑌾𑌰𑌣𑌂 𑌕𑌾𑌲𑍇 𑌸𑌂𑌧𑍁𑌕𑍍𑌷𑌣𑌮𑌨𑍁𑌗𑍍𑌰𑌹𑍇—அஸ்தி கர்மார்ஹபலதே பத்யௌ க்ருத்யத்வயம் ச்ரிய:, நிக்ரஹாத் வாரணம் காலே ஸந்துக்ஷணமநுக்ரஹே." என்று ஒரு காரிகை அருளிச் செய்துள்ளார். இஃதொன்று போதும் அவ்வாசிரியருடைய ஸித்தாந்தத்தை நன்கு தெளிய. இக்காரிகையின் பொருளில் யாரும் விவாதப்பட இடமில்லை. இதிற் சொல்லுவதாவது—கர்மாநுகுணமாய்ப் பலன் கொடுப்பதில் எம்பெருமானுக்கே அதிகாரமுள்ளது. அவன் ஹிதைஷியான பிதாவாகையாலே சிலஸமயங்களில் நிக்ரஹிப்பது முண்டு; சில ஸமயங்களில் அநுக்ரஹிப்பதுமுண்டு; அப்படிப்பட்ட ஸமயங்களில் பிராட்டி என்ன செய்கிறாளென்னில், அவன் அநுக்ரஹத்தில் அபிமுகனாயிருக்கும்போது இவள் அதை மேன்மேலும் வளரச்செய்வதில் ஊக்கங்கொள்ளுகிறாள்; நிக்ரஹத்தில் அபிமுகனாயிருக்கும்போது அதைத்தணிப்பதிலே ஊக்கங்கொள்ளுகிறாள். இவ்விரண்டு செயல்களே பிராட்டியினுடையவை—என்பதே மேற்குறித்த காரிகையின் பொருள். 'இதுவன்று பொருள்' என்று யாரும் இயம்ப இயலாது. இதுதான் தேசிகஸித்தாந்தம்; இதுவேதான் லோகதேசிக ஸித்தாந்தமும். (கக)

ஐந்தாந்திருமொழி உரை முற்றிற்று

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## நான்காம்பத்து ஆறாந் திருவாய்மொழி—தீர்ப்பாரையாமினி.

உரையவதாரிகை:—கீழில் சென்ற திருவாய்மொழிக்கு அடுத்தபடியாக இந்தத் திருவாய்மொழி இருக்கத் தகுதியில்லை யென்று நம்முதலிகள் கூறுவர்களாம். கீழ்த்திருவாய்மொழி எல்லை கடந்தப்ரீதியோடே சென்றது; அதற்கு எதிர்த்தட்டாய்ச் செல்லுகிறது

இத்திருவாய்மொழி. கீழ்ப்பதிகத்திற்கும் இப்பதிகத்திற்கும் ஸங்கதி அருளிச் செய்ய வேணுமென்று எம்பாரைச்சிலர் கேட்டார்களாம்; அதற்கு எம்பார் "இதற்கு நான் என்ன சொல்லுவேன்? அஸங்கதிரேவ ஸங்கதி: என்று கொள்ளுங்கோள்" என்றாராம்; இது இன் சுவையே வடிவெடுத்த வார்த்தையாகும். ஸங்கதி சொல்ல முடியாதென்று ஆபாத ப்ரதீதியிலே பொருளாம்; அஸங்கதி: என்றது அஸம்ச்லேஷமென்றபடியாய் விச்லேஷத்தைச் சொல்லிற்றாய், விச்லேஷந்தான் இதற்கு ஸங்கதி என்கை பரமார்த்தம்.

* மண்ணையிருந்து துழாவியில் ஆழ்வார்க்கு உண்டான வ்யாமோஹத்தைத் தணிப்பதற்காக வந்து கிட்டின வைகுந்தநாதன் மறைய நிற்க, அந்தப்பிரிவை ஆற்றமாட்டாமல் இத்திருவாய்மொழி விஷாதத்திலேயாய்ச் செல்லுகின்றது. வெறிவிலக்குத் துறையிலே அவதரித்ததாம் இத்திருவாய்மொழி. ஆழ்வார் தாமான தன்மையையிழந்து ஒரு தலைமகளாம் நிலைமையை எய்தி, அதுதன்னிலும் தம்வாயாலே சொல்லமாட்டாமல் வேற்று வாயாலே சொல்லவேண்டித் தோழியின் பேச்சாகச் செல்லுகின்றது.

பிரிவாற்றாது மிகவருந்திய தலைமகளது வடிவுவேறுபாட்டினைக் கண்டதாய்மார் 'இவள் இங்ஙனம் மெலிதற்குக் காரணம் என்னோ?' என்று கவலைப்பட்டுக் கட்டுவிச்சியைக் குறிகேட்க, அவளும் தன் மரபின்படி ஆராய்ந்து 'இவளுக்கு முருகக்கடவுள் ஆவேசித்ததொழியப் பிறிதொன்றுமில்லை' என்று கூற, அதுகேட்ட தாயர் உடனே வெறியாட்டாளனை அழைப்பித்து அவனைக்கொண்டு ஆவேசமாடுவிப்பதும் க்ஷுத்ரதெய்வங்களுக்கு உரிய ஸந்தர்ப்பணைகளை யிடுவிப்பதும் செய்ய, அதற்குத் தலைமகள் மிகவருந்தாநிற்க அச்சமயத்தில் அவளது துன்பத்தின் உண்மையான காரணமுணர்ந்த தோழி அந்த ப்ரவ்ருத்திகளைக் கண்டித்துக் கூறுகிற பாசுரமாய்ச் செல்லுகிறது.

ஸ்ரீவைஷ்ணவக் கட்டுவிச்சியென்றும் தேவதாந்தரக் கட்டுவிச்சியென்றும் கட்டுவிச்சிகளிலே இரண்டு பேதமுண்டு; திருமங்கையாழ்வாருடைய சிறிய திருமடலிலே வந்தவள் ஸ்ரீ வைஷ்ணவக் கட்டுவிச்சி; இத்திருவாய்மொழியில் "இதுகாண்மினன்னைமீர் இக்கட்டுவிச்சி சொற்கொண்டு, நீர் எதுவானுஞ் செய்து அங்கோர் கள்ளுமிறைச்சியுந் தூவேன்மின்" என்கிற பாசுரப்பட்டிக்கு வந்தவளான கட்டுவிச்சி தேவதாந்தரக் கட்டுவிச்சியாவள்.

"கண்டியூரரங்கம் மெய்யம் கச்சிபேர் மல்லையென்று மண்டியே திரிவேனை யாரிங்கழைத்ததூஉ!"

"விண்ணகரம் வெஃகா விரிதிரை நீர் வேங்கடம் மண்ணகரம் மாமாடவேளுக்கை எங்குந்திரிந்து இன்றே மீள்வேனை யாரிங்கழைத்ததூஉ";

"வேங்கடமும் விண்ணகரும் வெஃகாவுமஃகாத பூங்கிடங்கின் நீள்கோவல் பொன்னகருமெங்குந் திரிந்து இன்றே மீள்வேனை யாரிங்கழைத்ததூஉ;"

"கொங்குங்குடந்தையுங் கோட்டியூரும்பேரும் எங்குந்திரிந்து இன்றே மீள்வேனை யாரிங்கழைத்ததூஉ"

என்று கர்ணாம்ருதமாகப் பாடிக்கொண்டே வீதியாரவருவள் ஸ்ரீ வைஷ்ணவக் கட்டுவிச்சி;

"பிணங்களிடு காடதனுள் நடமாடு பிஞ்ஞகனோர் குணங்களையே நிச்சலும் கூறித் திரிவேனை யாரிங்கழைத்ததூஉ!"

"வெந்தாரென்பும் சுடுநீறும் மெய்யில் பூசிக் கையகத்தோர் சந்தார் தலை கொண்டுலகேழுந்திரியும் பெரியோன் குணம்பாடி இன்றேதிரிவேனை யாரிங்கழைத்ததூஉ!"

"சுடலையில் சுடு நீறனமர்ந்ததோர் நடலையைப்பாடி நாடெங்குந்திரிவேனை யாரிங்கழைத்ததூஉ!"

"அக்கும் புலியினதளு முடையாரவரொருவர் பக்கமே சென்று பாரெல்லாம் திரிவேனை
யாரிங்கழைத்ததூஉ!"

"ஆறும் பிறையுமரவமுமடம்புஞ்சடை மேலணிந்துடலம் நீறும் பூசி ஏறூருமிறையோன் துறைபு
படிவேனை யாரிங்கழைத்ததூஉ"

என்று பாடிக்கொண்டே திரிவள் தேவதாந்தரக் கட்டுவிச்சி. இப்படிப்பட்ட கட்டுவிச்சியின் கட்டுரைகட்கு இணங்கிய செயல்களை விலக்குகின்றதாயிற்று இத்திருவாய்மொழி.

தேவதாந்தர ஸம்பந்தகந்தத்தையும் ஸஹியாத ஆழ்வாருடைய பரம வைஷ்ணவத்வம் சொல்லுகிறது இத்திருவாய்மொழி. .... .... ....

தீர்ப்பாரையாமினி எங்ஙனம்நாடுதுமன்னைமீர் ! *
ஓர்ப்பாலிவ்வொண்ணுதல் உற்றநன்னோயிதுதேறினோம் *
போர்ப்பாகுதான்செய்து அன்றைவரைவெல்வித்த * மாயப்போர்த்
தேர்ப்பாகனார்க்கு இவள்சிந்தைதுழாய்த்திசைக்கின்றதே. (1

| | |
|---|---|
| அன்னைமீர் | தாய்மார்களே! |
| இனி | இப்படிப்பட்ட நிலைமையான பின்பு |
| தீர்ப்பாரை | இந்த நோயைத் தீர்க்க வல்லவர்களை |
| யாம் எங்ஙனம் நாடுதும் | நாம் எவ்விதமாகத் தேடிப்பிடிக்க முடியும்? (முடியாது) |
| ஓர்ப்பால் | நன்கு நிரூபிக்குமளவில் |
| இ ஒள் நுதல் | அழகிய நெற்றியையுடைய இப்பெண்பிள்ளை |
| உற்ற இது | அடைந்திருக்கின்ற இந்த நோயானது |
| நல் நோய் | விலக்ஷணமான நோயாகும்; |
| தேறினோம் | திண்ணமாக அறிந்தோம்; |
| அன்று | முன்பொருகாலத்திலே |
| போர் | பாரதப்போரிலே |
| பாகு | பாகனாயிருந்து செய்யவேண்டிய காரியங்களை |
| தான் செய்து | தானே முன்னின்று நடத்தி |
| ஐவரை | பஞ்சபாண்டவர்களை |
| வெல்வித்த | ஜயம் பெற்றவர்களாகச் செய்வித்த |
| மாயம் | ஆச்சரிய சக்தியுக்தரும் |
| போர் தேர் பாகனார்க்கு | யுத்தபூமியில் தேர்செலுத்தவல்லவருமான பெருமாள் விஷயத்திலே |
| இவள் | இப்பராங்குச நாயகியினுடைய |
| சிந்தை | மனமானது |
| துழாய் | துழாவப்பெற்று |
| திசைக்கின்றது | அறிவழியா நின்றதே! |

* * *—பராங்குசநாயகியின் தோழியானவள், 'இந்நோய் பாண்டவபக்ஷபாதியான கண்ணபிரானடியாக வந்ததாகையாலே இதற்கு நீங்கள் பரிஹாரமாக நினைத்துச் செய்கிறவை பரிஹாரமல்ல' என்று க்ஷேபிக்கிறாள். அன்னைமீர்! யாம் இனித்தீர்ப்பாரை எங்ஙனம் நாடுதும்? = இச்சொல்தொடர் பலவகைக் கருத்துக்களைக் கொண்டது; இவ்வாழ்வாருடைய அருகிலே வருமவர்களெல்லாம் இவரோடொப்ப மோஹிப்பவர்களேயன்றி, உணர்ந்திருந்து பரிஹாரமுறைமைகளை ஆராயவல்லார் ஒருவருமில்லையே! என்கை. நோய்க்குப் பரிஹாரம் பண்ணிக்கொண்டிருக்குமவர்களை நோக்கித் "தீர்ப்பாரையாமினி யெங்ஙனம் நாடுதும்" என்கையாலே நீங்கள் செய்கிறவை பரிஹாரமல்ல என்றவாறுமாம். "கடல்வண்ணரிது செய்தார் காப்பாரார்?" என்கிறபடியே * நோய்களறுக்கும் மருந்தான எம்பெருமான் தானே இங்ஙனே நோய்செய்தானான பின்பு இனி இந்நோயைத் தீர்க்க வழியுண்டோ? என்றபடியுமாம்.

ஓர்ப்பால்—இப்போது ஆராய்ந்து பார்த்தவிடத்தில் என்றபடி. ஓர்ப்பு—ஆராய்ச்சி.

இவ்வொண்ணுதல்—“ஆகத்தினழகு முகத்திலே தெரியும்” என்பர்களே உலகர்கள்; இவனுடைய திருமுகமண்டலத்தில் தெளிவை நோக்கும்போதே இவனுடைய நோய்க்கு நிதானம் தெரியவில்லையோ என்கை. இங்கே ஈடு;—‘அம்புபட்ட வாட்டத்தோடே முடிந்தாரையும் நீர்வேபுக்கு முடிந்தாரையும் முகத்திலே தெரியாதோ? குறைநிக விஷயத்தையாசைப் பட்டுப் பெருமையாலுண்டான மோஹமாகையாலே முகத்தில் செவ்விக்கு அலத்தி வழிக்க வேண்டிற்படியாயிற்றிருக்கிறது.”

நோய் என்னாதே ‘நன்னோய்’ என்கையாலே, ஒவ்வொருவரும் நோன்பு நோற்றுப் பெறவேண்டிய நோயன்றோ இது; இது வளர்வதற்கு வழிதேடவேண்டுமேயல்லது இதைப் பரிஹரிக்க முயல்வது முறையோ? என்ற கருத்து வெளியாம்.

தேறினோம்—தெளிவுபெற்றோ மென்றபடி. இது தோழி சொல்லும் வார்த்தை யாகையாலே, தான் தெளிவு பெற்றதாகச் சொல்லுகிறவிதனால் அங்குள்ளாரெல்லாரும் கலக்கமுற்றிருப்பதாக ஏற்படுகின்றது; இந்தக் கலக்கமே இவர்களுக்கு நிதியாம்; “மஹர்ஷிகளின் கோஷ்டியில் கலக்கம் காணக்கிடைக்காது; ஆழ்வார்களின் கோஷ்டியில் தெளிவு காணக்கிடைக்காது” என்பர் நம் முதலிகள். தெளிந்திருக்க வேண்டுவதன்றோ ப்ராப்தம்; கலங்கியிருத்தல் ஹேயமன்றோவென்று ஸாமாந்யர் நினைப்பர்கள்; “தர்மவீர்யஜ்ஞானத்தாலே தெளிந்து ஹ்ருஷ்டராய் மேலே மேலே தொடுப்பாரைப் போலன்றே அருளின பக்தியாலே உள்கலங்கிச் சோகித்து மூவாறு மாஸம் மோஹித்து வருந்தி யேங்கித் தாழ்ந்த சொற்களாலே நூற்கிறவிவர்” என்ற ஆசார்யஹ்ருதய திவ்யஸூக்தி நோக்குக.

இத்தலைவிக்கு உண்டான நோய் இன்னவகைத்து என்பதைப் பின்னடிகள் நிரூபிப்பன. கண்ணபிரான், பாண்டவர் துர்யோதநாதிகள் என்ற இருவகுப்பினரையும் ஸந்தி செய்விக்கைக்காகத் துரியோதநாதியரிடம் தூதாகச்சென்று பாண்டவர்களும் நீங்களும் பகைமை கொள்ளவேண்டா; ராஜ்யத்தில் இருவர்க்கும் பாகமுண்டு; ஆகையால் ஸமமாகப் பிரித்துக் கொண்டு ஸமாதானமாக அரசாட்சி செய்து வாழுங்கள்; அதற்கு ஸம்மதியில்லாவிடில், தலைக்கு இரண்டிரண்டு ஊராகப் பாண்டவர் ஐவர்க்கும் பத்து ஊரைக் கொடுங்கள்; அதுவும் அரிதானாகில் பாண்டவர்கள் குடியிருக்கும்படி ஓரூரையாவது கொடுங்கள்’ என்று பலபடி அருளிச்செய்ய, அந்தச் சொல்லுக்குச் சிறிதும் இசையாமல் ‘பராக்ரமமிருந்தால் போர் செய்து ஜயித்துக்கொள்ளட்டும்; இந்தப் பூமி வீரர்க்கே உரியது’ என்றிப்படி திக்காரமாக மறுத்துச்சொல்லவே, தான் பாண்டவ பக்ஷபாதியாய்ப் பார்த்தஸாரதியாயிருந்து பாரதயுத்தத்தை நடத்திவைத்து எதிரிகளைத் தோற்பித்து அடியவர்களை வெற்றி பெறுவித்தருளினன் என்ற வரலாறு அறியத்தக்கது.

இவள் சிந்தை துழாய் திசைக்கின்றது மாயப்போர்த் தேர்ப்பாகனார்க்கு=கண்ணபிரானுடைய ஆச்ரிதபக்ஷபாதம், ஆச்ரிதஸௌலப்யம் முதலிய திருக்குணங்களில் ஈடுபட்டதனாலுண்டான நோய்காண்மின் இது என்று தெரிவித்தாளாயிற்று. துழாய்—துழாவி; ப்ரமித்து என்றபடி. .... .... .... .... (க)

திசைக்கின்றதேயிவள்நோய் இதுமிக்கபெருந்தெய்வம் *
இசைப்பின்றிநீரணங்காடும் இளந்தெய்வமன்றிது *
திசைப்பின்றியே சங்குசக்கரமென்றிவள்கேட்க * நீர்
இசைக்கிற்றிராகில் நன்றேயில்பெறுமிதுகாண்மினே. (உ)

| | |
|---|---|
| (அன்னைமீர்) | தாய்மார்களே!, |
| திசைக்கின்றதே | நீங்கள் இப்படியும் அறிவு கெடலாகுமோ? |
| இவள் நோய் இது | இப்பெண்பிள்ளைக்கு உண்டாகியிருக்கின்ற இந்நோயானது |
| மிக்க பெரு தெய்வம் | பராத்பரமான தெய்வமடியாக வந்தது; |
| இசைப்பு இன்றி | தகுதியில்லாதபடி |
| நீர் | நீங்கள் |
| அணங்கு ஆடும் | வெறியாடுவிக்கின்ற |
| இள தெய்வம் அன்று இது | க்ஷுத்ரதெய்வமடியாக வந்ததன்று இது; (ஆதலால்) |
| திசைப்பு இன்றியே | மனக்குழப்பம் தவிர்ந்து |
| நீர் | நீங்கள் |
| இவள்கேட்க | இப்பெண்பிள்ளையின் காதில் விழும்படியாக |
| சங்கு சக்கரம் என்று | சங்கென்றும் சக்கரமென்றும் |
| இசைக்கிற்றிர் ஆகில் | சொல்ல வல்லீர்களாகில் |
| நன்றே | நலமாகவே |
| இல் பெறும் | (இவள்) இல்லிருப்புப் பெறும்படியாகும்; |
| இது காண்மின் | இங்ஙனே நடத்திப் பாருங்கள். |

* * *—க்ஷுத்ரதெய்வங்களைக் குறித்துப்பண்ணும் சாந்திகளால் இவளுடைய நோய் போக்கவரிது; எம்பெருமானுடைய லக்ஷணங்களைச் சொல்லில் இவளைப்பெறலாமென்கிறாள். **திசைக்கின்றதே** என்பது மிக வருந்திச் சொல்வதாகும். இப்படியும் ப்ரமிக்கலாகுமோ! என்று சேஷபிக்கிறபடி.

**இவள் நோயிது மிக்கபெருந்தெய்வம்**=திருவிருத்தத்தில் "வானோர்தலைமகனும் சீராயின தெய்வநன்னோய் இது" என்றும் "சின்மொழிநோயோ கழிபெருந்தெய்வம்" என்றும் உள்ள பாசுரங்கள் இங்கே அநுஸந்திக்கத்தக்கன. "நாராயணவரோ ஜ்ஞாதிராதா நாராயண வரः" என்கிறபடியே பரதெய்வமான ஸ்ரீமந்நாராயணனாலே உண்டுபண்ணப்பட்ட நோய் இது என்றபடி.

**நீர்இசைப்பின்றி அணங்காடும் இளந்தெய்வமன்று இது**—இசைப்பு—பொருத்தம்; அஃதில்லாமல் நீங்கள் செய்வித்துப்போருகிற வெறியாடல் முதலான தீயசெயல்களுக்கு இலக்கான தெய்வமடியாக வந்த நோயல்ல இது என்றபடி. **இசைப்பின்றி** யென்பதற்கு ஈடு;—"நீங்கள் பண்ணுகிற பரிஹாரத்துக்கும் உங்களுக்கும் ஒரு சேர்த்தியில்லை; இந்நோய்க்கும் இவளுக்கும் ஒரு சேர்த்தியில்லை; முதல்தன்னிலே பகவத்விஷயத்திலே கைவைத்தார் கொள்ளுகைக்கு ஸம்பாவனையுடைய நோயன்று இதுதான். ஒரு வழியாலும் ஒரு சேர்த்தியில்லை."

**அணங்காடுதல்**—தெய்வமாவேசித்து ஆடுதல். இனிச்செய்யவேண்டிய ஸமஞ்ஜஸமான பரிஹாரப்ரகாரமுணர்த்துவன பின்னடிகள். **திசைப்பின்றியே**—மருள்கொள்ளாமல். எம்பெருமானுடைய திவ்யாயுதங்களை இவள் செவிப்படுமாறு ப்ரஸ்தாவிப்பதே நன்று என்கை.

இவ்விடத்திலே ஒரு ஐதிஹ்யம்; பட்டர்காலத்தில் ஆய்ச்சிமகன் என்றொருபாகவதர்; அவர் நோவுகண்டு ப்ரஜ்ஞையற்றுக் கிடக்குங்காலத்திலே பட்டர் அவரைப்பார்க்க எழுந்தருளினார்; அப்போது அந்த ஆய்ச்சிமகன் அடியோடு அறிவு நடையாடாதபடி யிருப்பதைக் கண்ட பட்டர் அவர் அழகிய மணவாளனிடத்தில் மிக்க பக்தியுடையவர் என்பது காரணமாக அவருடைய செவியிலே மெள்ள ஊதினாற்போலே 'அழகியமணவாளப்பெருமாளே சரணம்' என்றார்; அதனால் உணர்ச்சியுண்டாய் நெடும்போதெல்லாம் அவர் அந்த வார்த்தையையே சொல்லிக்கொண்டிருந்து திருநாட்டுக்கு நடந்தாராம்.

நன்றே இல்பெறும், நன்று எயில்பெறும்—என்று இரண்டு வகையாகப் பிரிப்பர்கள்; இரண்டாவதில், நன்று—நன்றாக, எயில்பெறும்—வார்த்தை சொல்லப்பெறுவள் என்றவாறு. மயக்கம் நீங்கி உணர்த்தியுண்டாகுமென்கை. .... .... ... (உ)

இதுகாண்மினன்னைமீர் இக்கட்டுவிச்சி சொற்கொண்டு * நீர்
எதுவானும்செய்து அங்கோர்கள்ளுமிறைச்சியும்தூவேன்மின் *
மதுவார்துழாய்முடி மாயப்பிரான் கழல்வாழ்த்தினல் *
அதுவேயிவளுற்றநோய்க்கும் அருமருந்தாகுமே. (உ)

| | | | |
|---|---|---|---|
| அன்னைமீர் | தாய்மார்களே! | மது ஆர் | தேன் பொருந்தின |
| இதுகாண்மின் | நான் சொல்லுகிற இக்காரியத்தைச் செய்துபாருங்கள்; | துழாய் | திருத்துழாய் மாலையை |
| | | முடி | திருமுடியிலணிந்துள்ள |
| நீர் | நீங்கள் | மாயம் பிரான் | ஆச்சர்ய சக்தியுக்தனான ப்ரபுவினுடைய |
| இ கட்டுவிச்சி சொல்கொண்டு | இந்தக் குறத்தியின் பேச்சைக் கேட்டு | கழல் | திருவடிகளை நோக்கி |
| எதுவானும் செய்து | ஸ்வரூப விருத்தமானதைச் செய்து | வாழ்த்தினல் | மங்களாசாஸனம் பண்ணினால் |
| அங்கு | அவ்விடத்திலே | அதுவே | அதுதானே |
| ஓர் கள்ளும் இறைச்சியும் | ஹேயமான மதுவையும் மாம்ஸத்தையும் | இவள் உற்ற நோய்க்கும் | இப்பெண்பிள்ளையடைந்திருக்கிற நோய்க்கும் |
| தூவேன்மின் | ஆராதனையாக வைக்கவேண்டா; | அரு மருந்து ஆகும் | அருமையான மருந்தாகும். |

* * *—தவறுதலான செயல்களைச் செய்யாமல் எம்பெருமான் திருவடிகளை வாழ்த்துவதாகிற பரிஹாரமுறைமையை யனுட்டித்தால் இவளுடைய நோய் தீருமென்கிறாள். நான் சொல்லுகிறவார்த்தை விரைவில் பயன்தருகின்றதா இல்லையா என்பதை நீங்கள் கைமேலே காணுங்கோளென்பாள் இதுகாண்மினன்னைமீர் என்கிறாள். காண்மின் என்றது 'கேண்மின்' என்ற பொருளில் வந்ததாகவும் கொள்ள இடமுண்டு. அன்னைமீர்! என்கையாலே நீங்கள் மிகவும் மூத்தவர்களேயானாலும், சொல்லுகிற நான் சிறுமியேயானாலும் சொல்லும்பேச்சு நல்லதாயிருக்குமாகில் ஆதரிக்கவேண்டாவோ? என்கிற கருத்துத்தொனிக்கும். "வளர்த்ததனால் பயன்பெற்றேன் வருகவென்று மடக்கிளியைக் கைகூப்பி வணங்கினளே" என்கிறபடியே என்போல்வாருடைய பேச்சுக்கு உபசார விசேஷங்கள் செய்யவேண்டியிருக்க, அவை செய்யாவிடினும் காது கொடுத்துக் கேட்கத்தானாகாதோ என்கிற கருத்தும் தொனிக்கும்.

கட்டுவிச்சீ—குறி சொல்லுகிறவள். இகரச்சுட்டு—அவளுடைய இழிவைப் புலப்படுத்தும். "காணிலு முருப்பொலார் செவிக்கினாத கீர்த்தியார், பேணிலும் வரந்தர மிடுக்கிலாத தேவர்" என்கிறபடியே மிகவும் நீசமான தெய்வத்தை வழிபடுகின்ற இவளை எங்கே தேடிப்பிடித்தீர்கள்! என்று க்ஷேபிக்கிறபடி. கண்கொண்டு காணவொண்ணாத இவளை அழைத்து எதிரேயிருத்தினதுமல்லாமல் இவளுடைய கடியகொடிய பேச்சுக்களுக்குக் காது கொடுப்பதுஞ் செய்தீர்களே! என்று இடித்துக்கூறுகிறபடி. இகரச்சுட்டு சொல்லில் அந்வயிக்கவுமாம்; கட்டுவிச்சியின் இச்சொல் என்க.

நீர்—உங்களுடைய வைலக்ஷண்யத்தை நீங்கள் அறியீர்களோ? *மறந்தும் புறந்தொழாத குடியிலே பிறந்துவைத்து நீங்கள் இங்ஙனே செய்யத்தகுமோ? என்பது கருத்து. இவர்கள் செய்கிற காரியம் தனக்கு அஸஹ்யமாயிருக்கிறபடியை எதுவானுஞ்செய்து என்பதனால் காட்டுகின்றாள். வாயால் அதனை அநுவதிக்கவுங் கூசுகிறபடி. ஹேயமான மதுவையும் மாம்ஸத்தையும்தூவி ஸ்ரீ வைஷ்ணவக்ருஹத்தைக் கெடுக்கவேண்டாவென்கிறாள். தேவதாந்தரக்கட்டுவிச்சியின் பேச்சைக்கேட்டு தேவதாந்தர ஸமாராதனம் பண்ணுகிறார்களாகையாலே "கள்ளுமிறைச்சியும் தூவேல்மின்" என்கிறாள். தாமஸ தெய்வங்களுக்குத் தாமஸ பதார்த்தங்களே உகந்த உணவாதலால் "கொல்வன முதலா அல்லனமுயலுமினியசெய்கை"

(திருவாசிரியம்) என்கிறபடியே ஆடுபலி கொடுத்தல் கோழிபலி கொடுத்தல் முதலிய தீ செயல்களைச் செய்கிறார்களாகக் கொண்டு நிவர்த்திப்பிக்கிறபடி.

ஆழ்வாருடைய பரிஸரத்திலே கள்ளும் இறைச்சியும் தாவ ப்ரஸக்திலேசமுமில்லையே; இங்ஙனே அப்ரஸக்த ப்ரதிஷேதம் பண்ணலாமோவென்னில்; கேண்மின்; திருவாய்மொழி பக்திசாஸ்த்ரமாயிருப்பதுபோலவே தர்மசாஸ்த்ரமுமாயிருக்கும். ஸ்ரீவைஷ்ணவ தர்மங்களைத் தெரிவிக்கின்றவத்தனையிலேநோக்கு; ஆஹாரநியமப்ரகரணத்திலே இவை பரிஹரணீயங்கள் என்னுமிடத்தை வற்புறுத்துகிறபடி.

இனி, ஸ்வரூபாநுரூபமான பரிஹாரக்ரமத்தைச் சொல்லுகின்றனை பின்னடிகள். *தோளிணைமேலும் நன்மார்பின்மேலும் சுடர்முடிமேலும் தாளிணைமேலும் புனைந்த தண்ணந்துழாயுடையம்மானது திருவடிகளை ஸ்பர்சித்து "உன்சேவடி செவ்வி திருக்காப்பு" என்று பல்லாண்டு பாடுவளவேபோதும் என்கிறாள். .... ... .... (௩)

மருந்தாகுமென்று அங்கோர்மாயவலவைசொற்கொண்டு * நீர்
கருஞ்சோறும்மற்றைச்செஞ்சோறும் களனிழைத்தென்பயன் *
ஒருங்காகவேயுலகேழும் விழுங்கியுமிழ்ந்திட்ட *
பெருந்தேவன்பேர்சொல்லகிற்கில் இவளைப்பெறுதிரே. (௪)

| | | | |
|---|---|---|---|
| (அன்னைமீர்) | தாய்மார்களே! | என் பயன் | என்ன பலனுண்டாம்? (இது வீணான காரியம்;) |
| மருந்து ஆகும் என்று | நோய்க்குப் பரிஹாரமாகுமென்றெண்ணி | உலகு ஏழும் | ஸப்தலோகங்களையும் |
| ஓர் மாயம் அலவை சொல் கொண்டு | வஞ்சகச் செய்கைகளையுடையளாயும் தோன்றினபடியே சொல்லுபவளாயுமிருக்கின்ற ஒருத்தியின் பேச்சைக்கொண்டு | ஒருங்கு ஆக ஏ | ஒருகாலே |
| நீர் | நீங்கள் | விழுங்கி | (பிரளயம் கொள்ளாதபடி) உட்கொண்டு |
| கரு சோறும் | கருஞ்சோற்றையும் | உமிழ்ந்திட்ட | பிறகு வெளிப்படுத்தின |
| மற்றை செம் சோறும் | மற்றுள்ள செஞ்சோற்றையும் | பெரு தேவன் | பரதேவதையான ஸ்ரீமந்நாராயணனுடைய |
| களன் | நாற்சந்தியிலே | பேர் | திருநாமங்களை |
| இழைத்து | இடுவதனால் | சொல்ல கிற்கில் | (இவளது காதிலே படும்படி) சொல்லவல்லீர்களானால் |
| | | இவளை பெறுதிர் | இவளை இழவாமே பெறுவீர்கள். |

* * *—எம்பெருமானுடைய திருநாமங்களை இப்பெண்பிள்ளை செவிப்படச் சொல்லுவதே இந்நோய்க்குப் பரிஹாரமென்கிறாள். யுக்தாயுக்த நிரூபணம் பண்ணாமல் கண்டபடியே சொல்லுகிறவளுக்கு அலவையென்று பெயர்; இங்கே கட்டுவிச்சியைக் குறிக்கின்ற சொல் இது. பரிஹாரமுறைமை சொல்லவந்து தோன்றினபடியே பிதற்றுநின்ற இக்கட்டுவிச்சியின் சொல்லைநம்பி நீங்கள் க்ஷுத்ரதெய்வங்கள் வந்து ஸந்நிதிபண்ணுமிடமான நாற்சந்தி முதலானவற்றிலே செஞ்சோறு கருஞ்சோறுகளை யிடுவதனால் என்ன பயனுண்டு?

பின்னை என்செய்யவேணுமென்னில்; ஆச்ரிதர் அநாச்ரிதர் என்கிற வாசிபாராமல் ஸகலலோகங்களையும் பிரளயம் விழுங்காதபடி தான் விழுங்கி ரக்ஷித்து, ப்ரளயம் கழிந்தவாறே வெளிப்படுத்தின பரதேவதையின் திருநாமம் சொல்லவல்லீர்களாகில் இவள் உய்யப்பெறலாம்; வேறுவகையான காரியங்கள் செய்வது இவளை இழப்பதற்கே உறுப்பாமென்றவாறு. (4.)

இவளைப்பெறும்பரிசு இவ்வணங்காடுதலன்றந்தோ! *
குவளைத்தடங்கண்ணும் கோவைச்செவ்வாயும் பயந்தனள் *
கவளக்கடாக்களிறட்டபிரான் திருநாமத்தால் *
தவளப்பொடிக்கொண்டு நீரிட்டிடுமின்தணியுமே. (௫.)

| | |
|---|---|
| அன்னைமீர் | தாய்மார்களே!, |
| இவளை | இப்பெண்பிள்ளையை |
| பெறும்பரிசு | (நோய்தீர்ந்து) நாம் பெறுதற்குரிய மார்க்கம் |
| இ அணங்கு ஆடுதல் அன்று | வெறியாடுதலாகிற இக்காரியமன்று; |
| அந்தோ | ஐயோ!; (இப்பெண்பிள்ளை) |
| குவளை தட கண்ணும் | குவளை மலர்போன்றதாய் விசாலமான கண்களும் |
| கோவை செம் வாயும் | கோவைக்கனிபோன்று சிவந்த அதரமும் |
| பயந்தனள் | வைவர்ணியமடையப்பெற்றாள்; (இதற்குத்தகுந்த பரிஹாரமென்னவென்றால்) |
| கவளம் | மதகரமான மருந்துகளைக் கவளங்கொண்டதாய் |
| கடா | மதம்பெற்றதான |
| களிறு | (குவலயாபீடமென்னும்) யானையை |
| அட்ட | தொலைத்தருளின |
| பிரான் | ஸ்வாமியினுடைய |
| திருநாமத்தால் | திருநாமோச்சாரண பூர்வகமாக |
| தவளம் பொடி கொண்டு | பரிசுத்தமான (ஸ்ரீவைஷ்ணவ பாத) தூளியைக் கொண்டுவந்து |
| நீர் இட்டிடுமின் | நீங்கள் (இவள்மேல்) தூவுங்கோள் |
| தணியும் | (இவளது நோய்) தீரும். |

* * *—மகளுடைய நோய் தீரவேணுமென்று நீங்கள் பண்ணுகிற பரிஹாரம் நோயை இன்னமும் அதிகப்படுத்தா நின்றதேயன்றித் தீரச்செய்கின்றதில்லையே; ஆனபின்பு இந்த முறைமைகளைவிட்டு நோயின் ஸ்வரூபத்திற்கு யோக்யமான பரிஹாரமுறையை அனுஷ்டிக்கப் பாருங்கோளென்கிறாள்.

இந்த நல்லசரக்கை இழவாமல் பெறவேண்டியிருந்தீர்களாகில் இப்படி விபரீதமான செயல்களைச் செய்வீர்களோ? பெறுதற்கு ஹேதுவென்று நினைத்து நீங்கள் செய்கிற காரியம் இழத்தற்கன்றோ ஹேதுவாகின்றது. வேலனைக்கொண்டு வெறியாடுவிக்கின்றவிது இவளைப் பெறுதற்கு ஹேதுவாகுமோ? இவளது உயிர்மாய்வதற்கன்றோ இது ஹேது!. அநியாயமாய் இப்பெண்பிள்ளையை இழந்துவிடப் பார்க்கின்றீர்களே! அந்தோ! இப்படியும் ஒரு காரியம் செய்யலாமோ! என்கிற நிர்வேதம் முதலடியாக வடிவெடுத்திருக்கின்றது.

உலகத்தில் ஒரு வியாதிக்கு ஒரு சிகித்ஸை செய்தால் அது உத்தமமாக இருக்குமானால் க்ரமேண குணமன்றோ காணப்படவேணும். குணம் காணப்படாததோடு துர்க்குணமும் காணப்பட்டால் உடனே அந்த சிகித்ஸாக்ரமத்தை விட்டுத் தொலைக்கவன்றோ அடுப்பது; இங்கு இவளுடைய நிலைமை கண்டீர்களா! குவளைமலர் போன்று அழகியவாய கண்கள் விகாரப்பட்டனவே!; கொவ்வைக்கனிபோன்று பழுத்திருந்த அதரமும் நிறவேறுபாடுற்றதே! இங்ஙனே பயத்தலைக்கண்டுவைத்தும் இப்பரிஹாரமுறையைத் தவிர்க்கின்றிலீர்களே பாவிகாள்! என்கிறாள் இரண்டாமடியால்.

இவ்விடத்தில் ஈட்டு ஸ்ரீஸூக்திகள் காண்மின்;—"அவனுடைய வாய்புகு சோறன்றோ பறியுண்கிறது; 'தொண்டையஞ் செங்கனிவாய் நுகர்ந்தானை' என்றும் 'மணநோக்கமுண்டான்' என்றும் இவையிறே அவனுக்கு ஊண்". இத்யாதி.

மாறன்பணித்த தமிழ்மறைக்கு ஆறங்கங்கூற அவதரித்த திருமங்கையாழ்வார் இரண்டிடத்திலே இரண்டு பாசுரங்களருளிச்செய்தார்; "வண்டார் பூமாமலர்மங்கை மணநோக்க முண்டானே!" என்றார் ஓரிடத்தில். பிராட்டியினுடைய கடாக்ஷ வீக்ஷணத்தையே எம்பெருமான் உணவாகக் கொண்டிருக்கிறானென்பது இதனால் தெரிவிக்கப்பட்டது. *கள்வன் கொல்லில் "என்மகள் தன் தொண்டையஞ் செங்கனிவாய் நுகர்ந்தானை" என்றார். இதனால் அதர ரஸத்தையே எம்பெருமான் உணவாகக் கொண்டவன் என்பது தெரிவிக்கப்பட்டது.

தி. 6—21.

"பின்னைகொல் நிலமாமகள்கொல் திருமகள்கொல் பிறந்திட்டாள்" என்கிறபடியே இப்பராங்குச நாயகியும் பிராட்டியேயன்றோ. இவளுடைய குவளைத்தடங்கண்ணும் கோவைச்செவ்வாயும் அழிந்தால் எம்பெருமானுடைய உணவு முட்டுப்பட்டதே! என்று அன்பர்கள் துடிக்கவேண்டு மத்தனையே.

பயந்தனள்—வைவர்ணியமடையும்படியானாள் என்றவாறு. பயப்பு—நிறவேறுபாடு.

நாங்கள் செய்வது நேரான பரிஹாரமன்றாகில், நீ சொல்லிக்காண் என்று தாய்மார் தோழியைக்கேட்க, பின்னடிகளில் நேரான பரிஹாரமுறை பகரப்படுகின்றது.

தன்னைக் கொல்லுமாறு கம்ஸனால் ஏவி நிறுத்தப்பட்ட குவலயாபீட யானையை முடித்த கண்ணபிரானுடைய திருநாமங்களைச் சொல்லுங்கோள்; அவ்வளவே போராது; ஸ்ரீவைஷ்ணவர்களின் ஸ்ரீபாதரேணுவையுங் கொண்டு ரக்ஷியுங்கோள்; உடனே நோய் தீருமாறு காணுங்கோள் என்றாளாயிற்று.

கடாக்களிறு—மதயானை; கவளமென்று யானையின் உணவுக்குப்பெயர். கவளமென்ற வடசொல்விகாரம். தீனிகளையிட்டு மதமூட்டப்பட்ட யானை என்றபடி. கண்ணன் திருநாமத்தைச் சொன்னால் குவளைத்தடங்கண்களின் பயப்புத்தீரும்; தவளப்பொடிக்கொண்டு இட்டால் கோவைச்செவ்வாயின் பயப்புத்தீரும் என்றதாகக் கொள்க.

தவள என்ற வடசொல் தவளமெனத்திரிந்தது. பரிசுத்தமான என்றபடி. இங்கு இன்னபொடியென்று சொல்லிற்றில்லையாகிலும் ஸ்ரீவைஷ்ணவர்களின் திருவடித்தூள் என்னும் பொருளே ஆழ்வார்க்கு விவக்ஷிதமென்னுமிடம் மேற்பாட்டில் "மாயன்தமரடிநீறு கொண்டு" என்றதனாலும் அறுதியிடத்தக்கது. திருமங்கையாழ்வாரும் சிறிய திருமடலில் "சீரார் செழும்புழுதிக்காப்பிட்டு" என்றருளிச்செய்தார். புழுதியென்பது தெருப்புழுதி; செழும்புழுதியென்பது எம்பெருமானுடைய திருவடிப்பொடி; சீரார்செழும்புழுதியென்பது பாகவதர்களின் திருவடிப்பொடி.

இனி, "தெய்வத்தண்ணந்துழாய்த்தாராயினும் தழையாயினும் தண் கொம்பதாயினும் கீழ்வேராயினும் நின்றமண்ணாயினுங்கொண்டு வீசுமினே" என்கிற திருவிருத்தப் பாசுரத்தின்படி திருத்துழாய் மண்பொடியைக் கூறினதாகவுங் கொள்வர் சிலர். .... (ரு)

தணியும்பொழுதில்லை நீரணங்காடுதிரன்னைமீர்! *
பிணியுமொழிகின்றதில்லை பெருகுமிதுவல்லால் *
மணியினணிநிறமாயன் தமரடிநீறுகொண்டு *
அணியமுயலில் மற்றில்லைகண்டீரிவ்வணங்குக்கே. (சு)

அன்னைமீர் } தாய்மார்களே !
தணியும்பொழுது இன்றி } சிறிதும் ஓய்வு இல்லாமல்
நீர் அணங்கு ஆடுதிர் } நீங்கள் வெறியாடுதலைச் செய்வியாநின்றீர்கள்;
(இவ்வெறியாடலினால்)
பிணியும் ஒழிகின்றது இல்லை } நோயோ தீர்கின்றதில்லை;
இது அல்லால் } நோய்தீராத மாத்திரமேயன்றிக்கே
பெருகும் } மேன்மேலும் வ்ருத்தியுமடைந்து வாநின்றது;

இ அணங்குக்கு } இப்பெண்பிள்ளைக்கு
மணியில் அணி நிறம் } நீலமணியிற்காட்டிலும் அழகிய நிறம்படைத்த
மாயன் } எம்பெருமானுடைய
தமர் } பக்தர்களான ஸ்ரீவைஷ்ணவர்களினுடைய
அடி நீறு கொண்டு } பாததூளியைக்கொண்டுவந்து
அணிய முயலில் } இடுவதற்கு முயற்சி செய்தால்
மற்று இல்லை கண்டீர் } (இதோடொத்த பரிஹாரம்) வேறொன்றுமில்லைகிடீர்.

* * *—கீழ்ப்பாட்டில் "தவளப்பொடிக்கொண்டு நீரிட்டிடுமின்தணியுமே." என்று கூறின தோழியை நோக்கித் தாய்மார் "நீ சொல்லுகிறபொடி இன்னதென்று தெரியவில்லையே!; விளங்கச்சொன்னால் நலம்" என்ன; அதனை விளங்கவுரைக்கின்றாளிப்பாட்டில்.

அந்தோ! சிறுபிள்ளைகள்போலே நீங்கள் செய்கின்றீர்களே!; (அதாவது) ஏதாவதொரு காரியத்தைச் சிறுபிள்ளைகள் செய்யாநின்றால் அதில் தகுதியின்மை கண்டு பெரியார் மறுத்தால், அப்பிள்ளைகள் அக்காரியத்தையே மேன்மேலும் பிடிவாதமாய் வலிந்து செய்துபோருவது வழக்கம். அப்படியே நீங்களும் நான் மறுப்பதே ஹேதுவாகப் பிடிவாதங்கொண்டு வெறியாட்டந்தன்னையே விடாது செய்விக்கின்றீர்களே!; இதனால் பிணி ஒழியாது மேலும் பெருகிச்செல்லவுங்காணநின்றோமே! என்கிறாள் மூன்றடிகளில்.

நீலமணிவண்ணனான எம்பெருமானுடைய வழுவழுகில்லாத தொண்டக் குலமாகவுள்ள பாகவதர்களின் ஸ்ரீபாததூளியைக்கொண்டுவந்து....என்று இவள் சொல்லத் தொடங்கும்போதே தாய்மார்கள் 'இவ்வரும் பெரும்பொருள் நமக்குக்கிடைக்க வழி ஏது? மிகவும் துர்லபமான வஸ்துவைச் சொல்லுகின்றாயே!, இது ஸம்பாதிப்பது கஷ்டமாயிற்றே!' என்று சொல்ல; அன்னைமீர்! மாயன்தமரடி நீறுதன்னைக் கொண்டுவரவேண்டா; 'அதைக்கொண்டு வரவேணும்; இவளுக்கு அதையிடவேணும்' என்று மநோரதித்தாலும் போதும்; அவ்வளவிலேயே நோய் தீர்ந்ததாகும், பாருங்கோள் என்கிறாள்.

மநோரதமாத்திரமே பலன் அளிக்கவல்லதோ? என்கிற சங்கைக்குப் பரிஹாரமாக இப்பாட்டில் "ஆநுகூல்யஸ்ய ஸங்கல்ப: ப்ராதிகூல்யஸ்ய வர்ஜநம்—ஆநுகூல்யஸ்ய ஸங்கல்ப: ப்ராதிகூல்யஸ்ய வர்ஜநம்" என்கிற சுலோகத்தை யெடுத்துக்காட்டித் தெளிவு பிறப்பிக்கப்பட்டது. இது, ப்ரபத்தியின் அங்கங்களைக் காட்டுகிறவொரு பாஞ்சராத்ரப்ரமாணம். இதில் ஆநுகூல்யத்தைப் பற்றின எண்ணம் போதுமென்றும், ப்ராதிகூல்யத்திலோ வென்னில், அதை விடுவோமென்கிற எண்ணம் போராது, விட்டேதீரவேணும் என்றும் சொல்லிற்று. இதுபோலவே இங்கு மாயன்தமரடி நீறுகொண்டு இடவேணுமென்கிற முயற்சியளவே போதுமென்றும், பரிஹாரமாகச் செய்துபோருகிற நிஷித்தக்ருத்யங்களை விடுவோமென்று எண்ணினால் மாத்திரம் போராது, கடுக விட்டே தீரவேணுமென்றும் தெரிவித்தவாறு.

இங்கே ஸ்ரீவைஷ்ணவ பாததூளியின் ப்ரபாவபரமாக ஒரு ஐதிஹ்யமருளிச்செய்வர்; உகலங்க நாட்டாழ்வான் இரண்டு ஸ்ரீ வைஷ்ணவர்களோடே ஓரிடத்திற்குச் செல்லுகையில் வழியிடையே ஒரு ஜைனக்கோவில் தென்பட்டது; அப்போது இராக்காலமாயிருந்தது. அக்கோவில்வாசலில் சிங்கப்பதுமை யிருப்பதைக்காட்டி அவ்வாழ்வான் 'பகவத்ஸந்நிதி ஸேவியுங்கள்' என்று வேடிக்கையாகச்சொல்ல, அவர்களும் மெய்யென்றேயெண்ணி ஸேவித்த பிறகு இது ஜைநக்கோவில் என்றறிந்தவாறே மோஹித்து விழுந்தார்களாம்: அப்போது அருகேயிருந்த பின்னைபுறங்காவில்லிதாஸர் தம்முடைய ஸ்ரீபாததூளியை அவர்களுக்கு இட, மோஹம் தெளிந்து எழுந்தார்களாம். .... .... (௬)

அணங்குக்கருமருந்தென்று அங்கோராடுங்கள்ளும்பராய் *
சுணங்கையெறிந்து நும்தோள்குலைக்கப்படுமன்னைமீர் *
உணங்கல்கெடக் கழுதையுதடாட்டங்கண்டென்பயன்? *
வணங்கீர்கள்மாயப்பிரான்தமர் வேதம்வல்லாரையே. (௭)

| | |
|---|---|
| அணங்குக்கு | இப்பெண்பிள்ளைக்கு |
| அரு மருந்து என்று | அருமையான மருந்தென்று சொல்லி |
| அங்கு ஓர் ஆடும் கள்ளும் பராய் | தேவதாந்தரத்திற்கு ஆடறுக்கவும் கள் நிவேதனம்செய்யவும் பாரித்து |
| சுணங்கை எறிந்து | ஒருவகைக் கூத்தாடுதலையும் செய்வித்துக் கொண்டு |
| நும் தோள் குலைக்க படும் அன்னைமீர் | தோள்கள் துடிக்கக் கஷ்டப் பட்டுக்கொண்டிருக்கின்ற தாய்மார்களே! |

(இந்தக் கூத்தாடுதலைக் கண்டு கொண்டிருப்பதும் ஒரு வேடிக்கையோ?)

| | |
|---|---|
| உணங்கல்கெட | உலர்த்தின நெல் பாழாய்ப் போக |
| கழுதை உதடு ஆட்டம் கண்டு என் பயன் | (அதனை மேய்கிற) கழுதையின் உதடு அசைகின்ற அழகைக் கண்டு கொண்டிருப்பதனால் ஒரு பயனுண்டோ? |
| மாயன் பிரான் | ஆச்சரிய சக்தியையுடையனை எம்பெருமானுடைய |
| தமர் | பக்தர்களான |
| வேதம் வல்லாரை | வைதிகர்களை |
| வணங்கீர்கள் | வணங்குங்கள். |

* * *—இவளது நோய்க்குப் பரிஹாரமாக தேவதாந்தர பஜனம் பண்ணினால் இவளுக்கு இழவேயாம். இவள் பிழைக்கவேணுமென்றிருந்தீர்களாகில் ஸ்ரீவைஷ்ணவர்களைப் பணிவதே பாங்கு என்கிறாள். ஆடு அறுக்கவும் மது நிவேதனம் பண்ணவும் பாரிக்கின்ற பரிஹாரமுறையை வாய்விட்டு நிந்திக்கின்றாள்.

பராய் என்றது பராவியென்றபடி. பராவுதலாவது பாரித்தல். ஒன்பதினாயிரப்படி இருபத்தினாலாயிரப்படி, முப்பத்தாறாயிரப்படி, பன்னீராயிரப்படி ஆகிய நான்கு வியாக்கியானங்களிலும் இவ்விடத்தில் ஏகரூபமாகவே ஒரு அச்சுப்பிழை புகுந்துள்ளது; அதாவது, "பராவி—பாரித்து" என்றிருக்கவேண்டுவது 'ப்ரார்த்தித்து' என்றே விழுந்திட்டது. இங்கு அதுவன்று பொருள்; திருத்திக்கொள்க.

இரண்டாமடியில் "சுணங்கை—எறிந்து" என்றும் "சுணம்—கையெறிந்து" என்றும் கொண்டு பொருள் கூறுவர். சுணங்கையென்பது சுணங்கைக்கூத்தைச் சொன்னபடி: அதாவது கையைத்தட்டி ஆடுவதொருகூத்து; தேவதாந்தரஸமாராதனமாகச்செய்யும் செய்கைகளிலே இந்தக் கூத்தாட்டமும் ஒன்றாகக்கொள்ளத்தக்கது. "துணங்கை யென்று பாடமாய் துணங்கையென்ற கூத்தாகவுமாம்" என்பர் பன்னீராயிரவுரைகாரர். சுணம், கையெறிந்து என்று பிரிக்குமளவில், சூர்ணமென்னும் வடசொல் சுண்ணமென்றாகி, அது சுணம் என்று தொக்கிக்கிடப்பதாகக்கொண்டு மஞ்சட்பொடி என்று பொருள்கொள்க. மஞ்சள்பொடியை ஒருவர்மேலே ஒருவரெறிந்து ஆடுவதென்பர். நும்தோள் குலைக்கப்படும் அன்னைமீர்!= வெறியாடுகிற காலத்தில் தோள்கள் அசைத்தாடப்படுவதுண்டே, அதனைக்கூறியவாறு. அன்னையருடைய தோள்களுக்கு ஒரு வியாபாரமுமில்லையே; அப்படியிருக்க "நும்தோள் குலைக்க' என்று சொல்லிற்று என்னென்னில்; ப்ரயோஜ்யகர்த்தாக்களிடம் காணப்படும் செயலை ப்ரயோஜக கர்த்தாக்களிடம் ஏறிட்டுச் சொல்லுவதுண்டாதலால் அந்த முறையிற் சொன்னபடி.

இவ்விடத்தில் ஈட்டு ஸ்ரீஸூக்திகாண்மின்;—"பகவத் விஷயத்தில் பண்ணின அஞ்ஜலி மாத்ரமும் சரண்யன் நீர்மையாலே மிகை என்றிருக்கக்கடவ நீங்கள் படும் எளிவரவேயிது." என்பதாம். ஆயாஸரூபமான காரியங்களைச் செய்யப்பொறாத பகவத்விஷயத்திலே வாளை பண்ணிப்போருகின்ற நீங்கள் இப்படிப்பட்ட ஆயாஸகருமங்களை ஏறிட்டுக்கொள்வதே! என்று வெறுக்கிறபடி.

தோழி இங்ஙனே சொல்லச் செய்தேயும், வெறியாடுகிறவது ஒருவேடிக்கையான காரியமாக இருப்பதனால் தாய்மார்கள் அதைப்பார்த்து அதிசயப்பட்டுக்கொண்டிருக்க

அந்தோ! இதென்ன வேடிக்கைபார்த்தல்!; நம்முடைய சரக்கு நஷ்டமாகிறபடியை அறிந்து கொள்ளாமல் இங்ஙனே வேடிக்கை பார்த்திருப்பது தகுதியோ என்று கேட்கிற சிறந்த தோழி ஒரு லோகோக்தியை எடுத்துக்காட்டுகின்றாள். [உணங்கல் கெடக் கழுதையுதடாட்டம் கண்டு என்பயன்?] தெருவிலே உலர்த்தப்படுகிற நெல் முதலானவை உணங்கல் எனப்படும்: அதைக் கழுதை மேய்ந்து விடுவது உண்டு; அது மேயும்போது உதடு அசைகிற அதிசயமானது வேடிக்கைபார்க்கிறவர்களுக்கு விரும்பிக் காணத்தக்கதாகவே இருக்கும் ; ஆனாலும் நெல் நஷ்டமாவதைக்கண்டு அக்கழுதையை அடித்துத்துரத்தவேண்டியதாயிருக்க, அது செய்யாதே உதடாடுகிற அதிசயத்தைக் கண்டுகொண்டிருப்போமென்று பார்த்துக்கொண்டிருந்தார்களாகில் அன்னவருடைய விவேகத்தை என் சொல்லுவோம்! அவ்வண்ணமாகவன்றோ உங்களுடைய அவிவேகமிருப்பது என்றவாறு.

இங்கே ஈடு—"ஜீவநஸாதனமான வ்ரீஹியானது நசித்துப்போம்படிக்கீடாக அத்தைத் தின்கிற கழுதையினுடைய உதட்டின் வியாபாரம் கண்டிருந்தால் என்ன ப்ரயோஜநமுண்டு? அப்படியே, இவளைக்கொண்டு ஜீவிக்கவிருக்கிற நீங்கள் இவள் விநாசத்தை ஸஹிப்பிப்பதான தேவதாந்தரஸ்பர்சமுடையார் வ்யாபாரம் கண்டிருக்கிறவித்தால் என்ன ப்ரயோஜநமுண்டு? ப்ரயோஜநமில்லாமையேயன்று, விநாசமேயாயிற்று பலிப்பது." என்பதாம்.

ஆயன் திருக்குருகைப் பெருமாளரையர் என்கிற வொருஸ்வாமி மற்றொருவகையாக இம் மூன்றாமடியை நிர்வஹிப்பராம்; அதாவது. **உணங்கல் கெட** = இப்பெண்பிள்ளையினுடைய இளைப்பு தீருவதற்காக, **கழுதை** = பேயினுடைய, **உதடாட்டம் கண்டு என்பயன்?** = நீங்கள் ஆடுகள்முதல் பாரித்துக்கொடுக்க அத்தை அது விநியோகம் கொள்ளும்போது அதனுடைய உதடு ஆடுமே; அதைக்கண்டு கொண்டிருப்பதனால் என்ன பயனுண்டு? என்பதாம். கழுது என்று பேய்க்குப் பெயர். "காவார் மருதும் காய்சினத்தகழுதும்" என்றும் "வஞ்சப்பகுவாய்க் கழுதுக்கு இரங்காது" என்றும் திருமங்கையாழ்வாரும் பிரயோகித்தருளினர். கழுதை என்றது கழுதினுடைய என்றபடி. வேலன் ஆராதிக்கிற தேவதாந்தரத்தை இங்குக் கழுதாகச் சொன்னபடி.

அடைவுபடச் செய்யவேண்டிய பரிஹாரமுறையை உணர்த்துவது ஈற்றடி: வேதம் வல்லவர்களான ஸ்ரீவைஷ்ணவர்களை வணங்குவதே இதற்குப்பரிஹாரமென்று உணர்த்தியபடி. "வேதைஶ்ச ஸர்வைரஹமேவ வேத்ய:"—ஸகலவேதங்களுக்கும் பொருள் நானே என்று கீதையில் அவன்தானே யருளிச்செய்தபடியும், "ஸர்வா: ஸம்ஹாநந்யதேவதா:" என்று உபநிஷத்துதானே ஓதினபடியும் இதர தெய்வங்களுக்குத் தனித்து ஒரு சக்தியில்லையென்றும், "இறுக்குமிறையிறுத்துண்ண-எவ்வுலகுக்குந்தன் மூர்த்தி, நிறுத்தினான் தெய்வங்களாக அத்தெய்வநாயகன்தானே" என்கிறபடியே ஸ்ரீமந்நாராயணனே இவற்றுக்கு உயிர்நிலையென்றும் உணர்ந்த பரமைகாந்திகளை வணங்குங்கோள் என்றதாயிற்று. ... .... (ரு)

வேதம்வல்லார்களைக்கொண்டு விண்ணோர்பெருமான்திருப்
பாதம்பணிந்து * இவள்நோயிது தீர்த்துக்கொள்ளாதுபோய் *
ஏதம்பறைந்தல்லசெய்து கள்ளுடுகலாய்த்தூய் *
கீதமுழவிட்டு நீரணங்காடுதல் கீழ்மையே. (௬)

(அன்னைமீர்) தாய்மார்களே!
வேதம்வல்லார்களை கொண்டு } வைதிகர்களான ஸ்ரீவைஷ்ணவர்களைப் புருஷகாரமாகக் கொண்டு
விண்ணோர் பெருமான் } நித்ய ஸூரிநாதனான எம்பெருமானுடைய
திருபாதம் திருவடிகளை
பணிந்து ஆச்ரயித்து

| | |
|---|---|
| இவள் நோய் இது | இவளுடைய இந்த நோயை |
| தீர்த்துக்கொள்ளாதுபோய் | போக்கிக்கொள்ளாமல் |
| ஏதம் பறைந்து | இழிவானபேச்சுகளைப்பேசி |
| அல்ல செய்து | ஸ்வரூபத்திற்குத் தகாத காரியங்களைச் செய்து |
| ஊடு | நடுநடுவே |
| கள் கலாய் தூய்—கள்ளைக் கலந்து தூவி | |
| கீதம் முழவு இட்டு | வாத்ய கோஷங்களைப் பண்ணி |
| நீர் அணங்கு ஆடுதல் | நீங்கள் வெறியாடுவிக்கின்றவிது |
| கீழ்மையே | (இக்குடிக்கு) அவத்யமேயாம். |

* * *—வேதவித்துக்களான ஸ்ரீ வைஷ்ணவர்களைப் புருஷகாரமாகக்கொண்டு எ. பெருமான் திருவடிகளைப் பணிந்து இவளுடைய நோயைத்தீர்த்துக்கொள்ளாதே அற்ப தே. வங்களைப்பணிதல் உங்களுக்குக் கீழ்மையென்கிறாள்.

இதில் முதலடியில், சிறந்த சாஸ்த்ரார்த்தமொன்று வெளியிடப்படுகிறது; யானையின் மீது ஏறவிரும்புமவர்கள் யானைப்பாகனுடைய அநுமதி கொண்டு புகவேண்டுமாபோலே ஸ்ரீவைஷ்ணவர்களைப் புரஸ்கரித்துக்கொண்டே எம்பெருமானைப்பணிதல் வேண்டுமென்பது ஸத்ஸம்ப்ரதாயம். *வரவிஷ்ஃ க்ஷத்ரபந்துஃ ஸ்வபாகஃ புண்டரீகஃ ஸ்வ பாபக்ருத் । ஆசார்யவத்தயா முக்தௌ தஸ்மாத் ஆசார்யவாந் பவேத் = பாபிஷ்ட: க்ஷத்ரபந்துச்ச புண்டரீகச்ச புண்யக்ருத் ஆசார்யவத்தயா முக்தௌ தஸ்மாத் ஆசார்யவாந்பவேத்.'' என்கிற பிரமாணமும், இவ்வடியொற்றி நடாதூரம்மாளருளிச்செய்த “ஸத்ஸங்காத் பவநிஸ்ஸ்ப்ருஹோ குருமுகாத் ஸ்ரீசம் ப்ரபத்யாத்மவாந்—ஸத்ஸங்காத் பவநிஸ் ஸ்ப்ருஹோ குருமுகாத் ஸ்ரீசம் ப்ரபத்யாத்மவாந்'' என்பதும் இங்கே அறியத்தக்கன. இதிஹாஸ ச்ரேஷ்டமான ஸ்ரீராமாயணத்தில் இவ்வர்த்தம் அநுஷ்டாந சேஷமாகக் கண்டது: ஸ்ரீ விபீஷணாழ்வான் ஸ்ரீராமஸந்நிதானத்திலே புகும்போது அப்பெருமானுடைய வாத்ஸல்ய ஸௌலப்ய ஸௌசீல்யாதி குணங்களைத்தான் நன்கு அறிந்தவனாகையாலே நேரே அவன் திருவடிகளிலேயே வந்து விழலாமாயிருந்தும் அங்ஙனம் செய்யாதே * ஸர்வலோக சரண்யாய ராகவாய மஹாத்மநே. நிவேதயத மாம் க்ஷிப்ரம் விபீஷணமுபஸ்திதம்'' என்று வானர முதலிகளைப் பணிந்து துவண்டதெல்லாம் இச் சாஸ்த்ரார்த்த முறையைப் பின்பற்றியேயாம். ஸுக்ரீவ மஹாராஜரும் திருவடியை [மாருதியை] முன்னிட்டே பெருமாளைப்பற்றினர்.

கீழ்ப்பாட்டில் “வணங்கீர்கள் மாயப்பிரான் தமர்வேதம் வல்லாரையே'' என்று ஸ்ரீவைஷ்ணவர்களையே உத்தேச்யராகக்கொள்ளும்படி சொல்லிவைத்து, இப்பாட்டில் அந்த ஸ்ரீவைஷ்ணவர்களை த்வாரமாகக்கொண்டு பகவதாச்ரயணம் பண்ணும்படி சொல்லுவானேன் என்னில்; இங்கு நம்பிள்ளை அருளிச்செய்யும்படி: ஸ்ரீவைஷ்ணவர்களே ஆச்ரயணீயர்; அவர்களுக்கு மேற்பட எம்பெருமானளவிலே சென்று ஆச்ரயிக்கவேண்டியதில்லைதான்; ஆனால் ஸஜாதீயர்களிடத்திலே ருசிவிச்வாஸங்கள் கனக்க உண்டாவது அரிதாகையாலே அவர்களைப் பரம சேஷிகளாகக்கொள்ள இசைவு உண்டாகா தொழியினும் அவர்களைப் புருஷகாரமாகவாகிலும் கொள்ளப்பாருங்கோளென்று சொல்லுகிறதென்று.

இவள்நோய் இது = இவள் என்றது பகவத் விஷயமான நோய் தவிர மற்றொரு நோய் வந்துபுகுப் ப்ரஸக்தியற்றவள் என்று காட்டினபடி. நோய் இது என்றது—* வானோர் தம் மகனும் சீராயின தெய்வநன்னோய் இது என்றபடி.

ஏதம் பறைந்து = வெறியாடுகிற வேலன் வாயாற்சொல்லுகிற வார்த்தைகளெல்லாம் அநுவதிக்கவும் தகாதாகையாலே ஏதமென்று பொதுவிலே சொன்னபடி. அவன் செ

கீழ் காரியங்களும் அப்படியே மிகவும் ஆபாஸங்களாகையாலே அல்லசெய்து எனப்பட்டது; ஸ்வரூபாநுரூபமல்லாதவற்றைச் செய்து என்றபடி. அதை விவரிக்கிறது—கள் ஊடு கலாய்த் தூய் என்றும் கீதமுழவிட்டு அணங்காடுதல் என்றும்.

நிஷித்தத்ரவ்யங்களைக் கலந்து தூவி, பொல்லாத பாட்டோடுங்கூடின வாத்யங்களை ப்ரவர்த்திப்பித்து நீங்கள் தைவாவேசத்தாலே ஆடுகிறவிது இக்குடிக்கே இழுக்கு என்றதாயிற்று. .... .... .... (ூ)

கீழ்மையினலங்கோர் கீழ்மகனிட்டமுழவின்கீழ் *
நாழ்மைபலசொல்லி நீரணங்காடும்போய்காண்கிலேன் *
ஏழ்மைப்பிறப்புக்கும்சேமம் இந்நோய்க்குமீதேமருந்து *
ஊழ்மையில் கண்ணபிரான் கழல்வாழ்த்துமினுன்னித்தே. (௯)

| | |
|---|---|
| (அன்னைமீர்) | தாய்மார்களே ! |
| கீழ்மையினால் | உங்கள் நீசத்தனத்தினால் |
| அங்கு ஓர் கீழ் மகன் இட்ட முழவின் கீழ் | நீசனான சண்டாளனொருவன் நடத்திப்போரும் வாத்ய கோஷத்தின் சார்பாக |
| பல நாழ்மை சொல்லி | தப்பு வார்த்தைகள் பலவற்றையுஞ் சொல்லி |
| நீர் அணங்கு ஆடும் பொய் | நீங்கள் வெறியாடுகின்ற விந்த வம்புவேலையை |
| காண்கிலேன் | நான் கண்கொண்டு காணமாட்டேன்; |
| (கிரமமாகச் செய்யவேண்டிய காரியம் என்னவென்றால்) | |
| ஊழ்மையின் | முறைப்படியே |
| கண்ணபிரான் | க்ருஷ்ணபகவானுடைய |
| கழல் | திருவடிகளை |
| உன்னித்து | சிந்தித்து |
| வாழ்த்துமின் | மங்களாசாஸநம் பண்ணுங்கள்; |
| ஈதே | இந்த மங்களாசாஸநமே |
| ஏழ்மை பிறப்புக்கும் | ஏழேழ் பிறவிக்கும் |
| சேமம் | க்ஷேமகரம்; |
| இ நோய்க்கும் | இந்த நோய் தீருவதற்கும் |
| ஈதே மருந்து | இதுதான் மருந்து. |

* * *—நீங்கள் அணங்காடுவதை நான் கண்கொண்டு காணமாட்டேன்; இவள் பிழைக்கவேணுமென்றிருந்தீர்களாகில் கண்ணபிரானுடைய திருவடிகளை நினைத்துவாழ்த்துங்கோள் என்கிறாள். ஒரு சண்டாளன் ஏதோ வாத்யம் முழங்குவதாம்; அவ்விடத்தைச் சுற்றிப் பலர் இருந்துகொண்டு தேவதாந்தரங்களின் மேலே சில கட்டுக்கதைகளைச் சொல்லிப் பாடுவதாம்; இதனிடையே வேலன் தலை விரித்தாடுவதாம்; ஆகவிப்படி நீங்கள் செய்து போருகிற தப்புக்காரியங்களை என் கண்ணால் பார்க்க ஸஹிக்கின்றிலேன் என்கிறாள் முன்னடிகளில்.

ரஜோகுணத்திற்கும் தமோகுணத்திற்கும் வசப்பட்டிருக்குந்தன்மையை இங்குக் கீழ்மை என்கிறது. நாழ்மைபல சொல்லுவதாவது—அவற்றுக்கு இல்லாத ஏற்றங்கள் பலவும் சொல்லுகை. நாழ்—அவத்யம்.

இப்பரிஹாரமுறைகளைத் தவிர்த்து கண்ணபிரானது கழல்வாழ்த்துவதே எற்றைக்கு மேழேழ்பிறவிக்கும் நன்மைபயக்கு மென்கிறது பின்னடிகளில். ஏழ்பிறப்பென்றது—காலமுள்ளதனையும் என்றபடி. சேமம்—க்ஷேமம். ஊழ்மையின்—முறைப்படியே என்றபடி.

இந்நோய்க்குமீதே மருந்து என்பதற்குமுன்னே ஈட்டில் 'சம்பறுத்து ஆர்க்கைக்குப் போக வேணுமோ?'' என்றொருவாக்கியம் காண்கிறது. இதன் பொருளாவது—நெல்முதலிய அறுத்தால் அதை ஒரு கட்டாகக்கட்டுவதற்குக் கயிறு தேடப்போகவேணும்; சம்பு அறுத்தால் அதைக்கொண்டே அதைக் கட்டலாமாகையாலே வேறொரு கயிறு தேடப்போகவேண்டியதில்லை; அதுபோல இங்குக் கண்ணபிரான் கழல்வாழ்த்துவது தவிரவேறொருமருந்து

தேடப்போகவேண்டாவென்கை. "சம்பறுத்தார் ஆர்க்கைக்குப்போகவேணுமோ?" என்றும் பாடாந்தரம் காண்கிறது. பொருள் ஒன்றே. ஆர்க்கைக்கு—கட்டுவதற்கு. போகவேணுமோ—கயிறு தேடப்போகவேணுமோ?. .... ....

உன்னித்துமற்றொருதெய்வம்தொழாள் அவனையல்லால் *
நும்மிச்சைசொல்லி நும்தோள்குலைக்கப்படுமன்னைமீர்! *
மன்னப்படுமறைவாணனை வண்துவராபதி
மன்னனை * ஏத்துமின் ஏத்துதலும்தொழுதாடுமே.

| | |
|---|---|
| அவனை அல்லால் | எம்பெருமானைத் தவிர்த்து |
| மற்று ஒரு தெய்வம் | வேறொரு தெய்வத்தை |
| உன்னித்து | ஒரு வஸ்துவாக நினைத்து |
| தொழாள் | (இப்பெண்பிள்ளை) தொழுவது கிடையாது; (இப்படியிருக்க) |
| நும் | உங்களுடைய |
| இச்சை | மனம் போனபடியே |
| சொல்லி | (நான் அநுவாதம் செய்யவும் தகாத சொற்களைச்) சொல்லி |
| நும் | உங்களுடைய |
| தோள் குலைக்கப்படும் அன்னைமீர் | தோள் அசையநிற்கிற தாய்மார்களே!, |
| மன்னப்படும் மறைவாணனை | நித்யமாக விளங்குகின்ற வேதங்களினால் ப்ரதிபாதிக்கப்படுகிறவனும் |
| வண் துவராபதி மன்னனை | அழகிய துவாரகாபுரிக்கு அதிபதியுமான எம்பெருமானை |
| ஏத்துமின் | துதியுங்கோள்; |
| ஏத்துதலும் | துதித்தவுடனே |
| தொழுது | (இப்பெண்பிள்ளை உணர்த்தி பெற்று, அவனைத்) தொழுது |
| ஆடும் | களித்துக் கூத்தாடுவாள். |

* * *—இப்பராங்குச நாயகிக்குக் கண்ணபிரான் பக்கலிலுள்ள அளவுகடந்த ப்ராவண்யத்தையறிந்து நீங்கள் அதற்குத் தகுதியாக நடந்துகொள்வதே யுக்தமென்கிறாள் தோழி.

"இன்னார்க்கு இன்ன பரிஹார மென்றில்லையோ? அது அறிந்து பரிஹரிக்க வேண்டாவோ? முழங்கால் தகர, மூக்கிலே ஈரச்சீலை கட்டுமாபோலேயன்றோ நீங்கள் பண்ணுகிற பரிஹாரம்." என்பது நம்பிள்ளையீடு. ஒருவனுக்கு முழங்காலிலே காயம்பட்டால் முழங்காலிலேயன்றோ சிகித்ஸை செய்யவேண்டுவது; அதைவிட்டு, முழங்கால் பாதையின் நிவ்ருத்திக்காக மூக்கிலே சிகித்ஸை செய்வதுண்டோ? இது ரோகத்திற்குத்தகுந்த பரிஹாரமாகுமோ? என்கை.

"[illegible]—அக்ஷிரோகே ஸமுத்பந்நே கர்ணம் சித்வா குதம் தஹேத்." என்றொரு சுலோகமுண்டு: கண்ணில் ரோகமுண்டானால் காதையறுத்து ப்ருஷ்டபாகத்தில் சூடுபோடவேண்டியதென்று இதன்பொருள். மிருக சிகித்ஸை கூறுமிடத்திலே உள்ளதான இந்த ச்லோகத்தை ஒருவன் கண்டு இந்த சிகித்ஸையைக் கண்ரோகியானவொரு மனிதனுக்குச் செய்தானாம். அதுபோலவன்றோ இவர்கள் செய்து போருகிற பரிஹாரமுறையிருப்பது என்று ஏசுகிறபடி.

அவனையல்லால் மற்றொரு தெய்வம் உன்னித்துத் தொழாள்—இப்பெண்பிள்ளை ஒரு காலத்திலும் தேவதாந்தர பஜனம் பண்ணியறியாள். உன்னித்து என்றது தன்னெஞ்சாலே மதித்து என்றபடி; ஒரு பொருளாகக் கொண்டு தொழாள் என்கை. "பிறைதொழும் பருவத்திலும் பிறைதொழுதறியாள்" என்பர் நம்பிள்ளை. அம்புலிப் பருவத்தில் பிறை தொழுவது மனிசர் யாவர்க்கும் இயல்பாக நிகழ்வது; அதுதானும் இவட்கு நிகழ்ந்ததில்லையென்கிறவிது மிக்க பொருத்தமானது. "முலையோ முழுமுற்றும் போந்தில மொய்பூங்குழல் குறிய கலையோவரையில்லை நாவோ குழறும், கடல் மண்ணெல்லாம் விலையோ வெனாமிளிரும்

கள் இவள்பரமே! பெருமான் மலையோ திருவேங்கடமென்று கற்கின்ற வாசகமே" என்ற திருவிருத்தமும் இங்கு நினைக்கத்தக்கது. "அறியாக் காலத்துள்ளே அடிமைக்கண் அன்பு செய்வித்து" என்னும்படியிருக்கிற ஆழ்வார்க்கு தேவதாந்தரஸ்பர்ஸம் ஒரு காலத்திலும் பருவதற்கு ப்ரஸக்தியில்லையே.

**நும் இச்சை சொல்லி**=உங்கள் மனம் போனபடியே சிலவற்றைச் சொல்லி என்றபடி. நீங்கள் சொல்லுகிற சொற்கள் இவளுடைய தன்மைக்குச் சிறிதும் சேராது; தோற்றினபடி ஏதேனும் சொல்லிப் போருகிற உங்கள் தன்மைக்குச் சேருமத்தனை யென்று காட்டினபடி. [**நும் தோள் குலைக்கப்படும் அன்னைமீர்!**] "தோள் அவனையல்லால் தொழா" என்கிற குடியிலேபிறந்து வைத்து உங்களுடைய தோளுக்கு இப்படியும் ஒரு துர்க்கதி உண்டாவதே! என்று பொடிகிறபடி. தோள் குலைத்தலென்று வீணான ஆயாஸத்தைச் சொன்னவாறு; தொழுகையைச் சொல்லிற்றாகவுமாம், குலைதலாவது நிலைகெடுதல். தேவதாந்தர விஷயத்தில் பண்ணுகிற நமஸ்காரமாகையாலே தோள்நிலை கெடுதலாகக் கூறுகிறபடி. ஆவேசத்தாலே தோள் அசைத்தலைச் சொல்லுவதாகக் கொள்ளுதல் ஏற்கும்.

ஒழுங்குபடச் செய்யவேண்டிய பரிஹார முறையை உணர்த்துவன பின்னடிகள். வேதாந்த விழுப்பொருளான வண்துவராபதி மன்னனுடைய திருநாமத்தைச் சொல்லி யேத்துதல் செய்யவே இந்நோய் தீருமென்றுளாயிற்று. ஏத்துதலும்—ஏத்தினவுடனே, தொழுது ஆடும்–இப்பெண்பிள்ளை உஜ்ஜீவனம் பெற்றுவிடுவள் என்றபடி. ஆடும் என்பதை ஏவற்பன்மை வினைமுற்றாகக் கொண்டு, நீங்கள் தொழுதாடுங்கோள் என்றதாகவுமுரைக்கலாம். என்னால் வினையியலில் "பல்லோர் படர்க்கை முன்னிலை தன்மையில், செல்லாதாகும் செய்யுமென் முற்றே" என்ற சிறப்பு விதிக்கு மாறாக ஆடும் என்ற செய்யுமென் முற்றுக்கு முன்னிலைப் பொருள் கொள்ளலாமோ வென்னில், இதனைப் புதியனபுகுதலாகக் கொள்க. "நீர் உண்ணும் என முன்னிலையிற் பன்மை யேவலாய் வருதல் புதியன புகுதல்" என்று நன்னூலுரைகாரர்களும் சொல்லிவைத்தார்கள். "பழையன கழிதலும் புதியன புகுதலும் வழுவல காலவகையினானே" என்ற நன்னூற் சூத்திரமுங் காண்க.

தாரவதீ என்னும் வடசொல் துவராபதி யெனத் திரிந்தது. தக்ஷிணத்வாரகையாகக் கொண்டாடப்படும் ஸ்ரீராஜமன்னார் ஸந்நிதியில் இப்பாசுரம் மிக்க சிறப்புப் பெற்றவாறு. (௰)

தொழுதாடித்தூமணிவண்ணனுக்கு ஆட்செய்துநோய்தீர்ந்த *
வழுவாததொல்புகழ் வண்குருகூர்ச்சடகோபன் * சொல்
வழுவாதவாயிரத்துள் இவைபத்துவெறிகளும் *
தொழுதாடிப்பாடவல்லார் துக்கசீலமிலர்களே. ௧௧

| | | | |
|---|---|---|---|
| தொழுது ஆடி | வணங்குதலும் கூத்தாடுதலுஞ் செய்து | சடகோபன் | ஆழ்வார் |
| தூமணி வண்ணனுக்கு | அழகிய நீலமணிபோன்ற நிறமுடையனான எம்பெருமானுக்கு | சொல் | அருளிச்செய்த |
| ஆள் செய்து | அடிமைத்தொழில் செய்து | வழுவாத | குறையற்றதான |
| நோய் தீர்ந்த | நோய் தீரப்பெற்றவரும், | ஆயிரத்துள் | ஆயிரத்தினுள்ளே |
| வழுவாத | அவத்யமடையாத | வெறிகள் | வெறிவிலக்கு விஷயமான |
| தொல் புகழ் | இயற்கையான புகழையுடையவரும் | இவை பத்தும் | இப்பதிகத்தை |
| வண் குருகூர் | அழகிய திருநகரிக்குத் தலைவருமான | தொழுதும் ஆடி | தொழுவதும் ஆடுவதுமாய்க் கொண்டு |
| | | பாட வல்லார் | பாடவல்லவர்கள் |
| | | துக்க சீலம் இலர்கள் | துக்கப்படுந்தன்மை யில்லாதவராவர். |

* * * இத்திருவாய்மொழியை அன்போடு அதிகரிக்குமவர்கள் எம்பெருமானைப் பிரிந்து படுகையாகிற துக்கமின்றிக்கே வாழப்பெறுவர்கள் என்று பயனுரைத்துத் தலைக்கட்டுகின்றார்.

"ஆட்செய்து நோய்தீர்ந்த" என்று வாசகமிருந்தாலும் 'உருபுபிரித்துக் கூட்டுதல்' என்கிற முறைமையின்கீழ் "நோய்தீர்ந்து ஆட்செய்த" என்று பொருள்கொள்ளத்தகும். "நோய்தீர்ந்து தொழுதாடிப்பாடித் தாமணிவண்ணனுக்கு ஆட்செய்த வண்குருகூர்ச்சடகோபன்" என்பது ஆறாயிரப்படியருளிச் செயல். இனி, ஆட்செய்து என்பதை சொல்திரியினும் பொருள் திரியாவினைக்குறை" என்ற நன்னூற்சூத்திரத்தின்படி எச்சத்திரிபாகக் கொண்டு 'ஆட்செய்ய' என்று பொருள் கொள்ளவுமாம். தோழியின் சொற்படியே தாய்மார்கள் தொழுதாடித்தாமணிவண்ணனுக்கு ஆட்செய்ய, அதனால் ஆழ்வார் நோய்தீர்ந்ததாகக் கூறியவாறு.

ஆழ்வாருக்கு இந்த நோய் தீருவதன்று; ஆத்மா உள்ளவரையில் அநுவர்த்திக்கு மத்தனை. ஆகையாலே நோய்தீர்ந்த என்று சொல்லுவதற்கு ப்ரஸக்தியில்லை; அப்படியிருக்க இங்கு 'நோய்தீர்ந்த' என்றது மோஹம் தெளிந்து சிறிது உணர்த்தியுண்டானமைபற்றியென்க. இங்கே ஈட்டு ஸ்ரீஸூக்தி காண்மின்;—"தொழுதாடித் தாமணிவண்ணனுக்காட்செய்து நோய்தீர்ந்த" என்றதுக்கு அம்மங்கியம்மாள் பணிக்கும்படி—மோஹித்தவள் அல்பம் ஆச்வஸித்தவாறே மோர்க்குழம்பு குடித்தாள் தரித்தாள் கண்விழித்தாள் வார்த்தை சொன்னாள் என்பர்களிறே; அதுபோலே காணும் என்று."

எம்பெருமானோடு கலவிபெற்று நோய்தீர்ந்ததாகச் சொல்லுகிறதன்று; மேல் திருவாய்மொழியில் * சாலவருந்தி, யிரவும்பகலும் மாறாமல் கூப்பிட்டிருந்தனுதலால் அங்ஙனம் சொல்லுவதற்கில்லை; பிறந்த உணர்த்தியைக்கொண்டு நோய்தீர்ந்ததாகச் சொன்னவத்தனை.

வழுவாத தொல்புகழ் வண்குருகூர்ச் சடகோபன் = இப்போது ஆழ்வார்க்கு வழுவாத புகழாவது தேவதாந்தர ஸம்பந்தத்தை ஈஷத்தும் ஸஹியாமையேயாம். "ஒருவன் வைஷ்ணவனாகையாவது இது" என்பர் நம்பிள்ளை.

மூன்றாமடியில் "இவைபத்து வெறிகளும்" என்பதை 'வெறிகள் இவைபத்தும்' என்று அந்வயித்துக்கொள்க: வெறிவிலக்கான இத்திருவாய்மொழியை என்றபடி. வெறிவிலக்காவது—நாயகவிரஹத்தாலே நாயகி மிகவும் வருந்திக்கிடக்க, அவளுடைய வடிவு வேறுபாட்டை நோக்கி 'இவள் இங்ஙனம் மெலிதற்குக் காரணம் என்னே? என்று கவலைப்பட்டுக் கட்டுவிச்சியைக் குறிகேட்க, அவளும் தன் மரபின்படி அராய்ந்து 'இவளுக்கு முருகக்கடவுள் ஆவேசித்ததொழிய வேறொன்றுமில்லை' என்றுகூற, அதுகேட்ட தாயார் உடனே வெறியாட்டாளனை யழைப்பித்து அவனைக்கொண்டு ஆவேசமாடுவிக்கவும், ஆடறுப்பது கள்ளுகுப்பது பலியிடுவதாய்ப் பரிஹாரங்கள் செய்விக்கவும் முயல, அச்சமயத்தில் அவளது துன்பத்தின் மெய்க்காரணத்தையறிந்த தோழி அம்முயற்சிகளை விலக்குவதாம்.

ஆக இப்படிப்பட்ட வெறிவிலக்குத் துறையிலே அமைந்த இத்திருவாய்மொழியை ஸஹ்ருதயமாக அநுஸந்திக்க வல்லவர்கள் எம்பெருமானைப் பிரிந்து படுகிற துயரமும் அதற்குப் பரிஹாரமாக தேவதாந்தர ஸமாராதனம் பண்ணத்தேடுகையாகிற துயரமும் ஸம்பந்திக்கப் பெறாதே வாழ்வர்கள் என்று பயனுரைத்துத் தலைக்கட்டினாராயிற்று. .... (கக)

ஆறாக் திருவாய்மொழி உரை முற்றிற்று.

ஆழ்வார் திருவடிகளே சரணம்

## நான்காம்பத்து ஏழாந்திருவாய்மொழி—சீலமில்லாச் சிறியன்.

**உரையவதாரிகை:**—உலாந்து தரைப்பட்டுக்கிடந்த கொடியானது மழைத்துளிபட்ட வாறே செழிப்புறுமாபோலே, கீழே மோஹித்துத் தரைப்பட்டிருந்த ஆழ்வார், தோழிமார் வாக்கில் நின்றும் வெளிவந்த சில திருநாமங்களைக் கேட்கப்பெற்ற ப்ரஸக்தியாலே உணர்த்தி பெற்றார். அத்தனையே யல்லது விரும்பினபடி எம்பெருமானோடே ஸம்ச்லேஷிக்கப்பெற்றிலர். மோஹித்திருந்த நிலைமைதானே நன்றாயிருந்தது. ஏனென்னில், அப்போது உணர்த்தியில்லாமையாலே துயரம் தெரியாது. உறக்கத்தில் பசிபொறுக்கலாம்; விழித்துக்கொண்டால் உண்டாலல்லது தரிக்கப்போகாதே. அப்படியே ஆழ்வாரும் மோஹித்திருந்த நிலைமையிலே ஒருவாறு ஆறியிருந்து உணர்த்தியுண்டான விப்போது துடிக்கவேண்டியவராயினர். துடித்துக்கூப்பிடுகிறார் இத்திருவாய்மொழியில்.

உலகத்திலே நோயாளிகள் மயக்க முற்றிருக்கும்போதுகளிலே பாதை தெரியாதேயிருந்து, மயக்கம் தெளிந்தவாறே பாடாற்றவொண்ணாமல் துடிப்பர்களே. அந்த நிலைமையே பாயிற்று ஆழ்வார்க்கு இப்போது.

அவனோ ஆபத்துக்கு உதவுமியல்வினன்; ஆபத்துக்கு நிதானமறிந்து பரிஹரிக்கவும் வல்லன்; பிரிந்தால் பொறுத்திருக்க வொண்ணாதபடியான அழகு படைத்தவன்; ஆபத்துக்களிலே விரோதியைப்போக்கி உதவுகைக்குப் போதுமான சக்திபடைத்தவன்; இப்படியிருந்தும் நம் ஆற்றாமைக்கு உதவவில்லையே, என்று கனத்த ஆர்த்தியோடே, கேட்டாரெல்லாரும் நீராய்க்கரையும்படி கூப்பிடுகிறார்.

சீலமில்லாச்சிறியனேலும் செய்வினையோபெரிதால் *
ஞாலமுண்டாய்! ஞானமூர்த்தி! நாராயணா! என்றென்று *
காலந்தோறும்யானிருந்து கைதலைபூசலிட்டால் *
கோலமேனிகாணவாராய் கூவியும்கொள்ளாயே. (க)

| | | | |
|---|---|---|---|
| சீலம் இல்லா | நன்மை யொன்று மில்லாத | காலம் தோறும் | எல்லாக்காலத்திலும் |
| சிறியன் ஏலும் | சிறியவனா யிருந்தேனாகிலும் | யான் இருந்து | நான் ஆசையோடிருந்து கொண்டு |
| செய் வினையோ | செய்த பாபமோ | கை தலை பூசல் இட்டால் | கையைத் தலையிலே வைத்துக் கூப்பிட்டால், |
| பெரிது | பெரிதாயிருக்கின்றது; | கோலம் மேனி | அழகிய திருமேனியை |
| ஆல் | அந்தோ!; | காண | நான் ஸேவிக்குமாறு |
| ஞாலம் உண்டாய் | (பிரளயத்தில்) உலகங்களை உண்டவனே! | வாராய் | வருகிறாயில்லை; |
| நாராயணா | நாராயணனே! | கூவியும் கொள்ளாய் | கூவிக்கொள்வதும் செய்கின்றிலை |
| என்று என்று | என்றிப்படிப் பலகாலும் சொல்லி | | |

***—ஆழ்வார் சில ஞானிகளைச் சிறுமாமனிசர் என்று அருளிச்செய்வதுண்டு; வடிவு சிறுத்து ஞானம் பெருத்தவர்கள் என்கிற காரணத்தாலே அவர்களைச் சிறுமாமனிசரென்கிறது. இப்பாட்டின் முதலடியில் ஒரு விதத்திலே தம்மையும் சிறுமாமனிசராகச் சொல்லிக்கொள்கிறார் போலும். நற்குண மொன்றுமில்லாததனால் சிறியவன்; பண்ணின பாபங்களில் பெரியவன் என்கிறார். சீலமாவது நன்னடத்தை. அஃதில்லாமைபற்றித் தம்மை நீசராக அநுஸந்தித்துக்கொள்ளுகிறார். செய்வினையோ பெரிதால் என்றவிடத்திற்கு நம்பிள்ளையீடு;—"பண்ணின பாபத்தைப் பார்த்தவாறே சிதசிதீச்வரதத்வத்ரயத்தையும் விளாக்குலைகொள்ளும்படி பெருத்திருந்தது. ஸம்ஸாரிகளுடைய குற்றங்களைப்பொறுக்கு மீச்வரனுடைய குணங்களிலும், அவன்தந்த பக்திரூபாபந்நஜ்ஞானத்திலுங்காட்டில் பெரிதாயாயிற்றிருக்கிறது."

நல்ல காரியங்களைச் செய்யாமற்போனாலும் செய்யவேணுமென்று நெஞ்சினால் நினைத்தாலும் பலனுண்டு; தீய காரியங்கள் விஷயத்தில் அப்படியல்ல; தீயன செய்யவேணுமென்று நெஞ்சினால் நினைத்திருந்து அப்படியே செய்யாதொழிந்தால் குற்றமில்லை என்று நூற்கொள்கையுண்டு. நான் அப்படியல்லாமல் தீயன செய்து நிலைக்கட்டினேனென்கிறார் செய்வினையோ என்பதனால்.

தாம் செய்த பாவங்கள் மிகப்பல என்பதை மேலே ஸூசிக்கிறார். எம்பெருமானை நான் விரும்பினபடியே அநுபவிக்கப்பெறாமல் இழந்திருக்கின்றேனாதலால் செய்வினை பெரிதென்னுமிடத்தில் ஸந்தேஹமுண்டோவென்கிறார். அசோகவனத்தில் பிராட்டியும் "[illegible] தவள=மமைவ துஷ்க்ருதம் கிஞ்சித் மஹதஸ்தி ந ஸம்சய:, ஸமர்த்தாவபி தௌ யந்மாம் நாவேக்ஷேதே பரந்தபௌ" என்றாள். விரோதிகளைத்தொலைத்து என்னை ரக்ஷிக்கைக்குறுப்பான ஆற்றல்படைத்த அவ்விரண்டு ஆண்புலிகளும் என்னைக் கடாக்ஷியாதேயிருந்தார்களாகில் இது என்னுடைய பாபத்தின் பலனேயன்றோ என்றாள்பிராட்டி. இங்கு * துஷ்க்ருதம் கிஞ்சித்மஹத் * என்கிறாள். கிஞ்சித் என்றால் சிறிது என்றபடி; மஹத் என்றால் பெரிது என்றபடி. சிறிதாயும் பெரிதாயுமிருக்கிற பாபம் எனக்கு உண்டென்று சொல்லுகிற பிராட்டியின் திருவுள்ளம் யாதெனில்; பகவத் விஷயத்திலேபட்ட அபசாரத்தைச் சிறிய பாபமென்றும், பாகவத விஷயத்திலே பட்ட அபசாரத்தைப் பெரிய பாபமென்றும், கருதினபடி. காட்டுக்குப் புறப்படும் ஸமயத்திலே தன்னை உடன்கொண்டு செல்லமாட்டேனென்ற பெருமானை நோக்கி "ஸ்த்ரியம் புருஷவிக்ரஹம்" என்று பழித்துக்கூறினது பகவத் விஷயாபசாரம். மாரீசமாயமான் பின்னே பெருமாள் எழுந்தருளியிருந்தபோது கபடமான கூக்குரலைக் கேட்ட பிராட்டி இளைய பெருமாளை நோக்கிப் பல வார்த்தைகள் சொல்லிவருகையில் "[illegible]—அநார்யகருணாரம்ப ந்ருசம்ஸ! குலபாம்ஸந!* என்று தொடங்கி* *[illegible] தஷ்விஜ்ருத்தி [illegible]=மமஹேதோ: ப்ரதிச்சந்ந: ப்ரயுக்தோ பரதேந வா, தத்ஸித்யதி ஸௌமித்ரே தவ வா பரதஸ்ய வா." என்று மிகவும் கடுமையாகப் பழித்துக் கூறினது பாகவதாபசாரம். இவற்றுள் பகவதபசாரம் அவ்வளவு கொடிதன்றாகையாலே கிஞ்சித் எனப்பட்டது; பாகவதாபசாரம் மிகக்கொடிதாகையாலே மஹத் எனப்பட்டது.

ஆழ்வார் தாம் கதறிக்கூவியழைக்கிறபடியை அருளிச்செய்கிறார் ஞாலமுண்டாய்! என்று தொடங்கி. விசாலமான பூமிப்பரப்பையெல்லாம் பிரளய வெள்ளம் கொள்ளை கொள்ளப்புகுந்த காலத்திலே "மண்ணொடும் விண்ணொடும் வானவரும் தானவரும் மற்றுமெல்லாம், உண்ணாத பெருவெள்ளம் உண்ணாமல் தான் விழுங்கியுய்யக்கொண்ட" என்கிறபடியே திருவயிற்றிலே வைத்து ரக்ஷித்தவனே! என்று கூப்பிடா நின்றேன். ஆபத்துக்கு வந்து உதவுமவனல்லையோ நீ; பிரளயாபத்து வந்தால்தான் ரக்ஷிப்பதென்று ஒரு விரத முண்டோ?

ஞானமூர்த்தீ=சேதநகோடியிலே சேர்ந்த எனக்கும் ஞானமுண்டு; ஆகிலும் என்னுடைய ஞானம் என்னை நித்ய ஸம்ஸாரியாக்கிக் கொள்வதற்கன்றோ உதவுகின்றது. இந்த ஸம்ஸாரத்தைக் கழித்து என்னைத் திருவடிக்கு ஆளாக்கிக் கொள்ளுகைக்கீடான ஞானமன்றோ உன்னுடையது. "ஆமாறொன்றறியேன் நான்" என்றிருக்குமடியேனுக்கு "ஆமாறறியும் பிரானே!" என்னப்படுகிற நீ உதவித்தீரவேண்டுமே. நான் அறிவது ஒன்றுமில்லை; நீ அறியாதது ஒன்றுமில்லை; நான் செய்யவல்லது ஒன்றுமில்லை; நீ செய்யமாட்டாதது ஒன்றுமில்லை. ஒருவனுக்குக் கண்ணும் தெரியாதே காலும் நடைதாராதேயிருந்தது;

...ற்றொருவனுக்குக் கண்ணும் தெரிந்து காலும் நடைதருவதாயிருந்தது; இப்படியிருக்கு ...றனல் ஆர்க்கு ஆர் வழிகாட்டிக்கொண்டுபோவார் என்பதை நான் சொல்லவேணுமோ?

ஞானமும் சக்தியுமுள்ளவர்களெல்லோரும் அஜ்ஞரும் அசக்தருமாயிருப்பாரை ரக்ஷித்...தேயாகவேணுமென்று ஒரு நிர்ப்பந்தமுண்டோவென்று எம்பெருமானுக்குத் திருவுள்ளமாக, ...ாராயணா என்கிறார். ரக்ஷிக்கவேண்டிய ப்ராப்தியில்லையாகில் நிர்ப்பந்தமில்லைதான்; ப்ராப்தி ...ள்ள விடத்திலே உபேக்ஷித்திருந்தால் பழிப்பாகுமன்றோ. "உன்றன்னோடுறவேல் நமக்கு இங்கொழிக்கவொழியாது" என்னும்படியான குடல்துடக்கு இருக்கும்போது கைவாங்கி ...ருக்கவல்லையோ? சரீரத்திற்கு ஆகவேண்டிய நன்மையை சரீரியன்றோ நோக்கக்கடமைப் பட்டவன். உடையவன் உடமையைப் பெறுகைக்கு 'வியாபரிக்க வேண்டாவோ? என்ப ...ான கருத்துக்கள் நாராயணா! என்பதில் உய்த்துணரத்தக்கன.

என்றென்று என்கையாலே இப்படியே பலகால் கூப்பிட்டுக்கொண்டேயிருக்கின் ...றமை காட்டப்பட்டது. இவர்தாம் கூப்பிடுவது ஒரு ப்ரயோஜனத்திற்காகவாகில் அது கிடைத்ததென்று வாய் ஓயலாம்; கூப்பிடுகைதானே ப்ரயோஜனமாகையாலே ஒவாதுரைக்கு ...முறை இதுவேகாணீர்.

காலந்தோறும் யானிருந்து என்றவிடத்தில் நம்பிள்ளையீடு:— "படுவதெல்லாம்பட்டு நூறே பிராயமாக இருக்கவேணுமோ? குணாதிக விஷயத்தைப் பிரிந்தால் முடியவொட்டாது 'இன்னமும் காணலாமோ' என்னும் நசை."

கைதலைபூசலிடுவதாவது—"மத்தகத்திடைக் கைகளைக்கூப்பி" என்றும் "ஶிரஸ்யஞ்ஜலி மாதாய—சிரஸ்யஞ்ஜலிமாதாய" என்றும் சொல்லுகிறபடியே தலைமேல் கரங்குவிக்கை, ஆற்றாமையினால் தலைமேல் மோதிக்கொள்ளும்படியைச் சொல்லுகிறதென்றுங் கூறுவர்.

கோலமேனி காணவாராய்=ஆசைப்பட்டவர்கள் கண்டு அநுபவிப்பதற்காகவன்றோ இத்திருமேனி படைத்தது. "பக்தாநாம் த்வம் ப்ரகாசஸே" என்று சொல்லியிருக்க இப்படியும் உபேக்ஷிப்பதுண்டோ? "வாசிவல்லீரிந்தளூரீர்! வாழ்ந்தேபோம் நீரே!" என்று வயிறெரிந்து சொல்லும்படியாக வைத்துக்கொள்வது தகுதியோ? பரிமள ப்ரசுரமான தீர்த்தத்தைச் சேகரித்துவைப்பது விடாயர்விடாய் கெடுவதற்காகவன்றோ; அதனை அவர்கட்கு எட்டாதே வைப்பது முண்டோ? என்கிறார். காணவாராய் என்றது காணவரவேணுமென்றபடியன்று; காணவருகின்றிலையே! என்றபடி. நித்ய விபூதியிற்சென்று ஸேவிப்பதிலுங்காட்டில் இவ்விபூதியிலேயே ஸேவிக்கப்பெறுதல் பரமோத்தேச்யமாகையாலே இக்கருத்துத் தோன்ற "கூவியுங்கோள்ளாயே" என்கிறார். .... .... .... (ச)

கொள்ளமாளாவின்பவெள்ளம் கோதிலதந்திடும் * என்
வள்ளலேயோ! வையம்கொண்டவாமனாவோ! என்றென்று *
நள்ளிராவும்நன்பகலும் நானிருந்தோலமிட்டால் *
கள்ளமாயாவுன்னை என்கண்காணவந்தீயாயே. (ரு)

| | |
|---|---|
| கொள்ள | அநுபவிக்கவநுபவிக்க |
| மாளா | எல்லைகாணவொண்ணாத |
| இன்பம் வெள்ளம் | ஆனந்தப்பெருக்கை |
| கோது இல | குறையற |
| தந்திடும் | உபகரிக்கின்ற |
| என் வள்ளலே | என் உதாரனே! |
| வையம் கொண்ட | (மாவலிபக்கல் நீரேற்றுப் பெற்று) உலகங்களையெல்லாம் அளந்து கொண்ட |

| | |
|---|---|
| வாமனு | வாமனமூர்த்தியே! |
| ஓ ஓ என்று | என்று ஆர்த்தியோடே சொல்லி |
| நள் இராவும் நன் பகலும் | இரவும் பகலும் |
| நான் இருந்து ஓலமிட்டால் | நான் ஆசையோடிருந்து கூப்பிட்டால் |
| கள்ளம் மாயா | க்ருத்ரிமனுன ஆச்சர்ய பூதனே! |
| உன்னை | உன்னை |
| என் கண் காண | என் கண்கள் காணுமாறு |
| வந்து ஈயாய் ஏ | வந்து ஸேவை ஸாதிக்கின்றிலேயே!. |

* * * ஏற்கெனவே தம் திறத்தில் எம்பெருமான் செய்தருளியிருக்கிற உபகாரங்கள் சிலவற்றைச் சொல்லி 'இப்படி உபகாரம் செய்தருளின நீ இப்போது உபேக்ஷிப்பது தகுதியோ?' என்கிறார். * தீர்ப்பாரையாமினிக்குமுன்னே * வீற்றிருந்தேழுலகில் "வீவிலின்பம் மிகவெல்லை நிகழ்ந்தனன்" என்று சொல்லும்படியாக அப்போது எம்பெருமான் தந்த பரமாநந்த ஸந்தோஹத்தைத் திருவுள்ளம்பற்றிக் "கொள்ளமாளா வின்பவெள்ளம் கோதில தந்திடும் என் வள்ளலே!" என்கிறார். கொள்ளக்கொள்ள மாளாத இன்பவெள்ளமாவது மேன்மேலும் பெருகிச்செல்கின்ற இன்பவெள்ளம். அதனைக் கோதில்லாதபடி தருகையாவது என்னென்னில்; பகவத் விஷயத்தை அநுபவித்துக் கொண்டே வரும்போது 'அநுபவித்தது போதும்' என்று தோன்றினும், 'இதைவிட்டு இன்னொரு விஷயத்தை அநுபவிப்போம்' என்று ஆசை பிறந்தாலும் அது இன்பத்திற்குக் கோது; அத்தகைய கோது இல்லாதபடி தந்தனனென்றது "எப்பொழுதும் நாள் திங்களாண்டூழியூழிதொறும் அப்பொழுதைக்கப்பொழுது என்னாராவமுதமே" என்னும்படியாகத் தந்தருளினனென்றபடி.

என் வள்ளலே! என்று சொல்லி ஓ! என்கிறார், இப்படி இப்போது கூப்பிடப்பண்ண நினைத்திருந்தால் வீற்றிருந்தேழுலகிலே அப்படியென்னை அநுபவிப்பிக்கவேணுமோ? என்கைக்காக.

வையங்கொண்ட வாமனுவோ!=ப்ரயோஜநாந்தர பரனை வொருவனுக்குக் காரியஞ் செய்யநினைத்து அழியமாறினவுனக்கு அநந்யப்ரயோஜநனுன என் விஷயத்திலே இரங்குகை அரிதோ என்று கூறியவாறு. வையத்தை இரந்த காலத்தில் வாமநவேஷமிருந்ததேயல்லது, வையங்கொண்ட காலத்தில் அஃது இல்லையே; த்ரிவிக்ரம வேஷமன்றோ அப்போது இருந்தது; அப்படியிருக்க 'வையங்கொண்ட வாமனு!' என்றது என் என்னில்; ஆழ்வாருடைய திருவுள்ளத்தில் வாமநவேஷமொன்றே அழகின் மிகுதியால் நிலைத்திருக்கிறபடி. இந்திரனைப்போலே ராஜ்யம்பெற்று மீளவேண்டியவரல்லாமையாலே இங்ஙனே கூப்பிடுவதே இவர்க்குப் போதுபோக்கென்பது "என்றேன்று" என்பதனால் தெரிவிக்கப்படும். இப்படிப் பல திருநாமங்களைச் சொல்லி இரவும் பகலும் நான் கூப்பிட்டால் என் கண்கள் விடாய் கெடும்படி நடையழகு காட்டி என் முன்னே வந்து நிற்கின்றிலேயே! என்கிறார். ... (௨)

ஈவிலாததீவினைகள் எத்தனைசெய்தனன்கொல்? *
தாவிவையம்கொண்டவெந்தாய்! தாமோதரா! என்றென்று *
கூவிக்கூவிநெஞ்சுருகிக் கண்பனிசோரநின்றால் *
பாவிநீயென்றொன்றுசொல்லாய் பாவியேன்காணவந்தே. (௩)

| | |
|---|---|
| தீ வினைகள் | பாவங்களை |
| ஈவு இலாத | முடிவில்லாதபடி |
| எத்தனை செய்தனன் கொல் | எவ்வளவு செய்தேனே! |
| தாவி | திருவடிகளாலே வியாபித்து |
| வையம் | உலகங்களை |
| கொண்ட | ஸ்வாதீனப்படுத்திக் கொண்ட |
| எந்தாய் | ஸ்வாமியே! |
| தாமோதரா | தாம்பால் ஆப்புண்ட தழும்பை உதரத்திலுடையவனே! |
| என்று என்று கூவி கூவி | என்று பலகால் சொல்லி இடைவிடாதே கூப்பிட்டு |

| | | | |
|---|---|---|---|
| நெஞ்சு உருகி கண் பனி சோர நின்றால் | நெஞ்சு நீராயுருகி கண்ணீர் பெருக நின்றால், | வந்து | எழுந்தருளி |
| பாவியேன் காண | பாபியான நான் கண்ணாலே ஸேவிக்கும்படியாக | நீ பாவி என்று | "(ஆழ்வாரே!) நீர் பாபிகாணும்" என்று |
| | | ஒன்று சொல்லாய் | ஒரு வார்த்தையும் சொல்லு கின்றாயில்லை. |

* * * நான் விரும்புகிறபடி என் கண் முன்னே வந்து காட்சி தந்தருளத் திருவுள்ள மில்லையாகிலும் "-நீ பாவி, உனக்கு நான் காட்சிதரமாட்டேன்" என்கிறவொரு வார்த்தையை யாவது என் கண் வட்டத்திலே வந்து சொல்லிப்போனாலாகாதோவென்கிறார்.

அவனோட்டைக் கலவியையே அல்லும் பகலும் ஆசைப்பட்டுக்கொண்டு கிடக்கிற ஆழ்வார் 'பாவி நீ யென்றொன்று சொல்லாய்' என்கைக்குக் கருத்து யாதெனில்; 'ஆழ்வீர்! நீர் பாவமே செய்து பாவியானவராகையாலே உம்மோடு கலப்பதற்கு எனக்கு விருப்பமில்லை' என்று சொல்லுகிற இந்த வார்த்தையையாவது தமது முகத்தை நோக்கி அவன் சொல்லு வானாகில் அப்போதைய ஸேவையாவது கிடைக்குமே என்றும், கண்ணிலே தென்பட்டா னாகில் பிறகு அவனை உபாயங்களால் கவர்ந்து கொள்ளலாமென்றும் நினைத்துச் சொன்ன தத்தனை. ஆண்டாளும் "மெய்ம்மை சொல்லி முகம்நோக்கி விடை தான் தருமேல் மிக நன்றே" என்றது இங்கு ஒப்பு நோக்கத்தக்கது.

"அவச்ய மநு போக்தவ்யம் க்ருதம் கர்ம சுபாசுபம்" என்றும் "நாபுக்தம் க்ஷீயதே கர்ம கல்பகோடிசதைரபி" என்றுமுள்ள பிரமாணங்களை நோக்கினால் தீவினைகள் அநுபவித்துத் தீர்க்கமுடியும் என்று ஏற்படுகிறது; அப்படியும் தீராத எத்தனை பாவங்களைப் பண்ணினேனோ! என்கிறார் முதலடியில். "மதியிலேன் வல்வினையே மாளாதோ" என்றதும் காண்க.

தாவியித்யாதி. * தன்னுருவமாரு மறியாமல் தானங்கோர் மன்னுங்குறளுருவில் மாணியாய் மாவலிதன் பொன்னியலும் வேள்விக்கண் புக்கிருந்து போர்வேந்தர்மன்னை மனங்கொள்ளவஞ்சித்து நெஞ்சுருக்கி என்னுடைய பாதத்தால் யானளப்ப மூவடிமண் மன்னா! தருகென்று வாய்திறப்ப, மற்றவனுமென்னால் தரப்பட்டதென்றலுமே, அத்தனைக் கண் மின்னார் மணிமுடிபோய் விண்தடவ, மேலெடுத்த பொன்னார் கனைகழற்காலேழுலகும் போய்க்கடந்த பரத்வத்தைச் சொல்லுவேன்; * உறியார்ந்த நறுவெண்ணெயொளியால் சென்று அங்குண்டானைக்கண்டு ஆய்ச்சியுரலோடார்க்கத் தறியார்ந்த கருங்களிறே போல நின்று தடங்கண்கள் பனிமல்கும் தன்மையாகிய ஸௌலப்யத்தைப்பேசுவேன்; இங்ஙனே பரத்வ ஸௌலப்யங்களை மாறிமாறிப்பேசிக் கண்ணுங் கண்ணீருமாய் நின்றக்கால் கண்ணே திரேவந்து ஸேவைதந்தருளலாகாதோ? அநுக்ரஹம் செய்யத் திருவுள்ளமில்லையாகிலும் நிக்ர ஹித்து விட்டேனென்றாவது கண்முன்னே வந்து நின்று சொல்லிப்போனாலாகாதோ? என்னை நீ பாக்கியவான் என்றாலும் பாவியென்றாலும் அதில் எனக்கொரு நிர்ப்பந்தமில்லை; உன் திரு மிடற்றோசை கேட்கவேண்டுவதே எனக்கு அபேக்ஷிதம்; கண்ணுக்குத் தோற்றாதே நின்று மிடற்றோசையைக் காட்டிவிட்டாலும் த்ருப்தியடையேன்; என் கண்ணுக்கு இலக்காகி வந்து சொல்லவேணும். ... ... ... .... (ரூ)

காணவந்தென்கண்முகப்பே தாமரைக்கண்பிறழ *
ஆணிசெம்பொன்மேனியெந்தாய்! நின்றருளாயென்றென்று *
நாணமில்லாச்சிறுநகையேன் நானிங்கலற்றுவதென் ?*
பேணிவானோர்காணமாட்டாப் பீடுடையப்பனையே.

| | |
|---|---|
| வானோர் | பிரமன் முதலிய தேவர்கள் |
| பேணி | விரும்பியும் |
| காணமாட்டா | காணமுடியாதபடி |
| பீடு உடை | பெருமை வாய்ந்த |
| அப்பனை | ஸ்வாமியை நோக்கி, |
| ஆணி செம் பொன் மேனி எந்தாய் | "மாற்றுயர்ந்த பொன் போல விரும்பத்தகுந்த திருமேனி படைத்தபிரானே! |
| தாமரை கண் பிறழ | தாமரைப்பூப்போன்ற திருக்கண்கள் விளங்கும்படி (என்னைப் பார்த்துக் கொண்டு) |
| காண வந்து | நான் காணுமாறு வந்து |
| என் கண் முகப்பே | என் கண் முன்னே |
| நின்றருளாய் | நின்றருளவேணும் |
| என்று என்று | என்று ஓயாதே சொல்லி |
| சிறு தகையேன் நான் | நீசனாகிய நான் |
| நாணம் இல்லா | வெட்கம் கெட்டவனாய்க்கொண்டு |
| இங்கு அலற்றுவது என் | இங்கே அலற்றுவதற்கு ஒரு பிரயோஜனமுமில்லையே. |

* * *—பிரமன் முதலிய தேவர்களுக்கும் காணக்கிடைக்காத பெருமானை வடிவழகு காணவிரும்பி வெட்கமற்று நான் கூப்பிடாநின்றேனே! இதற்கு என்ன பலனுண்டு! என்கிறார்.

ஆணி செம்பொன் மேனி = ஆணிப்பொன்னாவது மாற்றறிதற்குக் கொள்ளும் உயர்தரப்பொன். இதுக்குமேலே மாற்றில்லை யென்னும்படியான சிறந்த பொன் என்றும் சொல்லுவர். எம்பெருமானுடைய திருமேனி கருமுகில் திருநிறத்ததாயிருக்க, செம்பொன்மேனி என்றது என்? என்னில்; செம்பொன் நிறத்திற்கு உவமையாகக் கூறப்பட்டதன்று: ஸ்ப்ருஹணீயதைக்குக் கூறிற்றென்க; அதுபோலே விரும்பத்தக்க திருமேனி என்றபடி. "[illegible] = ப்ரசாஸிதாரம் ஸர்வேஷாம் அணீயாம் ஸமணீயஸாம், ருக்மாபம் ஸ்வப்நதீகம்யம் வித்யாத்து புருஷம்பரம்." என்றும், "[illegible]" என்றுமுள்ள பிரமாணங்களைக்கொண்டும் நிர்வஹிக்கலாம். ஹிரண்யவர்ணையான பிராட்டியின் சேர்க்கையாலுண்டான நிழலீட்டாலே எம்பெருமானும் ஹிரண்மயனாகத் தோற்றலாம். இப்படிப்பட்ட திருமேனி படைத்தவனே! என் கண் முன்னே வந்து நிற்கவேணும் என்று பலகால் சொல்லியழைக்கிறேனே! இதற்கு ஒரு பலன் கிடைக்கப்போகிறதோ?

மேம்பட்டவர்களாகப் பிரசித்தி பெற்றிருக்கின்ற தேவர்களுக்கும் காணக் கிடைக்கமாட்டாத பெருமானைத் தாம் காண ஆசைப்பட்டது வெட்கமில்லாமையின் காரியமென்று காட்டுதற்காக நாணமில்லா என்றார். .... ... ... (5)

அப்பனே! அடலாழியானே! ஆழ்கடலைக்கடைந்த
துப்பனே!* உன்தோள்கள்நான்கும் கண்டிடக்கூடுங்கொலென்று *
எப்பொழுதும்கண்ணநீர்கொண்டு ஆவிதுவர்ந்துதுவர்ந்து *
இப்பொழுதேவந்திடாயென்று ஏழையேன்நோக்குவனே. (6)

| | |
|---|---|
| அப்பனே | உபகாரம் செய்யுமியல்வினனே! |
| அடல் ஆழியானே | வீரத்தன்மை வாய்ந்த திருவாழியையுடையவனே! |
| ஆழ் கடலை | ஆழமான கடலை |
| கடைந்த | கடைந்து அன்பர்கட்கு அமுதமளித்த |
| துப்பனே | ஸமர்த்தனே! |
| உன் நான்கு தோள்களும் | உனது திருத்தோள்கள் நான்கையும் |
| கண்டிட கூடும் கொல் என்று | ஸேவிக்க நேருமோ! என்று எண்ணி |
| எப்பொழுதும் | எப்போதும் |
| கண்ணநீர் கொண்டு | கண்ணீரோடிருந்து |
| ஆவி துவர்ந்து துவர்ந்து | பிராணன் மிகவும் உலர்ந்து |
| இப்பொழுதே வந்திடாய் என்று | உடனே எழுந்தருள வேணுமென்று அபேக்ஷித்து |
| ஏழையேன் | சபலனான நான் |
| நோக்குவன் | சுற்றும் பாராநின்றேன். |

* * *—பிரமன் முதலானோர்க்கும் காணமுடியாதிருக்கிற உன்னுடைய அழகைக் காண வேணுமென்று ஆசைப்பட்டு 'இப்பொழுதே வந்திடாய்' என்று அபேக்ஷித்து, நாம் அபேக்ஷித்தபடியே வந்தருள்வன் என்று நம்பி, வரும்போதை யழகைக் காணவேணுமென்று பாரித்திருக்கின்றேனே ! என்னுடைய சாபல்யத்தை என் சொல்லுவேன் ! என்கிறார்.

அப்பன் என்று உபகாரம் செய்பவனைச் சொல்லுகிறது. நீ முகங்காட்டாதபோதும் உன்னையே சொல்லிக் கூப்பிடும்படியாக இவ்வளவு மஹோபகாரம் பண்ணினவனே ! என்றபடி. எனக்கு நீ அருள்செய்ய நினைத்தால் என்னுடைய பாவங்கள் குறுக்கே நிற்கவற்றோ? "எப்போதுங் கைகழலா நேமியான் நம்மேல் வினைகடிவான்" என்கிறபடியே என் வினைகளைத் துணிக்கத் திருக்கையிலே திவ்யாயுதமுண்டே யென்பார் அடலாழியானே ! என்கிறார். கையுந் திருவாழியுமான அழகு காண ஆசைப்பட்டன்றோ நான் கூப்பிடுகிறது என்றவாறுமாம்.

ஆழ்கடலைக் கடைந்த துப்பனே != உன்னளவிலே பல்லாண்டு பாடாதே உன் திருமேனியை நோவுபடுத்திக் காரியங்கொள்ள நினைப்பார்க்கும் காரியம் செய்து தலைக்கட்டுகின்ற வுனக்கு என்னெதிரேவந்து நின்று காட்சி தருகைக்குத் திருவுள்ளமுண்டாகாதது என்னோ? 'நம் உடம்பை நோவுபடுத்துகின்றவர்களுக்குத் தான் நாம் காரியம் செய்யக்கடவோம்' என்று ஏதேனும் நியமம் கொண்டிருப்பதுண்டோ? "கடலைக்கடைந்த துப்பனே!" என்ற இவ்விடத்தில் விவக்ஷிதமான துப்பாவது—"விண்ணவரமுதுணை அமுதில்வரும் பெண்ணமுதுண்ட எம்பெருமானே !" என்கிறபடியே தேவர்களுக்கு உப்புச்சாறு எடுத்துக் கொடுக்கிற வியாஜத்தாலே தான் பெண்ணமுதாகிய ஸ்ரீ மஹாலக்ஷ்மியை லபித்தஸாமர்த்தியம்.

உன் தோள்கள் நான்கும் கண்டிட = கடல்கடைந்த காலத்திலே தேவர்கள் எப்போது நம் உணவு கடலில் நின்றும் கிளரப்போகின்றதோ என்று கடலைக்கவிழ்ந்து பார்த்துக் கொண்டிருந்தார்களே யல்லது தோளழகிலே துவக்குண்டு காப்பிட்டார்களில்லை; அக்குறைதீர "மல்லாண்ட திண்டோள் மணிவண்ணா ! பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு" என்று திருத்தோள்களுக்கு மங்களாசாஸநம் பண்ணவேணு மென்றன்றோ நான் பாரித்திருப்பது. கண்ணபிரானை வஸுதேவ க்ருஹத்திலே அவதரித்தபோது "ஜாதோஸி தேவ தேவேஶ ! ஶங்க சக்ர கதாதர!" என்ற நான்கு திருத்தோள்களோடே அவதரித்தாயென்றும், பிறகு மாதாபிதாக்கள் "உபஸம்ஹர விச்வாத்மந் ! ரூபமேதத் சதுர்ப்புஜம்" என்று, நான்கு திருத்தோள்களோடு கூடின இத்திருவுருவத்தை மறைத்திடாய் என்று வேண்டிக்கொள்ள, அப்படியே மறைத்திட்டதாகவும், உகவாதார்க்குக் கூசி மறைத்திட்ட அதனை உகந்த பெண்களுக்குக் காட்டிக்கொடுத்தாயென்றும் கேள்விப்படுகிறேன்; அவ்வண்ணம் எனக்கும் நீ காட்டிக்கொடுக்க நேர்ந்து நான் காணப்பெறலாகுமோ வென்று பாரித்துக்கிடக்கின்றேனென்பது உள்ளுறையும் கருத்து.

கண்ண நீர் கொண்டு = ஆனந்தாச்ரு, சோகாச்ரு என்று இருவகையான கண்ணீர்கள் உண்டு. அவ்விரண்டும் இங்கு விவக்ஷிதமாகலாம்; அத்திருவுருவத்தை நினைத்தவளவிலேயே ஒரு ஆனந்தம் பெருகிச் செல்லுமாகையாலே ஆனந்தாச்ருவாகும். 'நாம் பாரிக்கிறபடி நமது கண்களுக்குப் புலப்படவில்லையே !' என்று வருத்தமுமாகையாலே சோகாச்ருவுமாகும். ஆவி துவர்ந்து துவர்ந்து—பிராணன் பசையற உலர்ந்து என்றபடி. ஆவி அடியோடு தொலையமாட்டேனென்கிறது என்கிற வருத்தத்தைக் காட்டினபடி.

இப்போழுதே வந்திடாயென்று=தாமதித்து வந்தாயாகில் திருப்புளியாழ்வாரைக் கட்டிக்கொண்டு அழவேண்டியதாகு மத்தனை யுனக்கு; இப்பொழுதே வந்தாயாகில் என் கண்ணிலே விழிக்கப்பெறுவாய் என்றவாறு. ஏழையேன் நோக்குவனே!=இங்ஙனே சொன்னவளவிலும் ஸர்வஜ்ஞன் நினைவறிந்து வாராதிருப்பனோ? அவசியம் வந்தே தீருவன்; ஆபத்து மிகுந்தவாறே தவறாது வந்து தோன்றுகிற வழக்கத்தை கஜேந்திராழ்வான் ப்ரஹ்லாதாழ்வான் போல்வார் பக்கலிலே கண்டிருக்கிறோமாகையாலே வந்தே தீருவன் என்று நிச்சயித்து சாலத்தாலே திசையெங்கும் நோக்குகின்றேன் என்கை.

ஏழையேன் நோக்குவனே யென்றவிடத்தில் ஒரு ஐதிஹ்யமுண்டு; சோழராஜஸதஸ்ஸிலே திருக்கண்களையிழந்த கூரத்தாழ்வானை உடையவர் வரதராஜன் விஷயமாக ஒரு ஸ்தவம் பணிக்கும்படி நியமித்தார்; பேரருளாளன் வரந்தரும் பெருமாளென்று பேர்பெற்றிருக்கையாலே திருக்கண் தந்தருள்வன் என்று திருவுள்ளம்பற்றி அப்படி நியமித்தருளினர். ஆசார்ய நியமனத்தை யடியொற்றி ஆழ்வானும் வரதராஜஸ்தவ மருளிச்செய்து அதை உடையவர் திருமுன்பே விண்ணப்பம்செய்து வருகையில் “நீலமேகநிபம் அஞ்ஜநபுஞ்ஜச்யாம குந்தலம் அநந்தசயம் த்வாம். அப்ஜபாணிபதம் அம்புஜநேத்ரம் நேத்ரஸாத்குருகரீஶ! ஸதா மே.” என்கிற ச்லோக ரத்நத்தைத் திருச்செவி சாத்தின உடையவர் “ஆழ்வான்! இப்பாசுரம் கேட்டால் பெருமாள் இரங்காமையில்லை; உன்முகத்தைக்காட்டு பார்ப்போம்” என்றாராம். கனிந்த சொற்களுக்கு எம்பெருமான் காட்சிதந்தே தீருவன் என்று அன்பர்கள் நம்புவதற்குறுப்பான ஐதிஹ்யம் இது.

நோக்கிநோக்கியுன்னைக்காண்பான் யானெனதாவியுள்ளே *
நாக்குநீள்வன்ஞானமில்லை நாள்தோறுமென்னுடைய *
ஆக்கையுள்ளுமாவியுள்ளும் அல்லபுறத்தினுள்ளும்
நீக்கமின்றிஎங்கும்நின்றாய்! நின்னையறிந்தறிந்தே. (௫)

| | |
|---|---|
| நாள் தோறும் | ஸர்வகாலத்திலும் |
| என்னுடைய | என்னுடைய |
| ஆக்கை உள்ளும் | சரீரத்தினுள்ளும் |
| ஆவி உள்ளும் | ஆத்மாவினுள்ளும் |
| அல்ல புறத்தின் உள்ளும் | மற்றுமுண்டான இந்த்ரியம் முதலானவற்றிலும் |
| நீக்கம் இன்றி | நீங்காமல் [ஒன்றையும் விடாமல்] |
| எங்கும் நின்றாய் | எங்கும் வியாபித்திருக்கின்ற பெருமானே! |
| நின்னை | உன்னை |

| | |
|---|---|
| அறிந்து அறிந்தே | (அருள்செய்யத் திருவுள்ளமில்லாதவன் என்று) நன்றாக நான் அறிந்துவைத்தும் |
| யான் | நான் |
| உன்னை காண்பான் | உனது திவ்யமங்கள விக்ரஹத்தை ஸேவிக்கவேண்டி |
| நோக்கி நோக்கி | எல்லாத்திசைகளிலும் பார்த்து |
| எனது ஆவி உள்ளே | எனது நெஞ்சுக்குள்ளே |
| நாக்கு நீள்வன் | நாக்கை நீட்டுகின்றேன் [ஆசைப்படுகின்றேன்] |
| ஞானம் இல்லை | இப்படிப்பட்ட நான் விவேகமற்றவனத்தனை. |

* * *—எம்பெருமானே! என்னுள்ளே நீ நிறைந்திருந்தும் எனக்கு நீ உன்னைக் காட்டாமலிருப்பது திருவுள்ளமில்லாமையாலன்றோ என்று நான் அறிந்து வைத்தும் அவிவேகத்தாலே காணவாராய்! காணவாராய்! என்று கதறுகின்றேன் என்கிறார்.

இறைப்பொழுதும் ஓயாதே எட்டி யெட்டிப் பார்க்கின்றேன்; எந்தத் திசை வழியாக வருவாயென்று தெரியாமையாலே நாற்புறமும் விழித்துப் பார்க்கிறேன்; எதற்காகவென்னில்; உன்னைக் காண்கைக்காகவத்தனை. காண்பதற்கு மேலே வேறொரு ப்ரயோஜனத்தைக் கனவிலும் கருதாத குடியிலே யன்றோ பிறந்திருப்பது. ‘இப்படி எனக்கு ஆசை’ என்று வாய்விட்டுச் சொல்லமாட்டாதே நாக்கை நீட்டியிருக்கின்றேன். நாக்கை நீட்டுவானேன் என்

னில்; "கன்னலங்கட்டி தன்னைக் கனியை யின்னமுதந் தன்னை" என்றும் "எனக்குத்தேனே பாலே கன்னலே யமுதே" என்றும் "விழுமியமுனிவர் விழுங்குங் கோதிலின் கனியை" என்றும் சொல்லுகிறபடியே பகவத்விஷயமென்பது பரம போக்ய வஸ்துவாகையாலே "தூயவமுதைப் பருகிப்பருகி" "அடியேன் வாய்மடுத்துப் பருகிக்களித்தேனே" என்கிற கணக்கிலே நாவுக்கும் விஷயமுண்டே.

நாக்கு நீட்டினவளவில் விரும்பின பொருள் கிடையாதொழிந்தவாறே 'இதில் நாக்கை வைப்பது தகுதியன்று' என்று கைவாங்கி நிற்பதன்றோ ப்ராப்தம்; அறிதன்னுமிடம் அறியாதே சிறு குழந்தைகள் நாக்கை நீட்டினபடியே யிருப்பதுண்டு; அதுபோலவே நானும் என்று காட்டுகிறார் ஞானமில்லை என்பதனால்.

ஞானமில்லை என்றதை உபபாதிக்கிறது மேலுள்ளதெல்லாம். என்னுடைய சரீரத்திலும் ஆத்மாவிலும் மற்றும் இந்த்ரியாதிகளிலும் ஒன்றையும் விடாதே எல்லா ஸ்தலத்திலும் வியாபித்து நின்றாய் நீ என்பதை அறியேனோ? இப்படிப்பட்ட நீ என் கண்ணுக்குத் தோற்ற வேணுமென்று திருவுள்ளம்பற்றினையாகில் உடனே தோற்றியிருக்கலாமே; "வாசி வல்லீர்" என்கிறபடியே இன்னாருக்குத்தான் தோற்றவேணும் இன்னாருக்குத் தோற்றலாகாது என்று ஒரு நிர்ப்பந்தம் வைத்துக் கொண்டிருக்கிறாயென்று நான் தெரிந்துகொண்டு வாய் மூடி யிருக்கை அழகியது. அப்படியிருக்கின்றிலேனே; உன் கருத்தையறிந்து வைத்தும் ஆறி யிருக்கின்றிலேனாகையாலே எனக்கு ஞானமில்லை யென்னுமிடம் ஸித்தமேயன்றோ என்றதாயிற்று.

ஞானமில்லை என்றதற்கு ஒரு உள்ளுறை பொருளுண்டு; மற்றையோருடைய ஞானம் போன்றதன்று என்னுடைய ஞானம்; "மயர்வற மதிநலமருளினன்" என்றபடி பக்திரூபாபன்ன ஜ்ஞானத்தைத் தந்தருளினையாகையாலே "அத்யந்த பக்தி யுக்தாநாம் ந சாஸ்த்ரம் நைவ சக்ரம:,, என்ற கட்டளையிலே துடிக்கின்றேன் என்பதாம். "காற்றும் கழியும் கட்டி அழக் கொண்ட பெருங் காதலுக்குப் பத்திமை நூல்வரம்பில்லையே" என்ற ஆசார்யஹ்ருதய திவ்ய ஸூக்தியும் இதற்கு ஸம்வாதமாக அநுஸந்தேயம்.

"நீக்கமின்றி யெங்கும் நின்றாய்" என்றவிடத்திலே நம்பிள்ளையீடு;—"கிழிச்சீரையிலே தனங்கிடக்கப் புறங்கால் வீங்குவாரைப்போலே காணும் இவர்படி" என்று. (அதாவது) உள்ளே நிதி கிடக்கச்செய்தேயும் சிலர் வெளியிலே செல்வம்பெற வேணுமென்று பாரிப்பர்; அதுபோலே ஆழ்வார் தம்மிடத்திலே அந்தர்யாமியாய்ப் பூர்ணனாயிருக்கின்ற பரம புருஷனை அநுபவித்து த்ருப்திபெறமாட்டாதே பாஹ்யாநுபவத்திலே மநோரதத்தைப் பெருக்கித்துவள்கின்றார் என்கை. .... .... .... .... (௬)

அறிந்தறிந்துதேறித்தேறி யானெனதாவியுள்ளே *
நிறைந்தஞானமூர்த்தியாயை நின்மலமாகவைத்து *
பிறந்தும்சேத்தும்நின்றிடறும் பேதைமைதீர்ந்தொழிந்தேன் *
நறுந்துழாயின்கண்ணியம்மா! நானுன்னைக்கண்டுகொண்டே. (௭)

| | | | |
|---|---|---|---|
| நறுதுழாயின் கண்ணி அம்மா | பரிமளம்மிக்க திருத்துழாய் மாலையையுடைய பெருமானே! | அறிந்து அறிந்து | உன்னுடைய உபாயத்வத்தையும் உபேயத்வத்தையும் நன்றாக அறிந்து |
| நான் உன்னை கண்டு கொண்டு | நான் உன்னை (மாநஸஸாக்ஷாத்காரமாக) ஸேவிக்கப்பெற்று | தேறி தேறி | மிக்க தெளிவையுடையேனாகி |

| | | | |
|---|---|---|---|
| யான் | இப்படித் தெளிவுபெற்ற நான் | நின்மலம் ஆக வைத்து | விசதமாக அநுபவித்து |
| எனது ஆவி உள்ளே | என் நெஞ்சுக்குள்ளே | பிறந்தும்செத்தும் நின்று இடறும் பேதைமை தீர்ந்து ஒழிந்தேன் | பிறப்பதும் சாவதுமாயிருந்து படுகிற அஜ்ஞான ஸம்ஸாரத்தைத் தவிர்த்துக்கொள்ளப் பெற்றேன். |
| நிறைந்த ஞானம் மூர்த்தியாயை | பரிபூர்ண ஜ்ஞானஸ்வரூபனான உன்னை | | |

* * *—'ஆழ்வீர்! *நாக்கு நீள்வன் ஞானமில்லை* என்று உம்மை நீர் நிந்தித்துக் கொள்வதானது என்னுடைய நிந்தையிலன்றோ முடிந்து நிற்கிறது; உமக்கு நான் ஒரு உபகாரமும் செய்யவில்லைபோலே வருந்துகின்றீரே; நன்கு ஆராய்ந்து பாரும்; எத்தனை உபகாரங்கள் என்னால் பெற்றிருக்கிறீரென்பதை அறிந்து சொல்லும்' என்று எம்பெருமான் அருளிச்செய்ய, 'பிரானே! சில உதவிகளை நீ செய்ய நான் பெற்றதுண்டு; அடியோடு ஒன்று மில்லையென்று சொல்லுகின்றிலேன்; பெற்றவளவு போராது என்கிறேனத்தனை' என்று சொல்லத் தொடங்கி, பெற்ற அளவு இன்னதென்கிறார் இப்பாட்டில்; பெறவேண்டியதை மேற்பாட்டிலே சொல்லவிருக்கிறார்.

இப்பாட்டில், "நறுந்துழாயின் கண்ணியம்மா! நானுன்னைக்கண்டு கொண்டு பேதைமை தீர்ந்தொழிந்தேன்" என்றருளிச்செய்வதைப் பார்த்தால், * கோலமேனி காணவாராய் * என்று அபேக்ஷித்தபடியே எம்பெருமான் வந்து காட்சி தந்துவிட்டதாகத்தோன்றும். உண்மை அப்படியில்லை; அடுத்தபாட்டில் "கண்டுகொண்டு பாடியாட—வந்திடகில்லாயே" என்றிருக்கையாலே இன்னமும் காணப்பெற்றிலர் என்றே கொள்ளவேணும். ஆனால், இப்பாட்டில் நானுன்னைக் கண்டுகொண்டே என்கிறாரே; இதற்குப்பொருள் என்? என்னில்; மாநஸஸாக்ஷாத்காரமென்றும் பாஹ்யஸாக்ஷாத்காரமென்றும் காண்கை இரண்டு விதம்; * முனியே நான்முகனுக்கு உட்பட்டதெல்லாம் மாநஸஸாக்ஷாத்காரமேயாகும். ஆகவே இப்பாட்டில் சொன்னது மாநஸஸாக்ஷாத்காரமென்றும், மேற்பாட்டில் விரும்புவது பாஹ்யஸாக்ஷாத்காரமென்றும் அறிக. ஆசார்யஹ்ருதயத்தில் (முடிவில்) "கமலக்கண்ணனென்று தொடங்கிக் கண்ணுள் நின்றிறுதிகண்டேனென்ற பத்தும் உட்கண்ணாலேயாய்" என்றருளிச்செய்தது இங்கே அநுஸந்தேயம்.

அறிந்தறிந்து என்றும், தேறித் தேறி என்றும் இரட்டிசதுச் சொன்னதன் கருத்தாவது, எம்பெருமானருளாலே அர்த்த பஞ்சகத்தையும் தாம் அறியப்பெற்றபடியை அறிந்தறிந்து என்று கூறி, அதில் ஒவ்வொன்றிலும் நல்தெளிவு பெற்றபடியைத் தேறித்தேறி யென்று கூறினாராகை. (அது எங்ஙனேயென்னில்; 1. எம்பெருமானுடைய பரத்வத்தை யறிதல் பரஸ்வரூப ஜ்ஞானம், 'அவன் ஆச்ரித பாரதந்த்ரியமே வடிவாகவுடையவன்' என்று அறிதல் அந்த ஜ்ஞானத்தின் தெளிந்தநிலை 2. நாம் எம்பெருமானுக்கு அடிமைப்பட்டவர்கள் என்று அறிதல் ஸ்வஸ்வரூபஜ்ஞானம்; பாகவத சேஷத்வபர்யந்தமாக அறிதல் அந்த ஞானத்தின் தெளிந்தநிலை. 3. எம்பெருமானுடைய திருவடிகளையே உபாயமாகப் பற்றுகை உபாயஸ்வரூபஜ்ஞானம். அவனை நாமாகப் பற்றுகிற பற்றும் அஹங்கார கர்ப்பமாகையாலே அவனுடைய ஸ்வீகாரமே ரக்ஷகமென்றிருக்கை அந்த ஞானத்தின் தெளிந்தநிலை. 4. * ஒழிவில் காலமெல்லாமுடனாய் மன்னி வழுவிலாவடிமை செய்கை புருஷார்த்த ஸ்வரூப ஜஞானம். கைங்கரியம் செய்வதனால் உண்டாகிற ஆனந்தம் எம்பெருமானுடையதேயாகும்; அந்த ஆனந்தத்தைக்கண்டு சைதந்ய கார்யமாக ஆனந்திப்பதே நமக்கு உற்ற ஆனந்தம் என்றிருக்கை அந்த ஞானத்தில் தெளிந்தநிலை. 5. அஹங்கார மமகாரங்கள் த்யாஜ்யமென்றிருக்கை விரோதிஸ்வரூப ஜ்ஞானம். கைங்கர்யத்தை நான் செய்கிறேன், எனக்காகச் செய்கிறேன் என்று செய்கை பரம விரோதியென்றுணர்கை அந்த ஞானத்தில் தெளிந்தநிலை. ஆகவிப்படி அர்த்த பஞ்சகத்தை

ஸாமாந்யரூபேணவும் விசேஷ ரூபேணவும் உணர்ந்து தெளிவுபெற்றபடியை அறிந்தறிந்து தேறித்தேறி என்றதனால் அருளிச்செய்தாராயிற்று.

இப்படி நீ அறிவிக்க அறிந்த யான் பரிபூர்ண ஜ்ஞாநஸ்வரூபனான உன்னை என்னுடைய நெஞ்சினுள்ளே மிக விசதமாக அநுஸந்தித்து, சாவது பிறப்பதாய்க்கொண்டு தடுமாறுகிற அறிவுகேடு தவிரப்பெற்றேன். இதில் த்ருப்திபெற முடியுமோ ? என்கிறார்.

மூன்றாமடியில் 'இடரும்' என்று பல பிரதிகளிலும் காண்கிறது; 'இடறும்' என்று வல்லினறகரமான பாடமே யுக்தம். "ஈமினெமக்கொருதுற்றென்று இடறுவர்" (4-1-7) என்று கீழேயும் அருளிச்செய்தார். ப்ரஜை தெருவிலே யிடறி" என்ற ஸ்ரீவசநபூஷணமும் காண்க. இட றுதல்—கிலேசப்படுதல்.

நறுந்துழாயின் கண்ணியம்மா என்ற விடத்திற்கு ஈடு;—"இவ்வறிவு பிறக்கைக்கு அவனிட்ட பச்சையிருக்கிறபடி; வைத்த வளையத்தைக்காட்டி அவ்வடிவிலே குருகுலவாஸத்தைப் பண்ணுவித்து அறிவு பிறப்பித்தாயிற்று தனக்காக்கிக்கொண்டது."

ஆக இப்பாட்டால் ஆழ்வார் தாம் பெற்ற அளவைச் சொன்னாராயிற்று.

கண்டுகோண்டேன்கைகளார நின்திருப்பாதங்கள்மேல் *
எண்டிசையுமுள்ளபூக்கோண்டு ஏத்தியுகந்துகந்து *
தோண்டரோங்கள்பாடியாடச் சூழ்கடல்ஞாலத்துள்ளே *
வண்டுழாயின்கண்ணிவேந்தே! வந்திடகில்லாயே. (அ)

| | | | |
|---|---|---|---|
| வண் துழாயின் கண்ணி வேந்தே! | அழகிய திருத்துழாய்மாலையையுடைய நாயனே! | எண் திசையும் உள்ள பூ கொண்டு | எங்குமுள்ள புஷ்பங்களை சேகரித்துக்கொண்டு |
| | | ஏத்தி | தோத்திரஞ்செய்து பரிமாறி |
| கண்டு கொண்டு | (நெஞ்சினால் காண்கையன்றிக்கே) கண்ணாரக் கண்டு | உகந்து உகந்து | மிகவும் உகந்து |
| | | தொண்டரோங்கள் | அடியோமான நாங்கள் |
| என் கைகள் ஆர | எனது கைகள் ஆவல் தீரும்படி | பாடி ஆட | பாடுவதாடுவதாம்படி |
| | | கடல் சூழ் ஞாலத்துள்ளே | கடல் சூழ்ந்த இந்நிலவுலகுக்குள்ளே |
| நின் திருபாதங்கள் மேல் | உனது திருவடிகளின் மீது | வந்திட கில்லாயே | (என்கண்முகப்பே) வந்து நிற்கமாட்டேனென்கிறாயே!. |

* * *—பெற்ற உபகாரங்களைப் பேசினார் கீழ்ப்பாட்டில்; இனிப் பெறவேண்டுமது தன்னைப் பேசுகிறார் இப்பாட்டில். இந்த ஸம்ஸார நிலந்தன்னிலேயே உன்னைக்கண்டு அடியோங்கள் எல்லாவடிமைகளுஞ் செய்து உஜ்ஜீவிக்கும்படி அருள்புரியவேண்டு மத்தனையே அபேக்ஷிதமென்கிறார்.

காணப்பெறாமல் பட்டினி கிடக்கின்ற கண்கள் பட்டினி தீரும்படி காணவேணும். கைகளின் விடாய்தீர உன் திருவடிகளிலே எண்டிசையுமுள்ள பூக்களையுங் கொண்டு தூவவேணும்; அத்தாலே உன்னுடைய திருவுள்ளம் உகக்க, அவ்வுகப்புக்கண்டு அடியோங்கள் உகந்து, அவ்வுகப்புக்குப் போக்குவீடாகப் பாடவும் ஆடவும் வேணும். இப்பரிமாற்றங்களுக்கெல்லாம் ஏகாந்தமாகத் திருநாட்டிலே கொண்டுபோகிறேனென்னவொண்ணாது; இப்பேறு கடல்சூழ்ஞாலத்துள்ளே யாகவேணும். அங்கு நித்ய ஸூரிகளுக்கு ஸேவை ஸாதிக்கிறபடியே *தோளிணைமேலும் நன்மார்பின் மேலும் சுடர்முடி மேலும் தாளிணைமேலும் புனைந்த தண்ணந்துழாய் மாலையோடே வந்து காட்சி தந்தருளவேணும்; இப்படி எத்தனைநாள் பிரார்த்தித்தவிடத்திலும் வந்தருள்கின்றிலையே; நான் பெறாதது இத்தனையே யென்றாராயிற்று. .... .... .... .... (அ)

இடகிலேனொன்றட்டகில்லேன் ஐம்புலன்வெல்லகில்லேன் *
கடவனுகிக்காலங்தோறும் பூப்பறித்தேத்தகில்லேன் *
மடவன்னெஞ்சம்காதல்கூர வல்வினையேனயர்ப்பாய் *
தடவுகின்றேனெங்குக்காண்பன் சக்கரத்தண்ணலையே ? (௯

| | |
|---|---|
| ஒன்று இட கிலேன் | (இரந்தார்க்கு) ஒரு பிச்சையும் இட்டறியேன்; |
| ஒன்று அட்ட கில்லேன் | (தாஹித்தவர்களுக்குச்) சிறிது (தண்ணீரும்) வார்த்தறியேன்; |
| ஐம் புலன் | இந்திரியங்களைந்தையும் |
| வெல்ல கில்லேன் | பட்டிமேயாதபடி அடக்கி யாண்டறியேன்; |
| கடவன் ஆகி | நியதியுடையவனுகி |
| காலம் தோறும் | உரிய காலங்களிலே |
| பூ பறித்து ஏத்த கில்லேன் | புஷ்பங்களை ஸம்பாதித்து அர்ச்சித்துத் துதித்தறியேன்; |
| | (இப்படி அகிஞ்சநனுயிருக்கச் செய்தேயும்) |
| மடம் வல் நெஞ்சம் | மூர்க்கத்தனமும் கடினத் தன்மையும் பொருந்தின நெஞ்சானது |
| காதல் கூர | ஆசை விஞ்சிவரப்பெற்று |
| வல் வினையேன் | மஹாபாபியான நான் |
| அயர்ப்பு ஆய் | அவிவேகியாய் |
| சக்கரத்து அண்ணலை | சக்கரபாணியான எம்பெருமானை |
| தடவுகின்றேன் | காணத்தேடுகின்றேன்; |
| எங்கு காண்பன் | எங்கே காணக்கடவேன்? |

* * *—எம்பெருமான்மேலே பழியிட்டுப் பயன் என்? அவனைக் காண்கைக்கு உபாயமாக பகவத்கீதை முதலான சாஸ்த்ரங்களிலே கூறப்பட்ட கர்மயோகாதிகளுள் ஒன்றிலும் அந்வயமில்லாதிருக்கின்ற நான் கிடந்து கூப்பிடுவதில் என்ன ப்ரயோஜனம்? என்று தம்மில் தாம் சொல்லிக்கொள்ளுகிறுராயிருக்கிறது இடகிலேன் என்றது. "ஐயமும் பிச்சையும் ஆந்தனையுங்கைகாட்டி" என்கிறபடியே ஒருவர்க்கு ஒரு பிச்சையிட்டறியேன் என்றபடி. அட்டகில்லேன் என்றது தாஹித்து வந்தவர்களுக்குத் தண்ணீர் வார்த்தறியேன் என்றபடி. இங்ஙனே சில காரியங்கள் செய்திருந்தால் கர்மயோகத்திலே கணக்கடைக்கலாம்; அதற்கு வழியில்லையாயிற்று என்கை.

ஐம்புலன் வெல்லகில்லேன்=செவிவாய் கண் முதலிய இந்திரியங்கள் பட்டிமேயாதபடி நோக்கினேனுகில் ஞானயோகத்திலே சிறிது அடியிட்டதாகக் கணக்கிடலாம்; அதற்கும் வழியில்லையாயிற்று.

கடவனுகிக் காலங்தோறும் பூப்பறித்து ஏத்தகில்லேன்=திருவாராதனத்திற்கு யோக்யதையுள்ள காலங்களிலே புஷ்பங்கள் சேகரித்துமறியேன், ஸமர்ப்பித்துமறியேன். இவை செய்தால் பக்தியோகத்திலே சிறிது அந்வயமுள்ளதாகக் கணக்கிடலாம்; அது தனக்கும் வழியில்லையாயிற்று. கடவனுகி—ஒரு நியமத்தோடே கூடினவனுகி என்றபடி.

ஆகவிப்படி அகிஞ்சநனுயிருக்கச் செய்தேயும், ஏதோ நப்பாசையினுல் அறிவுகெட்டவனுய்க்கொண்டு சக்கரபாணியான எம்பெருமானைத் தேடாநின்றேன்; காண வழி ஏது?

"சக்கரத்தண்ணலையே" என்றவிடத்து நம்பிள்ளையீடு;—"யசோதைப்பிராட்டி கையும் வெண்ணெயுமாகப் பிடித்துக்கொண்டாப்போலே கையும் *நெய்யாராழியுமாகப் பிடித்துக் கொள்ளவாயிற்று இவர் ஆசைப்படுகிறது" என்பதாம். ... .... (௯)

சக்கரத்தண்ணலேயென்று தாழ்ந்துகண்ணீர்ததும்ப *
பக்கம்நோக்கிநின்றலந்தேன் பாவியேன்காண்கின்றிலேன் *
மிக்கஞானமூர்த்தியாய வேதவிளக்கினை * என்
தக்கஞானக்கண்களாலே கண்டுதழுவுவனே. (௰)

| | | | |
|---|---|---|---|
| சக்கரத்து அண்ணலே என்று | கையும் சக்கரமுமான அழகைக்காட்டி என்னை ஈடுபடுத்திக்கொண்டவனே! என்று சொல்லி | தாழ்ந்து | அநுபவம் கிடைக்கப்பெருத க்லேசத்தையடைந்து |
| | | கண்ணீர் ததும்ப | கண்ணீர்மல்க |

பக்கம் நோக்கி நின்று — சுற்றும் பார்த்து நின்று
அலந்தேன் — தளர்ந்தவனான
பாவியேன் — பாவியான நான்
காண்கின்றிலேன் — காணப்பெறுகின்றிலேன்; (காணக்கிடைக்காதவனை மறந்துவிடலாமென்று பார்த்தாலோ)
மிக்க ஞானம் மூர்த்தி ஆய — மிகுந்த ஞானஸ்வரூபனாய்
வேதம் விளக்கி — வேதமாகிற தீபத்தாலே காணப்படுமவனான எம்பெருமானை
என் தக்க — எனக்கேற்ற
ஞானம் கண்களாலே — ஞானமாகிற கண்ணாலே
கண்டு தழுவுவனே — கண்டு தழுவிக்கொண்டேயிருக்கிறேனே! [எப்படி மறக்கமுடியும்?]

* * *—நம்மிடத்தில் ஒரு கைம்முதலுமில்லாமையை நோக்கி எம்பெருமான் நமக்குக் காட்சி தர விரும்பாமலிருப்பது யுக்தமே; அப்படி அவன் இருக்கும்போது அவனை நாம் மறந்து பிழைக்கலாமன்றோ; அப்படி மறக்கவும் முடியாதபடி அப்பெருமான் மாநஸஜ்ஞானத்திற்கு விஷயமாகிக்கொண்டிருக்கிறானே! இதற்கு என்னபண்ணுவேனென்று கிலேசப்படுகிறார்.

கையுந்திருவாழியுமான அழகைக்காட்டி என்னையீடுபடுத்திக்கொண்டவனே! என்று சொல்லித்தரைப்பட்டுக் கண்களில் நீர் பெருகப்பெற்றேன்; எந்தப் பக்கமாக வருகின்றானோ வென்று பக்கந்தோறும் நோக்கினேன்; மஹாபாபியாகையாலே காணப்பெற்றிலேன். காணவிட்டால் மறந்து பிழைக்கலாமே; நெஞ்சில் பிரகாசியாமலிருந்தாலன்றோ மறக்கலாம்; பரிபூர்ணமான ஞானத்தையே வடிவாகவுடையனாய் வேதவேத்யனாயிருக்கிற அப்பெருமானை மறவாமலிருப்பதற்குறுப்பாக எனக்குத்தகுந்தாப்போலே ஒரு ஜ்ஞான த்ருஷ்டியுண்டாகி அத்தாலே கண்டுதழுவும்படியாயேயுள்ளது; மறக்கவும் வழியில்லை, தரிக்கவும் வழியில்லை என்றாராயிற்று.

ஆழ்வார்க்கு ப்ரேமம் ஞானம் என்று இரண்டுண்டு; கண்ணாரக்காணப் பெறாமையாலே ப்ரேமம் க்லேச ஹேதுவாயிற்று; மறந்து பிழைக்கவும் முடியாமையாலே ஞானமும் க்லேச ஹேதுவாயிற்று என்று தளருகிறபடி.

கண்டுதழுவுவனே என்னுமிடம் களித்துக்கூறுவதுபோலத் தோற்றினாலும் பிரகரணத்திற்குச் சேரவேண்டுகையாலே க்லேசோக்தியாகவே பூருவர்கள் வியாக்கியானித்தருளினார்கள்.

இரண்டாமடியில் “அலர்ந்தேன்” என்கிற பாடம் பிழையுடைத்து; ‘அலந்தேன்’ என்றேயிருக்கத்தக்கது. பெரிய திருமொழியில் “அலந்தேன் வந்தடைந்தேன்” என்றார் திருமங்கையாழ்வாரும். அலமந்தேன் என்றவாறு. ... (௧0)

தழுவிநின்றகாதல்தன்னால் தாமரைக்கண்ணன் தன்னை *
குழுவுமாடத்தென்குருகூர் மாறன்சடகோபன் * சொல்
வழுவிலாதவொண்தமிழ்கள் ஆயிரத்துளிப்பத்தும் *
தழுவப்பாடியாடவல்லார் வைகுந்தமேறுவரே. (௧௧)

தழுவி நின்ற — விட்டு நீங்காத
காதல் தன்னால் — (பகவதனுபவத்திலுள்ள) ஆசையினாலே,
தாமரை கண்ணன் தன்னை — செந்தாமரைக்கண்ணனான எம்பெருமானைக்குறித்து
குழுவு மாடம் தென் குருகூர் — மாடங்களையுடைய திருநகரிக்குத் தலைவரான
மாறன் சடகோபன் — ஆழ்வார்
சொல் — அருளிச்செய்த
வழு இலாத — குறையற்ற
ஒண் தமிழ்கள் — அழகிய தமிழ்ப்பாஷையினாலாகிய
ஆயிரத்துள் — ஆயிரம் பாட்டினுள்
இ பத்தும் — இத்திருவாய்மொழியை
தழுவ — கருத்தோடுகூட
பாடி — இசைபாடி
ஆட வல்லார் — களித்துக் கூத்தாடவல்லவர்கள்
வைகுந்தம் ஏறுவர் — திருநாட்டில் ஏறப்பெறுவார்கள்.

* * *—[தழுவிநின்ற.] இத்திருவாய்மொழியைக்கற்று ப்ரேம பரவசராமவர்கள் திருநாட்டிலே சென்று நித்யாநுபவம் பண்ணப்பெறுவர்களென்று பயனுரைத்துத் தலைக் கட்டுகிறார்.

திருத்துழாய் பரிமளத்தோடு கூடவே அங்குரிக்குமாபோலே ஆழ்வார் "அறியாக் காலத்துள்ளே அடிமைக்கணன்பு செய்வித்து" என்றபடியே பகவத் விஷயமான காதலோடு கூடவே அவதரித்தவராதலால் "தழுவிநின்ற காதல் தன்னால்" என்றார். * ஜாயமாநம் ஹி புருஷம் யம் பச்யேத் மதுஸூதந:, ஸாத்விகஸ்ஸ து விஜ்ஞேய: ஸ வை மோக்ஷார்த்தசிந்தக:" என்கிறபடியே எம்பெருமான் தனது செந்தாமரைக் கண்களால் கருவிலே கடாக்ஷித் தருளியே இந்தக் காதலை உண்டுபண்ணினானென்பது தோன்றத் தாமரைக்கண்ணன் தன்னை என்கிறார். "மறக்குமென்று செந்தாமரைக்கண்ணொடும், மறப்பறவென் னுள்ளே மன்னினான்" என்றார் கீழும்.

குழுவுமாடத்தேன்குருகூர் என்றவிடத்திற்கு ஈடு;—"*ஸர்வஞ்ச குசலம் க்ருஹே* என்னுமாபோலே ஆழ்வார்க்கு ஆர்த்தி மிகமிக ஸர்வேச்வரன்வரவு தப்பாது என்று திருநகரி குடிநெருங்கிக் குளிர்ந்து தேறினபடி." என்பது.

இதன் கருத்து யாதெனில்;—பெருமாள் ராவணவதம் செய்தருளித் திருவயோத்யைக்கு மீண்டெழுந்தருளும்போது பரத்வாஜமஹர்ஷி பக்கலிலே போந்து தெண்டனிட்டு "அயோத்தியில் பரதன் முதலிய யாவரும் ஸௌக்கியமாக இருக்கிறார்களா? அவ்விடத்துச் செய்தி ஸ்வாமிக்கு ஏதேனும் தெரியுமோ?" என்று கேட்க. அதற்கு விடை கூறுகின்ற முனிவர் "பங்கதிக்தஸ் து ஜடிலோ பரதஸ் த்வாம் ப்ரதீக்ஷதே. பாதுகே தே புரஸ்க்ருத்ய ஸர்வஞ் ச குசலம் க்ருஹே." என்றார். *கங்குலும் பகலும் கண் துயிலறியாமே கண்ணநீர் கைகளாலிறைத்துச் சேற்றிலே அழுந்திக்கிடக்கிறான் பரதாழ்வான் என்று சொல்லிவிட்டு 'க்ருஹத்தில் எல்லாரும் குசலந்தான்' என்றார் முனிவர். பரதாழ்வான் வாசாமகோசரமாகத் துடித்துக்கொண்டிருக்கும்போது "ஸர்வஞ்ச குசலம் க்ருஹே" என்று சொல்லக்கூடுமோ? என்கிற சங்கைக்குப் பரிஹாரமாக நம்பிள்ளையருளிச் செய்கிற அர்த்தம் பரமபோக்யமானது: 'ஆர்த்தி பொறுக்கவொண்ணாதபடி மிகுந்தவாறே எம்பெருமான் சடக்கெனவந்து முகங்காட்டியே தீருவன்' என்பதை நன்கு உணர்ந்தவர்களாகையாலே பரதாழ்வானுடைய அதிமாத்ரமான ஆர்த்தியைக் கண்டவர்கள் 'ஸ்ரீராமபிரான் அடுத்த க்ஷணத்தில் அவசியம் வந்தேதீருவன்' என்று திண்ணமாக நம்பி வெகு ஸந்தோஷத்துடனே குழுமியிருந்தார்களாம். ஆனது பற்றியே முனிவர் "ஸர்வஞ்ச குசலம் க்ருஹே" என்றார். அதுபோலவே இங்கும் ஆழ்வாருடைய ஆர்த்தியின் கனத்தைக்கண்ட குருகூர்வாழும் நல்லார்கள் 'இப்போது எம்பெருமான் வருகை தப்பாது' என்று தேறிக் குழுமியிருந்தார்களாம்: அகவே குழுவுமாடத் தென்குருகூர் எனப்பட்டது—என்பது இன்சுவை மிக்கபொருள்.

மாறன்—ஸம்ஸாரநிலைக்கு மாறாக இருந்தவர்; அல்லது ஸம்ஸாரத்தை மாற்றினவர். இப்படிப்பட்ட ஆழ்வார் பகவத்குணங்களிலொன்றும் குறையாமே அருளிச்செய்த ஆயிரத்துள் இப்பத்தையும் ஸார்த்தமாகப் பாடியாடவல்லார் வைகுந்தமேறுவர் என்றாராயிற்று (கக)

ஏழாந் திருவாய்மொழி உரை முற்றிற்று.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

---

# நான்காம்பத்து எட்டாந்திருவாய்மொழி—ஏருளுமிறையோனும்.

**உரையவதாரிகை:**—கேட்டாரெல்லாரும் நீராம்படியாகக் கீழ்சதிருவாய்மொழியிலே ஆழ்வார் கூப்பிடச் செய்தேயும் எம்பெருமான் வந்து முகங்காட்டிற்றிலன். அதனால் எம்பெருமான் தம்மை வேண்டாவென்று வெறுத்திருப்பதாக நிச்சயித்தார். அவனுடைய வெறுப்புக்கு இலக்கான இந்த ஆத்மாவும் ஆத்மீயங்களும் நமக்கு ஏதுக்கு? அவனுக்குவேண்டாதவை நமக்குத்தான் வேணுமோவென்று ஆத்மாத்மீயங்களையெல்லாம் உபேக்ஷிக்கிறார் இத்திருவாய்மொழியில்.

ஆழ்வார் ஜநககுலஸுந்தரியோடே யொத்திருப்பர் என்றுயிற்று நம்முதலிகள் அருளிச்செய்திருக்கும்படி. அப்பிராட்டி அசோகவனத்திலிருந்தபோது—*நஹி மே ஜீவிதேநார்த்த: நைவார்த்தைர் ந ச பூஷணை:। வஸந்த்யா ராக்ஷஸீமத்யே விநா ராமம் மஹாரதம்* நஹி மே ஜீவிதேநார்த்த: நைவார்த்தைர் ந ச பூஷணை:, வஸந்த்யா ராக்ஷஸீமத்யே விநா ராமம் மஹாரதம்." என்று ஆத்மாத்மீயங்களையெல்லாம் வெறுத்தாள். பெருமாள் விரும்பாதே ராக்ஷஸிகள் நடுவே சிறையிருக்கின்ற வெனக்கு உயிர் உடைமை முதலியவற்றால் என்னபலன்? என்றாள். அந்த நிலைமைதானே இப்போது ஆழ்வார்க்கு முண்டாயது.

இத்திருவாய்மொழியைப் பரிபூர்ணமாகத் தமது ஸ்தோத்ரரத்நத்தில்—"ந தேஹம் ந ப்ராணாந் ந ச ஸுகமசேஷாபிலஷிதம் ந சாத்மாநம் நாந்யத் கிமபி தவ சேஷத்வவிபவாத், பஹிர்பூதம் நாத க்ஷணமபி ஸஹே யாது சததா விநாசம் தத்ஸத்யம் மதுமதந விஜ்ஞாபநமிதம்" ந தேஹம் ந ப்ராணாந் ந ச ஸுகமசேஷாபிலஷிதம் ந சாத்மாநம் நாந்யத் கிமபிதவ சேஷத்வவிபவாத். பஹிர்ப்பூதம் நாத! க்ஷணமபி ஸஹே, யாது சததாவிநாசம் தத்ஸத்யம் மதுமதந! விஜ்ஞாபநமிதம்." என்றருளிச்செய்த ச்லோகம் இங்கு அநுஸந்திக்கத்தக்கது. (இதன் கருத்து:—மதுஸூதநனே! திருமுன்பே ஸத்யமாக ஒரு விண்ணப்பம் செய்கிறேன், கேட்டருளவேணும்: அஃது என்னென்னில்; "சரீரமாத்யம் கலு தர்மஸாதநம்" என்கிறபடியே தர்மாநுஷ்டானங்களுக்கு முதல் ஸாதனமான சரீரமும் அதற்குத் தாரகங்களான பிராணன்களும், பிராணிகளெல்லாரும் மிகவிரும்பும் ஸுகமும், இவை யெல்லாவற்றிற்கும் ஆச்ரயமாக நிற்கும் ஆத்மாவும், மற்றும் புத்ரமித்ரகளத்ராதிகள் எதுவாகிலும் உன்னுடைய சேஷத்வத்திற்கு உபயுக்தமாகில் வேண்டும்; அதற்குப் புறம்பாகில் வேண்டா; இவையெல்லாம் உருமாய்ந்துபோகட்டும், இது கழுத்துக்குமேலே சொல்லுகிற வார்த்தையன்று; இது பொய் சொன்னதாகில் உன்னிடத்தில் மது என்னும் அசுரன் பட்டபாடு படுவேனத்தனை—என்பதாம்.)

பகவத்கைங்கர்யத்திற்கு உறுப்பல்லாதவை த்யாஜ்யம் என்கிற சாஸ்த்ரார்த்தம் வெளியிடப்பட்டதாகும்.

ஆண்டாளும் "கொள்ளும் பயனொன்றில்லாத கொங்கை தன்னைக் கிழங்கோடும், அள்ளிப்பறித்திட்டு அவன் மார்விலெறிந்து என்னழலைத் தீர்வேனே" என்றருளிச்செய்தது இங்கே நினைக்கத்தகும்.

இந்தத்திருவாய்மொழி ஆழ்வார் தாமான தன்மையிலே நின்று அருளிச்செய்வதன்று; நாயகீ ஸமாதியாலே அருளிச்செய்ததென்னுமிடம் "மணிமாமை குறைவிலமே" "மேகலை

யால் குறைவிலமே" "வரிவளையால் குறைவிலமே" என்பவற்றால் விளங்கும். திருமங்கையாழ்வாரும் பெரிய திருமடலில் "கன்னவிலுங் காட்டகத்தோர் வல்லிக்கடிமலரின் நன்னறுவாசம் மற்றாரானு மெய்தாமே மன்னும் வறுநிலத்து வாளாங்குகுத்ததுபோல், என்னுடைய பெண்மையும் என்னலனு மென்முலையும், மன்னுமலர் மங்கைமைந்தன், கணபுரத்துப் பொன்மலைபோல் நின்றவன்றன் பொன்னகலம் தோயாவேல், என்னிவைதான் வாளாவெனக்கே பொறையாகி, முன்னிருந்து மூக்கின்று மூவாமைக்காப்பதோர் மன்னுமருந்தறிவீரில்லையே" என்றருளிச்செய்தது காண்க.

ஏறாளுமிறையோனும் திசைமுகனும்திருமகளும் *
கூறாளும்தனியுடம்பன் குலங்குலமாஅசுரர்களை *
நீறாகும்படியாக நிருமித்துப்படைதொட்ட *
மாறாளன்கவராத மணிமாமைகுறைவிலமே. (க)

| | |
|---|---|
| ஏறு ஆளும் இறையோனும் | விருஷபவாஹனனான சிவபிரானும் |
| திசைமுகனும் | நான்முகனும் |
| திருமகளும் | பெரியபிராட்டியாரும் |
| கூறு ஆளும் | 'இன்ன இடம் இன்னாருடையது' என்று பங்கிட்டுக் கொண்டு வஸிக்கப்பெற்ற |
| தனி உடம்பன் | விலக்ஷணமான திருமேனியையுடையவனும், |
| அசுரர்களை | அசுரர்களை |
| குலம் குலம் ஆ | கூட்டங்கூட்டமாக |

| | |
|---|---|
| நீறு ஆகும்படி ஆக | சுடுநீறாகி யொழியும்படியாக |
| நிருமித்து | ஸங்கல்பித்து (அவ்வளவேயன்றிக்கே) |
| படை தொட்ட | ஆயுதங்கொண்டும் காரியஞ்செய்த |
| மாறு ஆளன் | எதிர்த்தலையுடையனுமான எம்பெருமான் |
| கவராத | விரும்பாத |
| மணி மாமை | அழகிய நிறத்தில் |
| குறைவு இலம் | அபேக்ஷையுடையோமல்லோம். |

* * *—[ஏறாளுமிறையோனும்] ஸௌசீல்யமே வடிவெடுத்த எம்பெருமான் விரும்பாத அழகிய நிறம் எனக்கு ஏதுக்கு? என்கிறாள். ஆரம்பிக்கும்போதே "ஏறாளுமிறையோன் கூறாளுந் தனியுடம்பன்" என்றது ஒரு தாமஸ தெய்வத்துக்கு எளிதான திருமேனி எனக்கு அரிதாவதே! என்ற வருத்தத்தைக் காட்டுமென்க. "வேதாத்மா விஹகேச்வர:" என்கிறபடியே வேதஸ்வரூபியான பக்ஷிராஜனை வாஹநமாகக்கொண்ட எம்பெருமான்முன்னே மூடஜந்துவானவொரு எருதை வாஹநமாகக்கொண்டு திரிகின்ற உருத்திரனும், நான்முகனும், ஸ்ரீ மஹாலக்ஷ்மியும் ஆகிய இவர்கள் கூறிட்டு ஆளும்படி அத்விதீயமான திருமேனி படைத்த பெருமான் என்றது—அவனுடைய ஸௌசீல்யமென்னும் மஹாகுணத்தை யநுபவித்துப் பேசினபடி. "சிவனொடு பிரமன் வண்திருமடந்தை சேர்திருவாகம் எம்மாவியீரும்" என்கிறார் மேல் ஒன்பதாம்பத்திலும். அங்கு உரைத்ததெல்லாம் இங்கும் அறியத்தக்கது.

குலங்குலமா அசுரர்களை நீறாகும்படியாக நிருமித்துப் படைதொட்ட=சீலகுணம் சொல்லிற்று கீழ்; வீர்யகுணம் சொல்லுகிறது இதனால். தான் நினைத்தால் விரோதிவர்க்கங்களைக் கிழங்கறக்களைந்து தொலைப்பதில் ஓர் அருமையுண்டோ? சக்தியுக்தன் உபேக்ஷித்தால் உயிர் தரிக்க வழியுண்டோவென்கை.

நிருமித்து என்றது—ஸங்கல்பித்து என்றபடி. ஜகத்ஸ்ருஷ்டி முதலிய அரிய பெரிய தொழில்களையெல்லாம் ஸங்கல்ப மாத்ரத்தாலே செய்து போருகின்றவன் பாகவதவிரோதிகளான அசுரர்களை ஸங்கல்ப மாத்ரத்தாலே தொலைத்திடாமல் படைதொட்டு நீறாக்குகின்றனனும்; இஃது என்? என்னில்; "ஈச்வரன் அவதரித்துப் பண்ணின ஆனைத்தொழில்களெல்லாம் பாகவதாபசாரம் பொறாமையென்று ஜீயரருளிச்செய்வர்" என்ற ஸ்ரீவசந பூஷண திவ்ய

ஸூக்தி அறியத்தக்கது. இங்கே மணவாளமாமுனிகளின் வியாக்கியான ஸ்ரீஸூக்தி வருமாறு:—"ஸங்கல்பமாத்ரத்தாலே ஸர்வத்தையும் நிர்வஹிக்கவல்ல ஸர்வசக்தியான ஸர்வேச்வரன், தன்னையழியமாறி இதர ஸஜாதீயனாய் அவதரித்துக் கைதொடனாய் நின்று செய்த ஹிரண்யராவணாதி நிரஸநரூபங்களான அதிமாநுஷ சேஷ்டிதங்களெல்லாம் ப்ரஹ்லாதன் மஹர்ஷிகள் தொடக்கமான அவ்வோபாகவத விஷயங்களில் அவ்வவர் பண்ணின அபசாரம் ஸஹியாமையாலே யென்று ஆப்ததமரான நஞ்சீயரருளிச் செய்வரென்கை"

மாறாளன் = ஆச்ரிதர்களின் விரோதிகளைத் தன் விரோதிகளாகக்கொண்டு அவர்களோடு மாறுபட்டிருப்பவன் என்பது பரமதாற்பரியம்.

கவராதமணிமாமை — அப்படிப்பட்ட பெருமான் ஓடிவந்து மேல்விழுந்தாலன்றோ இவ்வழகிய நிறம் எனக்கு உத்யேச்யமாவது; அல்லாதபோது இது எனக்கு ஹேயமேயாகும்; இந்த நிறமில்லையென்று நான் அழுகிறேனோவென்கை.

குறைவு என்பதற்கு லக்ஷணையால் அபேக்ஷிதம் என்று பொருளாகும். குறைவிலம்— அபேக்ஷையுடையோமல்லோம்; வேண்டியதில்லை என்றவாறு. ....

மணிமாமைகுறைவில்லா மலர்மாதருறைமார்பன் *
அணிமானத்தடவரைத்தோள் அடலாழித்தடக்கையன் *
பணிமானம்பிழையாமே அடியேனைப்பணிகொண்ட *
மணிமாயன்கவராத மடநெஞ்சால்குறைவிலமே. (உ)

| | | | |
|---|---|---|---|
| மணி மாமை | அழகிய நிறம்நிரம்பி யிருக்கப் பெற்ற | பணி மானம் பிழையாமே | கைங்கர்ய வ்ருத்திகள் தப்பாதபடி |
| மலர் மாதர் உறை மார்பன் | பூமகளான பெரியபிராட்டியார் நித்யவாஸம் பண்ணப்பெற்ற திருமார்பையுடையவனும் | அடியேனை | அடியேனை |
| | | பணிகொண்ட | கிங்கரனாக ஆக்கிக்கொண்டவனும் |
| அணிமானம் தட வரை தோள் | அழகியதாய்ப் பெருத்து உருண்டு மலைபோன்றுள்ள திருத்தோள்களையுடையவனும் | மணி மாயன் | நீலமணிவண்ணனுமான எம்பெருமான் |
| | | கவராத | விரும்பாத |
| அடல் ஆழி தடகையன் | தீக்ஷ்ணமான திருவாழியைப் பெரிய திருக்கையிலேயுடையவனும் | மட நெஞ்சால் குறைவு இலம் | விதேயமான நெஞ்சில் அபேக்ஷையுடையோமல்லோம். |

* * * [மணிமாமை] பிராட்டியோடே கூடியிருக்குமழகைக்காட்டி என்னையடிமை கொண்டவன் விரும்பாத நெஞ்சால் ஒரு காரியமில்லையென்கிறாள். குற்றங்களையும் நற்றமாக உபபாதித்து அருள்புரிவிக்கின்ற பெரியபிராட்டியாரும் கூடவிருக்கச்செய்தே என்னை உபேக்ஷித்திருக்குமாகில் என்னுடைமையால் எனக்குத்தான் ப்ரயோஜனம் என்? என்கிறாள். "மணிமாமை குறைவிலமே" என்று நான் வெறுத்ததுபோலே வெறுக்கவேண்டாமல் நித்ய ஸம்ச்லேஷம் பெற்றிருக்கிறவளும், புஷ்பத்தில் பரிமளத்தையே வடிவாக வகுத்தாற்போலே ஸௌகுமார்யத்தில் சிறந்திருக்கிறவளுமான பெரியபிராட்டி நித்யவாஸம் பண்ணப்பெற்ற திருமார்பையுடையவனும், அழகிய பருத்த திருத்தோள்களையுடையவனும், பிராட்டியும் தானுமான சேர்த்திக்கு அஸ்தானே பயசங்கைபண்ணி மங்களாசாஸநபரனாயிருக்கும் திருவாழியாழ்வானைக் கையிலேந்தினவனும், இளையபெருமாளை அடிமைகொண்டாப்போலே ஏற்கனவே என்னையுமடிமைகொண்டவனும், நீலமணிபோன்றழகிய வடிவுபடைத்தவனுமான பெருமான் விரும்பாத நெஞ்சு எனக்கும்வேண்டா.

பணிமானம் பிழையாமே என்றவிடத்து ஒரு ஐதிஹ்யம்:—எம்பெருமானார் மடத்தில் ஸ்ரீ வைஷ்ணவர்கள் அமுது செய்யாநிற்க, அவர்களுக்குத் தீர்த்தம் பரிமாறுகின்ற கிடாம்பி யாச்சான் நேரேநின்று பரிமாறாமல் ஒரு பக்கமாயிருந்து பரிமாறினாராம்; அதைக் கடாக்ஷித்த எம்பெருமானார் ஓடிவந்து முதுகிலேயடித்து 'உடோ, இப்படியா பரிமாறுவது? நேரேநின்றன்றோ பரிமாறவேணும்' என்று சிக்ஷிக்க, அப்போது ஆச்சான் "பணிமானம் பிழையாமே அடியேனைப் பணிகொண்டருளிற்றே!" என்று உகந்தாராம்.

ஆழ்வார் தாம் செய்துபோருகிற வாசிககைங்கர்யத்தைப்பற்ற "பணிமானம் பிழையாமே யடியேனைப்பணிகொண்ட" என்கிறாரென்றுணர்க.

"கவராத மடநெஞ்சால் குறைவிலமே" என்றவிடத்தில் நஞ்சீயர் அருளிச்செய்வராம்; *கோவைவாயாளென்கிற திருவாய்மொழியில் 'பூசுஞ்சாந்து என்னெஞ்சமே' என்னும்படி அப்போது அப்படிவிரும்பினவன் இன்று இப்படி உபேக்ஷிக்கையாலே, நாயகன் தாமதித்து வந்தானென்று அவன் முன்னிலையில் சாந்தைப் பரணியோடே உடைப்பாரைப்போலே என்னெஞ்சு எனக்கு வேண்டாவென்கிறாள் என்று. .... ... (௨)

மடநெஞ்சால்குறைவில்லா மகள்தாய்செய்தோருபேய்ச்சி *
விடநஞ்சமுலைசுவைத்த மிகுஞானச்சிறுகுழவி *
படநாகத்தணைக்கிடந்த பருவரைத்தோள்பரம்புருடன் *
நெடுமாயன்கவராத நிறைவினால்குறைவிலமே. (௩)

| | | | |
|---|---|---|---|
| மடநெஞ்சால் குறைவு இல்லா | நெஞ்சில் நெகிழ்ச்சியைப் பரிபூர்ணமாகக்கொண்ட | படம் நாகம் அணை கிடந்த | படமெடுத்த நாகமாகிற படுக்கையிலே சயனிப்பவனும் |
| தாய் மகள் செய்த | யசோதையாகிய தாயாகத் தன்னையாக்கிக்கொண்ட | பரு வரை தோள் | பெரியமலைபோலே வளர்ந்த தோள்களையுடையவனும் |
| ஒரு பேய்ச்சி | பூதனையென்கிறவொரு பேய்ச்சியினுடைய | பரம்புருடன் | புருஷோத்தமனென்கை ப்ரஸித்தி பெற்றவனும் |
| விடம் நஞ்சம் | கொடிய விஷம்பொருந்திய | நெடு மாயன் | எல்லைகடந்த ஆச்சர்யகுண சேஷ்டிதங்களை யுடையவனுமான எம்பெருமான் |
| முலை | முலையை | | |
| சுவைத்த | உறிஞ்சியுண்டவனும் | கவராத | விரும்பாத |
| மிகு ஞானம் சிறு குழவி | மிக்க ஞானத்தையுடைய சிறு குழந்தையானவனும் | நிறைவினால் குறைவு இலம் | அடக்கத்தில் அபேக்ஷையுடையோமல்லோம். |

* * *—[மடநெஞ்சால்] கண்ணபிரான் விரும்பாத அடக்கம் எனக்கு வேண்டாவென்கிறாள். பூதனையென்னும் ராக்ஷஸி கம்ஸனேவுதலால் நல்ல பெண்ணுருவத்தோடு இரவிலே திருவாய்ப்பாடிக்கு வந்து அங்குத்தூங்கிக்கொண்டிருந்த ஸ்ரீக்ருஷ்ண சிசுவையெடுத்துத் தனது நஞ்சு தீற்றிய முலையை உண்ணக்கொடுத்துக் கொல்லமுயல, பகவானான குழந்தை அவ்வரக்கியின் தனங்களைக் கைகளால் இறுகப்பிடித்துப் பாலுண்ணுகிற பாவனையிலே அவளுயிரையும் உறிஞ்சி அவளை முடித்திட்டனன் என்கிறவரலாறு முன்னடிகட்கு அறியத்தக்கது.

ஆஸுரப்ரக்ருதியான பூதனைக்கு "மடநெஞ்சால் குறைவில்லா" என்று விசேஷணமிட்டது என்? என்னில்; அப்பூதனை தன்னுருவத்தை மறைத்து யசோதைப் பிராட்டிபோல் பாவனைகாட்டி வந்தாளாகையாலே தாய்போலப் பரிவை ஏறிட்டுக்கொண்டு வந்தாளென்றவாறு. "பெற்றதாய்போல் வந்தபேய்ச்சி பெருமுலையூடு உயிரை வற்றவாங்கியுண்டவாயான்" என்றார் திருமங்கையாழ்வாரும். பூதத்தாழ்வாரும் "மகனொக்கக்கொண்டெடுத்தாள் மாண்பாய

கொங்கை, அகளூரவுண்பனென்றுண்டு, மகனைத்தாய் தேறுதவண்ணம் திருத்தினாய்'' என்றார். (இதன் கருத்து:—நஞ்சு தீற்றிய முலையைக் கொடுத்து உன்னைக் கொல்லவந்த பேய்ச்சியானவள் மெய்யே தாய்போன்று பரிவுகாட்டி உன்னை வாரி யெடுத்தணைத்து முலைகொடுத்தாள்; நீயும் மெய்யே குழந்தையாகவே பாவனை காட்டி அம்முலையைச் சுவைத்துண்பவன்போல அவளுயிரையே உறிஞ்சியுண்டாய். அதுமுதலாக உனது மெய்த்தாயான யசோதைப்பிராட்டிக்கு உன்னிடத்தில் நம்பிக்கையுண்டாக இடமில்லாமலே போயிற்று; 'இவனை நாம் சிறு குழந்தையென்று நம்பவே கூடாது' என்று எப்போதும் துணுக்குத்துணுக்கென்று அவள் அஞ்சியிருக்கும் வண்ணமே செய்துவிட்டாய் என்றவாறு.)

செய்தொரு என்றவிடத்தில் தொகுத்தல் விகாரம்; 'செய்தவொரு' எனவிரியும்.

விடநஞ்ச முலைசுவைத்த=விஷம் என்றும் நஞ்சம் என்றும் பர்யாயமாயிருக்க, இரண்டு சொற்களையும் சேர்த்துச்சொன்னதனால் விஷத்தின் கொடுமை காட்டப்பட்டதாகும். நாட்டில் விஷங்களெல்லாம் அம்ருதம் என்னலாம்படியான விஷம் என்பர்.

மிகுஞானச் சிறுகுழவி=பாகவதர்கள் சிறுமாமனிசர் என்று பெயர் பெற்றதுபோலப் பகவானும் மிகுஞானச் சிறுகுழவி யென்று பெயர் பெற்றானாயிற்று. ஸர்வஜ்ஞசிசு என்றபடி. வயிறுப்பாலுண்டபடியாலே குழந்தைக்குப் படுக்கை தேட்டமாயிற்று; படுத்துக்கொண்டது என்கிறார்போலும் படநாகத்தணைக்கிடந்த என்பதனால்.

நிறைவினால் குறைவிலம்=நிறைவு என்பது பூர்த்தி; இங்கு ஸ்த்ரீத்வபூர்த்தியைச் சொல்லுகிறது. அதாவது அடக்கம். எம்பெருமானாகவே வந்து திருவுள்ளம் பற்றுவனென்று எண்ணி இதுவரை அடக்கத்தோடிருந்தேன்; இனி அதை விட்டுத்தொலைக்கவேண்டியதேபோலும் என்றவாறு. ... .... .... (௩)

நிறைவினால்குறைவில்லா நெடும்பணைத்தோள்மடப்பின்னை *
பொறையினால்முலையணைவான் பொருவிடையேழடர்த்துகந்த *
கறையினார்துவருடுக்கை கடையாவின்கழிகோல்கை *
சறையினார்கவராத தளிர்நிறத்தால்குறைவிலமே. (௪)

| | |
|---|---|
| நிறைவினால் குறைவு இல்லா | குறையற்ற ஸ்த்ரீத்வ பூர்த்தியையுடையவளும் |
| நெடு பணை தோள் | நீண்டு பணைத்ததோள்களையுடையவளும் |
| மடம் | அறிந்தும் அறியாமையாகிற மடப்பம் பொருந்தியவளுமான |
| பின்னை | நப்பின்னையினுடைய |
| முலை அணைவான் | திருமுலைத்தடத்தோடு சேருகைக்காக [மணப்பதற்காக] |
| பொறையினால் | வருத்தங்களைப் பொறுத்திருந்து |
| பொரு விடை ஏழ் அடர்த்து உகந்த | கொடிய விருஷபங்களேழையும் நெரித்து மகிழ்ந்தவனும் |

| | |
|---|---|
| கறையின் ஆர் துவர் உடுக்கை | (நாவல் முதலிய காட்டுப்பழங்களின்) கறைமிகுந்த துவர்நிறமான வஸ்த்ரத்தையும் |
| கடையா | பால்கறக்கும் மூங்கிற்குழாயையும் |
| கழிகோல் | வீசுகோலையும் |
| கை | கையிலேஉடையவனும் |
| சறையினார் | தன்உடம்பைப்பேணுதவனுமான எம்பெருமான் |
| கவராத | விரும்பாத |
| தளிர்நிறத்தால் குறைவு இலம் | தளிர்போலே செவ்விதான நிறத்தில் விருப்பமுடையோமல்லோம் |

* * *- -[நிறைவினால்.] நப்பின்னைப் பிராட்டியைப் பெறுதற்காக எருதேழடர்த்த பெருமான் விரும்பாத செவ்வியநிறம் எனக்கு ஏதுக்கென்கிறாள். கும்பனென்னும் இடையர் தலைவனது மகளும், நீளாதேவியின் அம்ஸமாகப் பிறந்ததனால் நீளா என்ற பெயரால் வழங்கப்பட்டு வருமவளுமான நப்பின்னைப் பிராட்டியை மணஞ்செய்து கொள்ளுதற்காக அவள்தந்தை கன்யாசுல்கமாகக் குறித்தபடி யார்க்கும் அடங்காத அஸுராவேசம்பெற்ற ஏழு எருதுகளையும் கண்ணபிரான் ஏழுதிருவுருக்கொண்டு சென்று வலியடக்கி அவளை மணஞ்செய்து கொண்டானென்றவரலாறு முன்னடிகட்கு அறியத்தக்கது.

போறையினால் = நப்பின்னையை எப்படியாவது பெற்றுவிடவேணுமென்கிற ஆசையினால், பொறுக்கவொண்ணாத வ்யஸநங்களையும் பொறுத்துக்கொண்டமை தெரிவித்தவாறு. "எருதுகளின் கொம்பாலும் குளம்பாலும் நெருக்குண்டவித்தை அவள் முலையாலே பிறந்த விமர்த்தமாக நினைத்திருந்தான்" என்ற ஈட்டு ஸ்ரீஸூக்தியின் அழகு காண்க.

பெரியதிருமொழியில் "மின்னினன்ன நுண்மருங்குல் வேயேய்தடந்தோள் மெல்லியற்கா, மன்னு சினத்த மழவிடைகள் ஏழன்றடர்த்த மாலதிடம்" என்றவிடத்து வியாக்கியானத்தில்—"கருமாறிபாய்ந்தும் அணையவேண்டுமாய்த்து நப்பின்னைப் பிராட்டியின் வடிவழகு" என்றருளிச் செய்ததும் இங்கு ஸ்மரிக்கத்தக்கது. கருமாறிபாய்த லென்பது, கச்சிமாநகரில் காமாக்ஷியம்மனாலயத்தில் குளத்திலே நாட்டப்பட்டிருந்த மிகக்கூர்மையான இரண்டு சூலங்களிடையே உயரத்தில் நின்றும் குதிப்பதாம். பண்டைக்காலத்தில் ஏதேனும் இஷ்டஸித்தி பெறவேண்டுவார் இவ்வருந்தொழிலை வெகு சாதுர்யமாகச்செய்து அபாயமொன்றுமின்றியே உயிர்தப்பி இஷ்டஸித்தி பெறுமவர்கள் மிகச்சிலரேயாவர். மிகக்கடினமான இக்காரியத்திற்குத் துணிந்தார்களென்றால் இதனால், அவர்கள் பெறவிரும்பிய வஸ்து மிகச்சிறந்ததென்பது விளங்குமன்றோ. அப்படியே நப்பின்னை திருமேனியின் சிறப்பை விளக்கவந்ததாகும் இவ்வாக்கியம்.

கறையினார் துவருடுக்கை இத்யாதி. "ஆநிரைமேய்க்க நீ போதி அருமருந்தாவதறியாய், கானகமெல்லாந் திரிந்து உன் கரிய திருமேனிவாட" என்கிறபடியே ஸ்ரீகோபாலக்ருஷ்ணன் காடுகளிலே திரியுங்கால் கொள்ளுங் கோலம் இவ்வடியில் வெகு அழகாக வருணிக்கப்படுகிறது. பலபல காட்டுப்பழங்களைப் பறித்துத் துணியிலே கட்டிக்கொண்டு தின்பனாதலால் கறையினார்துவருடுக்கை எனப்பட்டது. இங்கே ஈட்டு ஸ்ரீஸூக்திகாண்மின்;— "இடையர் காட்டுக்குப் போம்போது முள்கிழியாமைக்கு உடுக்கும் உடைத் தோலைச்சொல்லுகிறது. ........காட்டில் பழங்களைப் பறித்திடுகையாலே கறைமிக்கிருக்கும்; அத்தாலே கறைமிக்க துவராயிற்று உடுக்கை."

கடையாவின் கழிகோல் — கடையாவோடு சேர்ந்த கழிகோல் என்றபடியாய், கடையாவும் கழிகோலும் என்றதாம். பால் கறப்பதற்குக் கொள்ளும் மூங்கிற் குழாய்ப்பாத்திரம் கடையா எனப்பெயர் பெறும். கழிகோல்— ஸ்வாதீனப்படாத பசுக்களை நியமிப்பதற்காக வைத்துக்கொள்ளும் கோல் அன்றிக்கே, முன்னணைக்கன்று பசுக்களோடே போனால் முலையுண்ணாமைக்கு, கொறுக்கோலென்று அதன் மூஞ்சியிலே கட்டிவிடுவர்கள்; அதைச் சொன்னதாகவுமாம். தங்களுக்கென்று ஓர் இருப்பிடமில்லாத ஸந்நியாஸிகள் தங்களுடைய பிக்ஷாபாத்திரமான சிக்கம் முதலானவற்றைக் கையோடே கொண்டிருக்குமாபோலே இடைச்சாதியில் மெய்ப்பாடனான கண்ணபிரான் கடையாவும் கழிகோலும் கையிலேகொண்டு திரிவானாயிற்று.

**சறையினார்** = இடையர்கள் அரையிலே கட்டிக்கொள்வதொருமணியுண்டு; சறைமணி யென்று அதற்குப்பெயர். "இடையர் அரையிலே கோத்துக்கட்டி முன்னே போகாநின்றால் அந்த த்வனிவழியே பசுக்களெல்லாம் ஓடிவரும்படியாயிருப்பதொன்று." என்கிற ஈட்டு ஸ்ரீஸூக்தியும் காண்க. அந்த மணியையுடையவன் என்கை. அன்றிக்கே, சறை என்று தாழ்வு; இடக் கை வலக்கையறியப் பெருமே தாழ்ந்த இடைக்குலத்திலே பிறந்தவன் என்றதாகவுமாம். அன்றிக்கே, சறையென்று சருப்பியிருக்கையாய், உடம்பைப் பேணாதிருக்கிறவன் என்றதாகவுமாம். இங்கே ஈட்டு ஸ்ரீஸூக்தி காண்மின்;—"அல்லாத இடையர் விஷயஸங்க்ரமணங்களுக்கு உடம்பிருக்கத் தலை குளித்தல், உடம்பிலே துளிநீர் ஏற்றுக்கொள்ளுதல் செய்வர்களாகில், இவனுக்கு அது செய்யவும் அவஸரமற்றிருக்குமாயிற்று பசுக்களின் பின்னே திரிகையாலே. ரக்ஷ்யவர்க்கத்தினுடைய ரக்ஷணத்துக்காகத் தன்னைப் பேணாத அவ்வடிவை அணைக்கைக்காயிற்று இவள் ஆசைப்படுகிறது."

ஸ்ரீராமாயண—அயோத்யா காண்டத்தில், பட்டாபிஷேகார்த்தமான சில நியமங்களோடே கூடியிருக்கின்ற ஸ்ரீராமபிரானைக் குறித்துப் பிராட்டியருளிச்செய்ததான "தீக்ஷிதம் [illegible]— தீக்ஷிதம் வ்ரதஸம்பந்நம் வராஜிநதரம் சுசிம், குரங்கச்ருங்கபாணிஞ் ச பச்யந்தீ த்வா பஜாம்யஹம்." என்கிற ச்லோகத்தை நம்பிள்ளை இங்கு ஈட்டில் வியாக்கியானித்தருளுமழகு வாசாமகோசரம். ரஸிகர்கள் விரும்பி நோக்கத்தக்கது. ... .... ... (ச)

தளிர்நிறத்தால்குறைவில்லாத் தனிச்சிறையில்விளப்புற்ற *
கிளிமொழியாள்காரணமாக் கிளரரக்கன்நகரெரித்த *
களிமலர்த்துழாயலங்கல் கமழ்முடியன்கடல்ஞாலத்து *
அளிமிக்கான்கவராத அறிவினால்குறைவிலமே. (ரு)

| | |
|---|---|
| தளிர் நிறத்தால் குறைவு இல்லா | தளிர்போன்றழகிய நிறத்தால் பரிபூர்ணையாய் |
| தனி சிறையில் விளப்புற்ற | தனிச்சிறையிருந்ததனால்ப்ரஸித்தி பெற்றவளாய் |
| கிளி மொழியாள் காரணம் ஆ | கிளியினதுபோன்ற இனிய மொழியையுடையளான ஸீதா பிராட்டிநிமித்தமாக |
| கிளர் அரக்கன் நகர் எரித்த | செருக்கனை இராவணனுடைய பட்டணத்தை நெருப்புக்கு இரையாக்கினவனும் |
| களி மலர் துழாய் அலங்கல் கமழ் முடியன் | தேனையுடைய மலரோடுகூடின திருத்துழாய் மாலையாலே பரிமளிக்கின்ற திருமுடியையுடையவனும் |
| கடல் ஞாலத்து | கடல்சூழ்ந்த மண்ணுலகில் |
| அளிமிக்கான் | மிகுந்த அன்பையுடையவனுமான எம்பெருமான் |
| கவராத | விரும்பாத |
| அறிவினால் குறைவு இலம் | அறிவில் அபேக்ஷையுடையோமல்லோம். |

* * *—[தளிர்நிறத்தால்] இராமபிரானுடைய சேஷத்வத்திற்கு உறுப்பல்லாத அறிவு எனக்கு வேண்டாவென்கிறாள். ஸீதாபிராட்டியைக் குறிக்கவேண்டுமிவ்விடத்தில் தனிச்சிறையில் விளப்புற்ற என்றருளிச்செய்தது அப்பிராட்டியினுடைய ஒப்புயர்வற்ற பிரபாவாதிசயத்தை வெளியிடுதற்கேயாம். தேவதேவ திவ்யமஹிஷியான தன் பெருமையையும் சிறையிருப்பின் தண்மையையும் பாராதே, தேவஸ்த்ரீகளின் சிறையை விடுவிக்கைக்காகப் பிராட்டி தான் சிறை யிருந்தது கருணையின் மிகுதியாலாகுமத்தனை. குழந்தை கிணற்றில் விழுந்தால் உடன் குதித்தெடுக்கும் தாயைப்போலே, இச்சேதநர் விழுந்த ஸம்ஸாரத்திலே தானுமொக்க வந்து பிறந்து இவர்கள் பட்டதையெல்லாம் தானும் பட்டு ரக்ஷித்தருளுகையாலே நிருபாதிகமான மாத்ருத்வமும் வாத்ஸல்யமும் இச்சிறையிருப்பினால் விளங்குமென்பர். ஆச்ரிதரான தேவர்களுடைய ஸ்த்ரீகளின் சிறையை விடுவிக்கைக்காகத்தன் அநுக்ரஹத்தாலே தானே

வலியச் செய்துகொண்டதாகையாலே பிராட்டிக்குச் சிறையிருப்பு ஏற்றத்திற்கு உறுப்பாயித்தனே. உலகத்தவர்கட்குக் கர்ம நிபந்தனமாக நேர்கின்ற சிறையிருப்பே ஹேயமாகும். பிள்ளை லோகாசார்யரும் ஸ்ரீ வசநபூஷணத்தில் "இதிஹாஸ ச்ரேஷ்டமான ஸ்ரீராமாயணத்தால் சிறையிருந்தவளேற்றம் சொல்லுகிறது" என்றருளிச்செய்தது இவ்வாழ்வார் பாசுரத்தை அடியொற்றியேயாம்.

விளப்புற்ற என்றது, ப்ரஸித்திபெற்ற என்றபடி. பிராட்டியை இலங்கையிற் கண்டு பெருமாளிடம் சென்ற அனுமன் "விற்பெருந்தடந்தோள் வீர! வீங்குநீரிலங்கை வெற்பில், நற்பெருந்தவத்தளாய நங்கையைக் கண்டேனல்லேன், இற்பிறப்பென்பதொன்றும் இரும்பொறை யென்பதொன்றும் கற்பெனப்படுவதொன்றுங் களிநடம் புரியக்கண்டேன்" (கம்பராமாயணம்) என்றனன். இப்படிப்பட்ட பலவகை ப்ரஸித்திகள் இங்கு விவக்ஷிதம். "மதுரா மதுராலாபா" என்று ஸ்ரீராமபிரானும் வாய்வெருவும்படியான பேச்சினிமைபெற்றவளாதலால் கிளிமொழியாள் எனப்பட்டது.

[நகரேரித்த—கமழ்முடியன்] இராவணனைக் கொன்று லங்கைச்வர்யத்தை விபீஷணனுக்காக்கினபின் தன்னுடைய முடிதரிக்கப்பெற்றதுபோலும். "அபிஷிச்ய ச லங்காயாம் ராக்ஷஸேந்த்ரம் விபீஷணம்। க்ருதக்ருத்யஸ் ததா ராமோ விஜ்வர: ப்ரமுமோத ஹ = அபிஷிச்ய ச லங்காயாம் ராக்ஷஸேந்த்ரம் விபீஷணம்—க்ருதக்ருத்யஸ் ததா ராமோ விஜ்வர: ப்ரமுமோதஹ." என்ற வான்மீகி வசனமுங் காண்க. அடியவர் முடிசூடப்பெறுவது தன் பேறாயிருக்கை.

கடல் ஞாலத்து அளிமிக்கான் = இந்த ஸம்ஸார மண்டலத்திலே மிகுந்த அருளையுடையவன் என்கை. பரமபதவாஸத்திற்காட்டிலும் இந்நிலவுலகில் வஸிப்பதே எம்பெருமானுக்கு மிகவும் ப்ரியம் என்றவாறு. 'த்ரிபாத் விபூதியிலே பரிபூர்ணாநுபவம் நடவாநிற்க அது உண்டது உருக்காட்டாதே தேஶாந்தரகதனான புத்ரன் பக்கலிலே பித்ருஹ்ருதயம் கிடக்குமாபோலே ஸம்ஸாரிகள் பக்கலிலே திருவுள்ளம் குடிபோய்' என்கிற ஸ்ரீவசநபூஷண ஸ்ரீஸூக்தி காண்க.

இப்படிப்பட்ட எம்பெருமான் விரும்பாத அறிவு எனக்கு எதுக்கு? "ஒண்தாமரையாள் கேள்வனொருவனையே நோக்குமுணர்வு" என்கிறபடியே அவனை நோக்கும் அறிவே அறிவு; என்று ஸித்தாந்தமாயிருப்பதுபோல, அவனால் விரும்பப்படும் அறிவே அறிவு-என்பதும் ஸித்தாந்தமாகிறதிங்கு..... .... .... .... (ரு)

அறிவினால்குறைவில்லா அகல்ஞாலத்தவரறிய *
… மூர்த்தி
குறியமாணுருவாகிக் கொடுங்கோளால்நிலங்கொண்ட *
கிறியம்மான்கவராத கிளரொளியால்குறைவிலமே.

| | |
|---|---|
| அறிவினால் இல்லா | 'நமக்கு அறிவு இல்லையே!' என்று குறைபடமாட்டாத |
| அகல் ஞாலத்தவர் அறிய | விரிவான நிலவுலகிலுள்ளாரனைவரும் அறியும்படியாக |
| நெறி எல்லாம் | (கருமயோகம் முதலிய) ஸகலோபாயங்களையும் |
| எடுத்து உரைத்த | ஸாரமாகவெடுத்தருளிச்செய்த |
| நிறை ஞானம் ஒரு மூர்த்தி | பரிபூர்ண ஞானத்தையுடைய விலக்ஷணஸ்வாமியாய், |

| | |
|---|---|
| குறிய மாண் உரு ஆகி | வாமந ப்ரஹ்மசாரி வேஷத்தையுடையனாய் |
| கொடு கோளால் | (மாவலியை வஞ்சிக்கையாகிற) கொடியவழியினால் |
| நிலம் கொண்ட | பூமியைத் தன்னதாக்கிக் கொண்ட |
| கிறி | உபாயஜ்ஞனை |
| அம்மான் | எம்பெருமான் |
| கவராத | விரும்பாத |
| கிளர் ஒளியால் குறைவு இலம் | மிகுந்த லாவண்யத்தில் விருப்பமுடையோமல்லோம். |

* * *—[அறிவினால் குறைவில்லா] தன்னைப்பெறுதற்கு உபாயமானவற்றையெல்லாம் தானே அருளிச்செய்து, ஹிதோபதேசத்திற்குப் பாங்கல்லாதவர்களைத் தன் அழகாலே வசப்படுத்திக் கொள்பவனான பெருமான் விரும்பாத லாவண்யம் எனக்கு எதற்காக? என்கிறாள்.

"அறிவினால் குறைவில்லா அகல்ஞாலத்தவர்" என்பதற்கு 'அறிவினால் பரிபூர்ணர்களான இவ்வுலகத்தவர்கள்' என்று பொருளன்று. 'நமக்கு அறிவு இல்லையே!' என்று குறைபட அறியாதவர்கள் என்றபடி. 'நமக்குச் சோறில்லையே, தண்ணீரில்லையே, துணிமணியில்லையே!' என்று குறைபடுபவர்கள்; அறிவு இல்லையே' என்றுமாத்திரம் குறைவுபடுவதில்லை ஸம்ஸாரிகள். இங்கே நம்பிள்ளையீடு;—"நாட்டார் அந்ந பாநாதிகளெல்லாவற்றாலும் கார்யமுடையராயிருப்பார்களிறே; அறிவொன்றிலுமாயிற்று குறைவுபடவறியாதது. அறிவால் கார்யமின்றிக்கேயிருப்பாராயிற்று."

பகவத்கீதை அர்ஜுநனைநோக்கி அவதரித்ததாயினும், அவனை ஒரு வியாஜமாக கிறுத்தி ஸம்ஸாதிகளுக்குமாக அது அருளிச்செய்யப்பட்டதாகையாலே "அகல்ஞாலத்தவரறிய நெறியெல்லாமெடுத்துரைத்த" என்றார். கர்மஜ்ஞான பக்திப்ரபத்திகளும், அவதாரரஹஸ்ய ஜ்ஞானம், புருஷோத்தமவித்யை முதலானவைகளுமான உபாயங்களெல்லாவற்றையும் திருவுள்ளம்பற்றி "நெறியெல்லாம்" என்கிறார்.

[குறியமாணுருவாகி இத்யாதி,] உபதேசத்தாலே திருந்தாதாரை வடிவழகாலே திருத்துவதொருமுறை உண்டாதலால் அது இங்கு விவக்ஷிதம். கொடுங்கோள்=கோள் என்று ப்ரதிக்ரஹத்தைச் சொல்லுகிறது; முதனிலைதிரிந்த தொழிற்பெயர். கொடிய கோளாவது கடினமான ப்ரதிக்ரஹம், சிறியகாலைக்காட்டிப் பெரியகாலாலே கொண்ட வஞ்சனையைச் சொன்னபடி.

கொடுங்கோளால் நிலங்கொண்ட என்ற இவ்விடத்து "கஸ்த்வம் ப்ரஹ்மந்! அபூர்வ: க்வ ச தவ வஸதி:? யாகிலா ப்ரஹ்மஸ்ருஷ்டி:, கஸ்தே த்ராதாஸ்தி அநாத: க்வ ச தவ ஜநக: நைவ தாதம் ஸ்மராமி। கிம் தே அபீஷ்டம் ததாநி? த்ரிபதபரிமிதா பூமி: அத்யல்பமேதத், த்ரைலோக்யம் பாவகர்ப்பம் பலிமிதி நிகதந் வாமநோ வஸ் ஸ பாயாத்॥ கஸ்த்வம் ப்ரஹ்மந்! அபூர்வ: க்வ ச தவ வஸதி: யாகிலா ப்ரஹ்மஸ்ருஷ்டி: கஸ்தே த்ராதாஸ்தி அநாத: க்வ ச தவ ஜநக: நைவ தாதம் ஸ்மராமி, கிம் தே அபீஷ்டம் ததாநி, த்ரிபதபரிமிதா பூமி: அத்யல்பமேதத், த்ரைலோக்யம் பாவகர்ப்பம் பலிமிதி நிகதந் வாமநோ வஸ் ஸ பாயாத்." என்கிற ச்லோகம் அநுஸந்திக்கத்தகும். இது மாவலிக்கும் வாமநமூர்த்திக்கும் ஸம்பாஷணையான ச்லோகம். இதன் மிகவினிய பொருளைக் கேண்மின்—;

மாவலி:—[ஹே ப்ரஹ்மந்! த்வம் க:?] ப்ராஹ்மணகுமாரனே! நீ யாவன்? என்று கேட்க;

வாமனன்:—[அபூர்வ:] என்கிறான். இதற்கு இரண்டு பொருள்; இதுவரையில் ஒருநாளும் நான் இரப்பாளனாக வந்தவனல்லேன் என்பது ஒருபொருள்: "நவித்யதே பூர்வ: யஸ்மாத் ஸ:—அபூர்வ:" என்கிற வ்யுத்பத்தியினால் 'எல்லார்க்கும் முற்பட்டவன் நான்' என்பது மற்றொரு பொருள்.

மாவலி:—[தவ வஸதி: க்வ] உனது இருப்பிடம் யாது? என்று கேட்க,

வாமனன்:— [யா அகிலா ப்ரஹ்மஸ்ருஷ்டி:-ஸா மம வஸதி:] என்கிருன். யாசகனுகை யாலே பிரமன் படைத்த உலகமெங்கும் திரிபவன் நான் என்பது ஒருபொருள். * கருத்தி யவுயிர்க்குயிராய்க் கரந்தெங்கும் பரந்துறையுமொரு தனிநாயகனுயிருப்பவன் யான் என்பது மற்ருெரு பொருள்.

மாவலி:— [தே த்ராதா க:?] நீ யாருடைய ஸம்ரக்ஷணையில் இருந்து வருகிருய்? என்று கேட்க,

வாமனன்:—[அநாத:] என்கிருன், எனக்கு யாரும் நாதனில்லை என்கை. புகலற்றுத் திரிகிறேனென்பதும், உலகுக்கெல்லாம் நானே நாதனுதலால் எனக்கு யாரும் நாதரில்லை என்பதும் கருத்து.

மாவலி:—[தவஜநக: க்வ] உன்னுடைய தகப்பனர் எங்கே? என்று கேட்க;

வாமனன்:—[தாதம் நைவ ஸ்மராமி] என்கிருன். தகப்பனர் எனக்கு ஞாபகத்திற்கு வரவில்லை யென்கிறவிது மிகவும் சாதுர்யமான பேச்சு. மிக்க இளம்பிராயத்திலேயே தகப்பனரை யிழந்துவிட்டேனென்பதும், உலகுக்கெல்லாம் நானே பிதாவாகையால் எனக்கொரு பிதா இருக்க நியாயமில்லையென்பதும் கருத்து.

மாவலி:—[தே கிம் அபீஷ்டம் ததாநி?] உனக்கு நான் கொடுக்கவேண்டியதாக விரும்பும் பொருள் என்? என்று கேட்க;

வாமனன்:—[த்ரிபதபரிமிதா பூமி:] என்ருன்; * என்னுடைய பாதத்தால் யானளப்ப மூவடிமண் வேண்டுமத்தனை யென்கை.

இப்படிப்பட்ட வாக்சாதுர்யத்தை நினைத்துக் கோடுங்கோளால் நிலங்கோண்ட என்றதாகவுமாம்.

கிறி—உபாயம்; அவன் தரும் விரகு அறிந்து வாங்கவல்ல பெருவிரகன் என்கை. இப்படிப்பட்ட பெருமான் விரும்பாத லாவண்யத்தில் எனக்கு அபேக்ஷையில்லை யென்றளாயிற்று. ... ... .... ... (சு)

கிளரொளியால்குறைவில்லா அரியுருவாய்க்கிளர்ந்தெழுந்து *
கிளரொளியஇரணியனது அகல்மார்பம்கிழித்துகந்த *
வளரொளியகனலாழி வலம்புரியன், மணிநீல *
வளரொளியான்கவராத வரிவளையால்குறைவிலமே. (எ)

| | | | |
|---|---|---|---|
| கிளர் ஒளியால் குறைவு இல்லா | கிளர்கின்ற தேஜஸ்ஸை நிரம்பப் பெற்ற | வளர் ஒளிய கனல் | வளர்கின்ற ஜ்வாலையையுடைய நெருப்புப் போலேயிருக்கிற |
| அரி உரு ஆய் | நரசிங்கமூர்த்தியாய் | ஆழி | சக்கரத்தையும் |
| கிளர்ந்து எழுந்து | சீறிக்கொண்டு தோன்றி, | வலம்புரியன் | சங்கையுமுடையவனும், |
| கிளர் ஒளிய இரணியனது | மிக்கதேஜஸ் பொருந்திய இரணியனுடைய | நீலம் மணி வளர் ஒளியான் | நீலரத்னம்போன்று விளங்குகின்ற திருமேனி விளக்கத்தை யுடையனுமான பெருமான் |
| அகல் மார்பம் | விசாலமான மார்பை | கவராத | விரும்பாத |
| கிழித்து உகந்த | இருபிளவாக்கித் திருவுள்ள முகந்தவனும், | வரி வளையால் குறைவு இலம் | அழகிய வளையில் அபேக்ஷையுடையோமல்லோம். |

* * *—[கிளரொளியால்.] ஆச்ரிதவிரோதியான இரணியனைப் பிளந்தொழிந்த நரஸிம்ஹன் விரும்பாத வளை எனக்கு வேண்டாவென்கிருள்.—கிளர்ந்த வொளி குறைவின்றிக்கே

பிருக்கிற நரஸிம்ஹமூர்த்தியாய்ச் சீறிக்கொண்டு தோற்றி இரணியனுடைய அகன்ற மார்வைக்கிழித்து 'சிறுக்கனுடைய விரோதி தொலையப் பெற்றோம்.' என்று திருவுள்ள முவந்தவன்.

வளரொளிய கனலாழி வலம்புரியன்—இரணியனது உடல் நரஸிம்ஹனுடைய திருநகங்களுக்கே இரைபோரப் பெருமையாலே திவ்யாயுதங்களுக்கு இங்குக் காரியமேயில்லை யாயிற்று: 'இங்கு நமக்கு ஒன்றும் இரை கிடைக்கவில்லையே!' என்கிற சீற்றத்தினால் சங்கும் சக்கரமும் கதகதென்று வயிறெரிகிறபடி.

*அப்படிப்பட்ட எம்பெருமான் விரும்பாத—(அதாவது) அவன் வாங்கித் தன் கையில் இட்டுக்கொள்ளாத வளை எனக்கு வேண்டா என்றாளாயிற்று.* (எ)

வரிவளையால்குறைவில்லாப் பெருமுழக்காலடங்காரை *
எரியழலம்புகவூதி இருநிலமுன்துயர்தவிர்த்த *
தெரிவரியசிவன்பிரமன் அமரர்கோன்பணிந்தேத்தும் *
விரிபுகழான்கவராத மேகலையால்குறைவிலமே. (அ)

| | | | |
|---|---|---|---|
| முன் | முன்பொருகாலத்தில் | துயர் | (பெரும்பாரத்தினாலுண்டான) கஷ்டத்தை போக்கினவனும், |
| வரிவளையால் | வரிகளையுடைய சங்கில் நின்று முண்டான | தெரிவு அரிய சிவன் பிரமன் அமரர் கோன் | (இவ்வுபகாரத்திற்காக) அறிய முடியாத சிவன் பிரமன் இந்திரன் ஆகிய இவர்கள் |
| குறைவில்லா பெருமுழக்கால் | மிகப்பெரிய கோஷத்தினாலே | பணிந்து | வணங்கி |
| எரி அழலம் | கிளர்ந்தெரிகிற (பயமாகிற) அக்நியானது | ஏத்தும் | துதிக்கப்பெற்ற |
| அடங்காரை புக | பகைவர்களிடத்துப் புகும்படியாக | விரி புகழான் | பரந்த புகழையுடையனுமான எம்பெருமான் |
| ஊதி | (சங்கை) ஊதி | கவராத | விரும்பாத |
| இரு நிலம் | விசாலமான பூமண்டலத்தினுடைய | மேகலையால் | அரைவடத்தில் |
| | | குறைவு இலம் | அபேக்ஷையுடையோமல்லோம். |

* * *—[வரிவளையால்.] *மண்ணின்பாரம் நீக்குதற்கே வடமதுரைப் பிறந்து விரோதிகளைத் தொலைத்து அமரர்கள் துதிக்க நின்ற பெருமான் விரும்பாத மேகலை எனக்கு ஏதுக் கென்கிறாள்.*

வரிவளையால் என்கிற பதம் 'குறைவில்லா' என்பதில் அந்வயிப்பதன்று, 'பெருமுழக் கால்' என்பதில் அந்வயிப்பதாகும்; 'ஸ்ரீபாஞ்சஜந்யத்தாலுண்டான மஹாகோஷத்தாலே' என்றபடி. "படைபோர்புக்கு முழங்குமப் பாஞ்சசன்னியம்" என்கிறபடியே பாஞ்சசன்னியம் முழங்கினவளவிலேயே எதிரிகள் குடல் குழம்பிக் குமுறிப்போவர்கள். பாரதயுத்தம் முதலிய பிரகரணங்களில் இதன் பெருமை அறியத்தக்கது.

கண்ணபிரானையன்றி மற்று எவனையும் கனவிலுங் கருதாதிருந்த ருக்மிணிப்பிராட்டிக்கு சிசுபாலனோடு விவாஹம் நடத்துவதாகக் கோடித்து ஸித்தமாயிருந்த ஸமயத்தில் கண்ணபிரானது வரவை யெதிர்பார்த்திருந்த அப்பிராட்டியின் நெஞ்சு முறிந்துபோய் இனி நாம் உயிர் துறப்பதே நல்லுபாயம் என்று நிச்சயித்திருந்த க்ஷணத்தில் கண்ணபிரான் மிகவிரைந்து எழுந்தருளிப் புறச்சோலையிலே நின்று தனது ஸ்ரீபாஞ்சஜந்யத்தைத் திருப்பவளத்திலே வைத்து ஊத, அவ்வோசை ருக்மிணிப்பிராட்டியை மகிழ்வித்தவளவேயன்றி, சிசுபாலனையும் அவனைச்சார்ந்தவர்களையும் எரியழலம் புகச்செய்தமை ப்ரஸித்தம்; இப்படிப்பட்ட இதிஹாஸங்கள் இங்குக் கொள்ளத்தக்கன.

[தெரிவரிய இத்யாதி.] எம்பெருமான் எங்கெங்கு வெற்றிபெற்று நிற்கின்றானோ அங்கங்கெல்லாம் சிவனும் பிரமனுமிந்திரனும் முதலானவர்கள் பணிந்து ஏத்துவர்கள்; அப்படி அவர்கள் ஏத்துவது பரபரனான எம்பெருமானுக்கு ஒரு பெருமையன்றாகிலும், துர்மானங் கொண்டாடித் திரியும் அத்தெய்வங்கள் அந்த துர்மானந் தவிர்ந்து காலவிசேஷங்களிலே எம்பெருமானைப் பணிந்தேத்துகை அவர்களுக்கும் ஸ்வரூபலாபமாய் எம்பெருமானுக்கும் ஒருவாறு ஸந்தோஷகரமாயிருக்கையாலே ஆழ்வார்கள் அதனை ஒரு பொருளாக எடுத்துக் கூறுவர்கள்.

மேகலை—மேகலா என்ற வடசொல் திரிபு. ... (௮)

மேகலையால்குறைவில்லா மேலிவுற்றவகலல்குல் *
போகமகள்புகழ்த்தந்தை விறல்வாணன்புயம்துணித்து *
நாகமிசைத்துயில்வான்போல் உலகெல்லாம்நன்கொடுங்க *
யோகணைவான்கவராத உடம்பினால்குறைவிலமே * (௯)

| | | | |
|---|---|---|---|
| மேகலையால் | உடையழகினால் | புயம் | தோள்களை |
| குறைவு இல்லா | குறையற்றவளும் | | அறுத்தொழித்தவனைப், |
| மெலிவு உற்ற | ஸௌகுமாரத்தன்மை பொருந்தியவளும் | நாகம் மிசை | ஆதிசேஷன்மீது |
| அகல் அல்குல் | அகன்ற நிதம்ப ப்ரதேசத்தையுடையவளும் | துயில்வான் போல் | உறங்குவான்போலே |
| போகம் | போகத்திற்குரியவளுமான | உலகு எல்லாம் | ஸகலலோகமும் |
| மகள் | உஷையென்னும் பெண்ணுக்கு | நன்கு ஒடுங்க | நன்மையிலே சேரும்படி |
| தந்தை | தகப்பனென்கிற | யோகு அணைவான் | உபாயசிந்தை பண்ணுமவனான எம்பெருமான் |
| புகழ் | புகழையுடையனாய் | கவராத | விரும்பாத |
| விறல் | பலிஷ்டனான | உடம்பினால் குறைவு இலம் | உடம்பில் அபேக்ஷையுடையோமல்லோம். |
| வாணன் | பாணாஸுரனுடைய | | |

* * *—[மேகலையால்] வாணனாயிரம் தோள்துணித்த பெருமான் விரும்பாத உடம்பு எனக்கு எதுக்கு? என்கிறாள். "மேகலையால் குறைவில்லா" என்பது பாணாஸுரபுத்ரியான உஷைக்கு அடைமொழி. மேகலை என்பதைக் கீழ்ப்பாசுரத்திற்போலே மேகலா என்னும் வடசொல்லின் திரிபாகக்கொள்ளவுமாம்; அன்றி, 'மே-கலையால்' என்று இரண்டு சொல் வடிவமாகக்கொண்டு, விரும்பத்தக்க [கலை] வஸ்த்ரத்தினால் என்று கொள்ளவுமாம். "நம்பும் மேவும் நசையாகும்மே" என்பது தொல்காப்பியம். மேம்பாடுடைய கலையினால் என்னவுமாம்.

"உஷைக்குக் கூறையுடை அழகியதாயிருக்கும்போலேகாண்" என்பராம் வங்கிப் புரத்து நம்பி. அல்குல்—மத்யப்ரதேசம். அல்குலென்று பெண்குறியையே சொல்லுவதாகப் பலர் பிரமித்திருப்பதுண்டு. திருக்கோவையார் முதலிய நூல்களில் சிற்சிலவிடங்களில் அப்பொருளில் பிரயோகம் கண்டாலும் அருளிச்செயல்களில் காண்கிற பிரயோகம் அப்பொருளில் அல்ல. "திருமலிந்து திகழ்மார்வு தேக்கவந்தென்னல்குலேறி" என்ற பெரியாழ்வார் திருமொழியும் "பூந்துகில் சேரல்குல்" என்ற பெருமாள் திருமொழியும் முதலாயின காண்க. ....

உடம்பினால்குறைவில்லா உயிர்பிரிந்தமலைத்துண்டம் *
கிடந்தனபோல்துணிபலவா அசுரர்குழாம்துணித்துகந்த *
தடம்புனலசடைமுடியன் தனியொருகூறமர்ந்துறையும் *
உடம்புடையான்கவராத உயிரினால்குறைவிலமே. (௰)

| | | | |
|---|---|---|---|
| உடம்பினுல் குறைவு இல்லா | பெரியவுடம்பு படைத்த | ஒரு கூறு | (தனது திருமேனியின்) ஒரு பக்கத்திலே, |
| அசுரர் குழாம் | அசுரக்கூட்டங்களை | தடம் புனல சடை முடியன் | பரந்த கங்காதீர்த்தத்தைத்தரித்த ஜடாமகுடத்தையுடையனுன |
| உயிர் பிரிந்த மலை துண்டம் கிடந்தனபோல் | உயிரைவிட்டு நீங்கினபர்வத கண்டங்கள் கிடந்தாற்போலே | தனி அமர்ந்து உறையும் | சிவபிரான் பொருந்தி வாஸம் பண்ணப்பெற்ற |
| பல துணி ஆ துணித்து | பலபல கண்டங்களாம்படி துண்டித்து | உடம்பு உடையான் | திருமேனியை யுடையவனுன எம்பெருமான் |
| உகந்த | (ஆச்ரிதவிரோதிகள் தொலைந்தன வென்று) திருவுள்ள முவந்தவனுய், | கவாத | விரும்பாத |
| | | உயிரினல் குறைவு இலம் | ஆத்மாவில் அபேக்ஷையுடையோ மல்லோம். |

* * *—[உடம்பினுல் குறைவில்லா.] முன்னடிகளால் எம்பெருமானுடைய விரோதி நிரஸந ஸாமர்த்தியம் பேசப்படுகிறது. "உடம்பினுல் குறைவில்லா" என்கிற அடைமொழி அசுரர்குழாத்திலே அந்வயிக்கும். "ஊன்மல்கிமோடு பருப்பார்" என்கிறபடி கண்ட பொருள்களையும் தின்று உடம்பை வளர்த்திருப்பர்கள் அசுரர்கள். ஆத்மாவைப் போஷியாதே தேஹபோஷணத்திலேயே நோக்குடையவர்கள் என்றபடி.

பண்டொருகாலத்தில் மலைகளெல்லாம் இறகுகளோடு கூடி வானத்திலெழுந்துதிரிந்து நாடுநகரங்களுக்கு விநாசங்களை விளைத்திட்டனவென்றும், அப்போது தேவேந்திரன் தனது வஜ்ராயுதத்தினுல் அம்மலைகளின் இறகுகளைத் துணித்து வீழ்த்தனன் என்றும் இதிஹாஸங்கள் கூறும். எம்பெருமானுல் துணித்து வீழ்த்தப்பட்ட அசுரர்கள் அம்மலைகளோடு ஒப்பிடத் தக்கவர்களெனக் கொண்டு "உயிர்பிரிந்த மலைத்துண்டம் கிடந்தனபோல்" எனப்பட்டது. "ஸப்ராணுய்க்கொண்டு ஸஞ்சரித்த பர்வதங்கள் இந்த்ரன் கையில் வஜ்ராயுதத்தாலே பல கூறும்படி துணியுண்டு கிடந்தாப்போலே அஸுரவர்க்கத்தைப்பல கூறும்படி துணித்துகந்தானுயிற்று" என்பது நம்பிள்ளையீடு.

ஸுதர்சநசதகத்தில் "க்ரு தவஸ ஹரு உ ஹல ஜ உர நா—க்ருதஸகருதக ஸ்பந்ததாநா" என்றதை நோக்குமளவில் திருவாழியாழ்வான்தானே மலைகளைத் துணித்ததாக ஏற்படுகின்றதே! என்று சிலர் சங்கைகொள்வர்கள்; இதற்குப் பரிஹாரமாவது அந்த ஸுதர்சந சதகத்திலேயே "ஶக்திய உஶெளஷ உம்ஷ நவ வரஶ உவவ்யாவினீ—சக்திர்யஸ்யேஷுதம்ஷ்ட்ராநக பரசுமுகவ்யாபிநீ." என்றருளிச் செய்த கணக்கிலே திருவாழியாழ்வானுடைய சக்தியின் ஆவேசங்கொண்டே வஜ்ராயுதம் செய்த செயலாகையாலே இரண்டு வகையாகவும் சொல்லக்குறையில்லை யென்பதாம்.

தடம்புனலசடைமுடியன் தனியோருகூறமர்ந்துறையு முடம்புடையான் = தன்னுடைய சேஷத்வத்தைச் சிலகாலங்களிலே மறந்து தன்னையே ஈச்வரனுக அபிமானிக்கும் துர்மானியான ருத்ரனுக்கும் உடம்புகொடுக்குமெம்பெருமான் எனக்கு உடம்பு கொடுத்திலனென்றுல் பின்னை இந்த உயிர் எனக்கு எதுக்கு? என்கிறுர். "உயிரினுல் குறைவிலம்" என்றது இந்த ஆத்மா தொலைந்து போகட்டுமென்றபடி. நித்யமான ஆத்மவஸ்து எங்ஙனே தொலைந்து போகுமென்று குசோத்யம் செய்யவேண்டா; எம்பெருமானுடைய விருப்பத்திற்கு உடலாவதே ஆத்மாவுக்குச் சிறந்த ஸ்வரூபம் என்று காட்டினபடி. ஆசார்ய ஹ்ருதயத்தில் "சேஷத்வ பஹிர்ப்பூதஜ்ஞாநாநந்தமயனையும் ஸஹியாதார் த்யாஜ்யோபாதியை ஆதரியார்களே" என்றருளிச்செய்த ஸ்ரீஸூக்தியும், முமுக்ஷுப்படியில் "உயிரினுல் குறைவில மென்கிறபடியே த்யாஜ்யம்" என்றருளிச்செய்த ஸ்ரீஸூக்தியும் இங்கு உணரத்தக்கன. (௰)

உயிரினுல்குறைவில்லா உலகேழ்தன்னுள்ளொடுக்கி *
தயிர்வெண்ணெயுண்டானைத் தடங்குருகூர்ச்சடகோபன் *
செயிரில்சொல்லிசைமாலை ஆயிரத்துளிப்பத்தால் *
வயிரம்சேர்பிறப்பறுத்து வைகுந்தம்நண்ணுவரே. (கக)

| | | | |
|---|---|---|---|
| உயிரினால் குறைவு இல்லா | எண்ணிறந்த ஆத்மாக்களையுடைய | செயிர் இல் | குற்றமற்ற |
| | | இசை | இசையோடு கூடின |
| ஏழ் உலகு | ஸமஸ்த | சொல்மாலை | சொல்மாலையாகிய |
| தன்னுள் ஒடுக்கி | தன்னுடைய ஸங்கல்பத்திலே யடக்கிவைத்து | ஆயிரத்துள் | ஆயிரம் பாட்டினுள்ளே |
| | | இ பத்தால் | இந்தப்பதிகத்தினால் |
| தயிர் வெண்ணெய் உண்டானை | தயிரும் வெண்ணெயும் அமுது செய்தவனை எம்பெருமான் விஷயமாக | வயிரம் சேர் பிறப்பு அறுத்து | உரமேறின ஸம்ஸாரத்தை அடியறுத்து |
| | | வைகுந்தம் | பரமபதத்தை |
| தடம் குருகூர் சடகோபன்—; | | நண்ணுவர் | கிட்டப்பெறுவர். |

* * *—[உயிரினால் குறைவில்லா.] இருள் தருமாஞாலத்தில் பிறப்பையறுத்துப் பரமபதம் பெறுதற்கு இத்திருவாய்மொழி ஸாதனமாயிருக்குமென்று பயனுரைத்துத் தலைக்கட்டுகிறது.

உயிரினால் குறைவில்லா என்றது ஒரு ஜீவாத்மாவும் தப்பாதபடி என்றவாறு. "நெற்றி மேற்கண்ணானும் நிறைமொழிவாய் நான்முகனும் நீண்ட நால்வாய், ஒற்றைக்கை வெண்பகட்டிலொருவனையு முள்ளிட்டவமரரோடும், வெற்றிப்போர்க்கடலரையன் விழுங்காமல் தான் விழுங்கியுய்யக்கொண்ட" என்றும், "மண்ணோடும் விண்ணோடும் வானவரும் தானவரும் மற்றுமெல்லாம், உண்ணாத பெருவெள்ள முண்ணாமல் தான் விழுங்கி யுய்யக்கொண்ட" என்றும் திருமங்கையாழ்வாரருளிச் செய்தபடியே இந்திரன் பிரமனீசனென்றிவர்களில் ஒருவரும் தப்பாமல் என்றதாயிற்று.

உலகேழ் தன்னுள்ளொடுக்கித் தயிர்வெண்ணெயுண்டானை = இங்கே நம்பிள்ளையிடு காண்மின்;—"தயிரும் வெண்ணெயும் களவுகாணப்புகுகிறபோது 'செருப்பு வைத்துத் திருவடி தொழுவாரைப்போலே அந்யபரதைக்கு உடலாகவொண்ணாது' என்று எல்லாலோகங்களுக்கும் வேண்டும் ஸம்விதானம் தன் ஸங்கல்பத்தாலே செய்து பின்னையாயிற்று வெண்ணெயமுதுசெய்தது." என்பதாம். "உலகேழ் தன்னுள் ஒடுக்கித் தயிர்வெண்ணெயுண்டான்" என்கிற சொற்செறிவின் அழகை நோக்கி நம்பிள்ளை இங்ஙனே யருளிச்செய்தது இன்சுவைமிக்கது. காலில் செருப்போடே கோவிலுக்குச் செல்பவர்கள் கோபுரவாசற்புடையிலே செருப்பை விட்டிட்டு உள்ளேபுகுந்து பெருமாளை ஸேவிக்குமளவிலும் செருப்பிலே நினைவு இடையறாமல் செல்லுகின்றபடியாலே "ஸ்வாமிந்! தீர்த்தம் ஸாதிக்க; திருத்துழாய்ஸாதிக்க" என்னவேண்டும்போதும் 'செருப்புஸாதிக்க' என்பர்களாம்; எம்பெருமானும் உலகங்களுக்குச் செய்யவேண்டிய ஸம்விதானங்களைச் செய்யாமல் நெய் தயிர் வெண்ணெய் களவுகாணப்புகுந்தால் இடையிடையே அந்த உலகநினைவும் உண்டாகி, செருப்பை வைத்துத் திருவடிதொழுத கதையாக ஆய்விடுமென்றெண்ணி, எல்லா லோகங்களுக்கும் வேண்டும் ஸம்விதானங்களைத் தன் ஸங்கல்பத்தாலே செய்துமுடித்து அந்யபரதைக்கு இடமறுத்துக்கொண்டு வெண்ணெயமுதுசெய்யப் புகுந்தானென்று ரஸோக்தியிருக்கிறபடி. "கர்ப்பிணிகள் வயிற்றில் பிள்ளைக்கீடாக போஜநாதிகள் பண்ணுமாபோலே உள்விழுங்கின லோகங்களுக்கு ஜீவனமாகத் தயிர்வெண்ணெயுண்டான்" என்ற ஈட்டு ஸ்ரீஸூக்தியும் பரமபோக்யம்.

இப்படிப்பட்ட எம்பெருமான் விஷயமாக ஆழ்வார் அருளிச்செய்த பத்தால் ஸம்ஸாரத்தை அடியறுக்கலாமென்றதாயிற்று.

வயிரம்சேர் பிறப்பு = வேண்டாவென்று கழித்தாலும் விடாதபடிகாழ்ப்பு ஏறிக்கிடக்கிற ஸம்ஸாரம்.

செயிர் இல் = சொற்குற்றமும் பொருட்குற்றமும் இல்லாத என்றபடி. கக)

எட்டாந் திருவாய்மொழி—உரை முற்றிற்று.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

——— 0 ———

# நான்காம்பத்து ஒன்பதாந் திருவாய்மொழி—நண்ணாதார்முறுவலிப்ப.

உரையவதாரிகை. கீழ்த்திருவாய்மொழியில், உடம்பு வேண்டா, உயிர் வேண்டா, அது வேண்டா; இது வேண்டா என்று ஆத்மாத்மீயங்களையெல்லாம் வெறுத்து உதறித் தள்ளப்பார்த்தார். தள்ளினால் தள்ளுண்டு போமவையோ அவை? பேறு பெறுவதற்கு எப்படி அவன் கை பார்த்திருக்கவேணுமோ, அப்படியே முடிகைக்கும் அவன் கை பார்த்திருக்கவேண்டுகையாலே 'எம்பிரானே! என்னை நீதானே முடித்திடாய்' என்கிறார். ஆழ்வாருடைய ஆர்த்தி பேச்சுக்கு நிலமல்லாதபடி பெருகினமை இத்திருவாய்மொழியிலே விளங்காநின்றது.

ஆழ்வாருடைய ஆர்த்திக்கு மூன்று ஹேதுக்களுண்டு; எம்பெருமானோடு கலவி பெறாமல் பிரிந்து படும் ஆர்த்தி ஒன்று; ஸம்ஸாரிகளோடு ஸஹவாஸம் பொறுக்க வொண்ணாத தாய் அத்தாலே வரும் ஆர்த்தி ஒன்று; இந்திரியங்கள் விஷயங்களிலே கொண்டுபோய் மூட்டி அநர்த்தங்களை விளைக்கையாலே அத்தாலேவரும் ஆர்த்தி ஒன்று. இவற்றுள் எம்பெருமானுடைய பிரிவினால் வந்த ஆர்த்தி கீழ்த்திருவாய்மொழியிலே கண்டது. இந்திரியங்களால் வரும் ஆர்த்தி மேலே *உண்ணிலாவியவைவரால்* என்கிற திருவாய்மொழியிலே காணலாகும். ஸம்ஸாரிகளினிடையே ஸஹவாஸம் பொறுக்கவொண்ணாமையாலாகும் ஆர்த்தி இத்திருவாய்மொழியில் காண்பதாகும்.

எம்பெருமானைக் காணப்பெறாவிடினும், எம்பெருமானைக் காணப்பொறாத பாவிகளின் இடையிலே இருப்பாவது இல்லாமலிருக்குமாகில் ஒருவாறு ஆறியிருக்கலாம். அப்படியல்லாமல் உண்டியே உடையே உகந்தோடுமிம்மண்டலத்தினிடையிலே மிக விபரீதமான லோகயாத்ரைகளைக் கண்ணாலே கண்டு கொண்டு இருப்பதென்றால் இது ஆழ்வார்க்கு எங்ஙனே ஸஹிக்கத்தக்கதாகும்?

திருமங்கையாழ்வார் "மருவினிய தண்ணார்ந்த கடன்மல்லைத் தலசயனத் துறைவாரை எண்ணாதே யிருப்பாரையிறைப்பொழுது மெண்ணோமே" என்றும் "கண்ணாளன் கண்ணமங்கை நகராளன் கழல்சூடி அவனையுள்ளத்து எண்ணாத மானிடத்தை யெண்ணாதபோதெல்லாம் இனியவாறே" என்றும் அருளிச்செய்தார். இதனால் தேறுவது என்ன? எம்பெருமானைச் சிந்திக்கையாகிற பேறுகிடைக்காதொழியினும் எம்பெருமானிடத்திலே அன்பில்லாத பாவிகளைப் பற்றின ஞாபகம் வாராமலிருப்பதே சிறந்தது என்பதாம்.

ஸ்ரீ விபீஷணாழ்வான் "இராமபிரானது கோஷ்டியிலே நமக்கு ப்ரவேசம் கிடைக்கட்டும்; கிடைக்காமற் போகட்டும்; மஹாபாபியான இராவணனுடைய கண்வட்டத்தில் நின்றும் எழுந்து அப்பால் சென்றால் போதும்" என்று துணிந்து * உத்பபாத கதாபாணி: சதுர்ப்பிஸ்ஸஹ ராக்ஷஸை:* என்கிறபடியே சடக்கென எழுந்து சென்றதுபோல, ஆழ்வாரும் இவ்விருள் தருமாஞாலத்தில் நின்றும் சடக்கெனவெழுந்து செல்லத்துணிவு கொண்டாலும், அது தம்முடைய இஷ்டப்படி நிறைவேறுவதன்றே; எம்பெருமான் திருவுள்ளத்தினாலாக வேண்டிய தன்றோ இது. ஆகையாலே "உனகழற்கே வரும்பரிசு பணிகண்டாய் சாமாறே" என்றும், "கூமாறே விரைகண்டாய் அடியேனைக் குறிக்கொண்டே" என்றும், "கோட்டையினிற் கழித்தென்னை உன் கொழுஞ்சோதியுயரத்துக் கூட்டரிய திருவடிக்கண் எஞ்ஞான்று கூட்டுதியே" என்றும் அளவற்ற ஆர்த்தி தோற்றப் பேசுகிறார்.

வரம் ஹுதவஹஜ்வாலாபஞ்ஜராந்தர்வ்யவஸ்திதி:। நஶௌரிசிந்தாவிமுகஜநஸம்வாஸ வைஶஸம் = வரம் ஹுதவஹஜ்வாலா பஞ்ஜராந்தர் வ்யவஸ்திதி: நஶௌரி சிந்தாவிமுகஜநஸம்வாஸ வைஶஸம்." என்கிற ச்லோகம் இங்கு அநுஸந்திக்கத்தக்கது. இதன் பொருளாவது-பற்றியெரிகிற நெருப்பினிடையே வாழ்ந்தாலும் வாழலாம்; எம்பெருமானைச்சிந்தை செய்ய அறியாத பாவிகளுடனே கூடியிருத்தல் கூடாது என்பதாம்.

இத்திருவாய்மொழியின் அவதாரிகையை எம்பார் ஒருவகையாகவும் ஆழ்வான் ஒரு வகையாகவும் யோஜிப்பர்களாம். எம்பார் யோஜிப்பதாவது—கீழே விவரித்தபடி. "உன்னையொழியப் புறம்பே பேறுமிழவுமாயிருக்கிற ஸம்ஸாரிகள் நடுவேயிருக்கிற இருப்பால் படுகிற க்லேஶமானது உன்னைப்பிரிந்திருந்துபடுகிற க்லேஶத்தளவல்ல; உன்பிரிவை ஒருவாறு ஆற்றலாம்; இந்த மஹாபாபிகளான ஸம்ஸாரிகளினிடையிலே இருப்பதாகிற க்லேசம் ஒரு விதத்தாலும் ஆற்றப்போகவில்லை; ஆகலால் இவ்விருப்பைத் தவிர்த்தருள வேணும்" என்று பிரார்த்திப்பதாக எம்பாருடைய யோஜனை.

ஆழ்வானுடைய யோஜனை:—தம்முடைய ஆற்றாமைக்கு ஸம்ஸாரிகளில் ஆரேனும் கூட்டாவாருண்டோவென்று லோகயாத்ரையிலே கண் வைத்தாராழ்வார்; தமக்கு பகவத் விஷயத்திலே எவ்வளவு ப்ராவண்யமோ அதற்கு மேற்பட்ட ப்ராவண்யம் அவர்களுக்கு சப்தாதி விஷயங்களிலேயாயிருந்தது. தாம் பகவத் விஷயத்திலே இழவாளராய் நோவு படுகிறப்போலே அவர்கள் விஷயாந்தரங்களிலே இழவாளராய் நோவுபடுவது கண்டார்: வாளேறு கண்டவனுக்குத்தேளேறு மாய்வது போல, [அதாவது, ஒருவன் தேள் கொட்டி நொந்துவாரா நிற்க எதிரே யொருவன் வாளால் வெட்டுப்பட்டு நொந்து வந்தால் அந்தப் பெரு நோவைக் கண்டவாறே தேள் கொட்டின சிறுநோவு தணியுமாபோல] ஸம்ஸாரிகளின் பேரிழவிலே ஆழ்வாருடைய ஆர்த்தி அஸத்கல்பமாயிற்று. (அதாவது) தம் இழவை மறந்து இவர்களுடைய இழவையே திருவுள்ளத்திற்கொண்டார்; உடனே எம்பெருமானை நோக்கி "பிரானே! இவர்களை இப்படித் துடிக்கவிட்டிருக்கலாமோ? ஸர்வஜ்ஞனாய் ஸர்வசக்தனாயிருக்கிற நீ இவர்களைக் கரைமரம் சேர்த்தேயாகவேணும்" என்று பிரார்த்தித்துத் திருவடிகளைப் பிடித்துக்கொண்டார்; "இவர்கள் அசேதனங்களன்றிக்கே சேதநராகையாலே இவர்களுக்கும் சிறிது ருசியுண்டாகியே தீரவேணுங்காணும்" என்று எம்பெருமான் அருளிச் செய்தான்; அதுகேட்ட ஆழ்வார், "பிரானே! சேதநர்களென்று பேர்மாத்திரமாய் அசேதந ப்ராயங்களான இந்த ஜடங்கள் விஷயத்திலே இங்ஙனே திருவுள்ளமாகலாமோ? அவசியம் திருவுள்ளமிரங்கியருளவேணும்" என்று பிரார்த்திக்க; எம்பெருமான் சொன்னான்—"ஆழ்வீர்! இவர்களை அசேதனங்களாக நான் எப்படிக் கொள்ளமுடியும்? இவர்கள் உண்டி உடை முதலானவற்றைக் கொள்ளாமலில்லை; அவற்றிலே நல்லது தீயதுகளை ஆராய்ச்சி செய்ய வல்லவர்களாயுமிருக்கின்றார்கள்; அப்படிப்பட்ட இவர்கள் விஷயாந்தரங்களிற்காட்டிலும் நம்முடைய வாசியை அறியாதேயிருந்தார்களென்றால், இவர்கள் தொலைந்து போகிறபடியே தொலைந்து போகட்டும் என்று கைவிடுவதுதவிர வேறு நம்மால் செய்யலாவதுண்டோ? இப்பாவிகளைப்பற்றின கவலையை நீரும் விட்டிடும்" என்றான். அதுகேட்ட ஆழ்வார், "பிரானே! ஆகில் இப்படிப்பட்டவர்களின் நடுவே என்னை என் வைத்திருக்கிறாய்? இவ்விடத்தில் நின்றும் என்னை முன்னம் வாங்கவேணும்" என்ன; "ஆழ்வீர்! உம்மை முன்னமே வாங்கிவிட்டேன் காணும்; ஸம்ஸாரிகளோடு பொருந்தாதபடி உம்மைச் செய்துவைத்திருக்கிறேனல்லவா? இவ்வுலக யாத்ரையைச் சிந்தித்ததனால் உமக்குண்டான க்லேசமெல்லாம் தீரும்படி ஒன்று காட்டுகிறேன், காணும்" என்று சொல்லிப் பாமபதத்திலே அயர்வறுமமரர்கள் அடிமைசெய்யப் பெரிய பிராட்டியாரும் தாமுமாக இருக்கிற விலக்ஷணமான இருப்பை

எம்பெருமான் காட்டிக்கொடுக்க, "ஒண்டொடியாள் திருமகளும் நீயுமே நிலாநிற்பக்கண்ட சதிர்கண்டொழிந்தேன் அடைந்தேனுன் திருவடியே" என்று அநுஸந்தித்துத் தரித்து நந்தார்த்தராய்த் தலைக்கட்டுகிறார்—என்பதாம்.

இங்கு ஆழ்வானைப்பற்றி ஓர் இதிஹாஸம் ஈட்டில் அருளிச்செய்யப்படுகிறது;—ஆழ்வான் ஓரிடத்தே வழிபோகாநிற்க ஸர்ப்பத்தினால் பிடிக்கப்பட்ட தவளை கூப்பிடாநிற்க. இது யாரையக் கூப்பிடுகிறதோ! என்று மோஹித்தாராம். "அரவவாய்க் கோட்பட்ட மண்டூக வொலிகேட்டு மதியெல்லாமுள்கலங்கி மயங்கி நின்ற பெருமானார்" என்று பின்புள்ளாரும் பேசினார்கள் .... .... .... .... (*)

நண்ணாதார்முறுவலிப்ப நல்லுற்றார்கரைந்தேங்க *
எண்ணாராத்துயர்விளைக்கும் இவையென்னஉலகியற்கை? *
கண்ணாளா!கடல்கடைந்தாய்! உனகழற்கேவரும்பரிசு *
தண்ணவாதடியேனைப் பணிகண்டாய்சாமாறே. (க)

| | |
|---|---|
| நண்ணாதார் | பகைவர்கள் |
| முறுவலிப்ப | மகிழ்ந்து சிரிக்கவும் |
| நல் உற்றார் | நல்ல உறவினர்கள் |
| கரைந்து ஏங்க | மனமுருகிவருந்தவும் |
| எண் ஆரா துயர் விளைக்கும் | எண்ணமுடியாத துன்பங்களை விளைக்கின்ற வையான |
| இவை உலகு இயற்கை | இந்த லோகயாத்ரைகள் |
| என்ன | என்ன!; |

| | |
|---|---|
| கண் ஆளா | தயாளுவே! |
| கடல் கடைந்தாய் | (தேவர்களுக்கு அமுத மளிக்கக்) கடலைக் கடைந்தவனே! |
| உன கழற்கே | உனது திருவடி வாரத்திலேயே |
| வரும் பரிசு | நான் வந்து சேரும்படி |
| தண்ணவாது | காலதாமதமின்றியில் |
| அடியேனை | அடியேனை |
| சாம் ஆறு | மரணமடையும்படி |
| பணி | அருள் செய்யவேணும்; |

கண்டாய்—முன்னிலையசை

* * *—எம்பெருமானே! ஸர்வரக்ஷண ஸமர்த்தனாய் ஸர்வநிர்வாஹகனாய் நீ யிருக்க, இந்த ஸம்ஸாரிகள் அளவுகடந்த துயரங்களை யநுபவித்துக்கொண்டிருக்குமிருப்பு கண்டு என்னால் பொருத்திருக்க முடியவில்லை; இவர்களுடைய ஆர்த்தியைத் தீர்ப்பதோ, அன்றி இவர்களுடைய இழவை நான் சிந்திக்கவொண்ணாதபடி என்னை முடிப்பதோ செய்யவேணும் என்கிறார்.

உலகத்தில் ஒவ்வொருவர்க்கும் பகைவர் என்று சிலரும் நண்பர் என்று சிலரும் இருப்பர்களே; ஒருவனுக்கு ஓர் ஆபத்து நேர்ந்தால் 'அந்தோ! நேர்ந்ததே!' என்று அனைவரும் கூடி வயிறு பிடிக்கவேண்டியிருக்க, சிலர் உகந்து சிரிக்கும்படியும் சிலர் வருந்தும்படியுமாவதே! என்று லோகயாத்திரைக்கு வருந்துகிறாராழ்வார், இங்கு ஈட்டு ஸ்ரீஸூக்திகாண்மின்;—"ஒருவனுக்கு ஓர் அநர்த்தம் வந்தவாறே அற்றைக்கு முன்பு வெற்றிலை தின்றறியார்களேயாகிலும் அன்றாக ஒரு வெற்றிலை தேடித்தின்பது, ஓர் உடுப்புவாங்கியுடுப்பது, சிரிப்பதாகா நிற்பர்களாயிற்று."

எண்ணாராத் துயர்விளைக்குமிவை—நண்ணாதார் முறுவலிப்பதும் நல்லுற்றார் கரைந்து ஏங்குவதுமாகிய எல்லாம் ஆழ்வார்க்கு எண்ணாராத் துயரமாகத் தோற்றுகின்றது. எல்லாரும் எம்பெருமானையே பரமபந்துவாகக் கொண்டு அவனுக்கு ஒரு துன்பம் வந்தால் கரைந்தேங்கவும், அவனுக்கு இன்பம் மிகுந்தால் குதுகலிக்கவும் ப்ராப்தமாயிருக்க, ஆபாஸபந்துக்களுக்காகச் சிலர் வயிறு பிடிப்பதும், பகைமை பாராட்டிச் சிலர் முறுவலிப்பதும் ஆழ்வார்க்கு அஸஹ்யமாயிருக்கிறது.

* ஸதைகரூபரூபாய * என்கிறபடியே எப்போதும் ஒருபடிப்பட்டிருக்கிற எம்பெருமானுக்கும் துன்பம் விளைவதும் இன்பம் மிகுவதும் உண்டோவென்னில்; மங்களாசாஸநபரர்களுடைய கருத்தாலே உண்டென்க. அசுரர்கள் தலைப்பெய்யில் யவங்கொலாங்கொன்று ஆழுமென்னாருயிர்'' என்றும் ''அவத்தங்கள்விளையும் என் சொற்கொளந்தோ!'' என்றுமுள்ள பாசுரங்களை நினைப்பது.

இவையென்னவுலகியற்கை!=அவரவர்களுக்கு லாபநஷ்டங்கள் உன்னளவிலேயாகாதே புறம்பேயாம்படி இப்படியொரு லோகயாத்ரையைப் பண்ணிவைப்பாயோ பெருமானே! என்கிறார்.

''நான் பண்ணிவைத்ததுண்டோ? அவரவர்கள் பண்ணின கருமங்களின் பலன் தொடர்ந்து வருகிறவித்தனையன்றோ; நம்மால் வந்தது ஒன்றுமில்லை காணும்'' என்று எம்பெருமான் திருவுள்ளமாக; கண்ணா! கடல்கடைந்தாய்! என்று அவன் நெஞ்சிலேபடும்படி விளிக்கிறார். அவரவர்கள் பண்ணின கருமங்களின் பலனை அவரவர்கள் அநுபவித்தே தீரவேணுமாகில் உன்னுடைய க்ருபைக்கு இலக்குத்தான் எங்கே? என்கிறார் கண்ணா! என்பதனால். க்ருபையுடையவனைக் கண்ணுடையவனென்பர்களே. உன்னுடைய க்ருபைக்கு இலக்காக்க வேண்டியவர்களை லீலைக்கு விஷயமாக்கலாமோ பிரானே! என்கிறார். [கடல் கடைந்தாய்] உன்வடிவழகிலே சிறிதும் கண்செலுத்தமாட்டாதவர்களும், ப்ரயோஜநாந்தரமே கண்ணாயிருப்பவர்களும், காரியம் தலைக்கட்டினவாறே உன்னோடே எதிரம்பு கோப்பவர்களுமான தேவர்களுக்குச் சாவாமருந்து கொடுப்பதற்காகத் திருமேனி நோவக் கடல் கடைந்தவனல்லையோ நீ.

''ஆமாம்; தேவர்களுக்கு நாம் காரியம் செய்ததுண்டு; அவர்களுக்கு இச்சையாவது இருந்தது; அதுவுமில்லாதவர்களுக்கு என்னால் செய்யக் கூடியது ஒன்றுமில்லையே!'' என்று எம்பெருமான் திருவுள்ளமாக, ஆகில் இவர்கள் நடுவேயிராதபடி என்னை உன் திருவடிகளிலே சேர்த்துக்கொள்ளவேணுமென்றார்; 'உனகழற்கே வரும்பரிசு' என்னும்போதே, அப்படியே செய்கிறோமென்று எம்பெருமான் தலைதுலுக்க, ஆகட்டுமாகட்டுமென்று தலையாட்டும்படியாயோ என் நிலைமையுள்ளது; இனிக்காலதாமதம் செய்யலாகாது என்கிறார். தண்ணவாது—விளம்பம் செய்யாமல்; தண்ணுத்தல்—தாமதித்தல்.

சாமாறுபணி=சரீரம் முடிந்ததாம்படி பார்த்தருள் என்கை. சரீரவியோகந்தானே மோக்ஷமென்று சொல்லுகிற மதாந்தரஸ்தர்களைப் போலன்றியே, நித்யகைங்கர்யம்பண்ணி ஆனந்திப்பதே மோக்ஷமென்று உறுதிகொண்டிருக்கிற ஆழ்வார் இப்போது சரீரவியோகமாத்திரத்தைப் பண்ணிக்கொடுக்கும்படி ப்ரார்த்திப்பது ஏனென்னில்; இக்கொடியவர்களின் நடுவேயிருக்கிற இருப்புத் தவிர்ந்தால் போதும் என்பது இப்போதைய நினைவு போலும். (க)

சாமாறும்கெடுமாறும் தமருற்றார்தலைத்தலைப்பெய்து *
ஏமாறிக்கிடந்தலற்றும் இவையென்னஉலகியற்கை *
ஆமாறொன்றறியேன்நான் அரவணையாயம்மானே!
கூமாறேவிரைகண்டாய் அடியேனைக்குறிக்கொண்டே. (உ)

| | | | |
|---|---|---|---|
| சாம் ஆறும் | திடீரென்று மரண மடைவதும் | உற்றார் | உறவினர்களும் |
| கெடும் ஆறும் | பலவகைக்கஷ்டங்களையடைவதும் (இதுகாரணமாக) | தலைத்தலைப் பெய்து | ஒருவர்க்கொருவர் மேல் விழுந்து |
| தமர் | தாயாதிகளும் | | |

| | | | |
|---|---|---|---|
| ஏமாறி கிடந்து அலற்றும் இவை உலகு இயற்கை என்ன | ஏங்கிக்கிடந்து கதறும் படியான இந்த லோக யாத்ரைகள் என்னே! | உய்ய உபாயம் ஒன்று அறியேன் | உய்யும்வகையைச் சிறிதும் அறிகின்றிலேன்; |
| அரவு அணை யாய் அம்மானே! | சேஷசாயியான ஸ்வாமியே! | அடியேனை | இப்படிப்பட்ட அடியேனை |
| நான் | அடியேன் | குறிக்கொண்டு | திருவுள்ளம் பற்றி |
| | | கூடும் ஆறு | (திருவடிவாரத்திலே) அழைத்துக் கொள்ளும்படி விரைந்தருளவேணும். |

* * *—கீழ்ப்பாட்டில் "எண்ணாராத்துயர்" என்று ஸமுதாயமாகச் சொன்னதைச் சிறிது விவரித்து, இப்படி இவர்கள் படுகிறதுக்கங்களைப் போக்கியருளமாட்டாயாகில், என்னையாவது உன் திருவடிவாரத்திலே அழைத்துக்கொண்டருளவேணுமென்கிறார்.

சாமாறும்—வெகுநாளைக்கு ஜீவித்திருக்கப்போகிறதாகப் பாரித்திராநிற்கையில் இடி விழுந்தாற்போலே திடீரென்று ஸம்பவிக்கிற மரணமும். இவ்விடத்தில் "ராத்ரிர் கமிஷ்யதி பவிஷ்யதி ஸுப்ரபாதம் பாஸ்வாநுதேஷ்யதி ஹஸிஷ்யதி பங்கஜஸ்ரீ: । இத்தம் விசிந்தயதி கோஸகதே த்விரேபே ஹா ஹந்த ஹந்த! நளிநீம் கஜ உஜ்ஜஹார—ராத்ரிர் கமிஷ்யதி பவிஷ்யதி ஸுப்ரபாதம் பாஸ்வாநுதேஷ்யதி ஹஸிஷ்யதி பங்கஜஸ்ரீ:, இத்தம் விசிந்தயதி கோஸகதே த்விரேபே ஹாஹந்த! ஹந்த! நளிநீம் கஜ உஜ்ஜஹார." என்கிற ச்லோகம் காணத்தக்கது. (இதன் கருத்து.) ஒரு வண்டானது மாலைப்பொழுதில் ஒரு தாமரை மலரினுள்ளே புகுந்து மதுப்பருகத்தொடங்கியது; ஸூரியன் அஸ்தமித்தவாறேமலர் மூடிக்கொண்டது; இரவெல்லாம் வண்டு அதனுள்ளேயே கிடக்கவேண்டியதாயிற்று; கிடக்கும்போது, இரவுகழிந்து பொழுதுவிடியப்போகிறதென்றும் தாமரை மலரப் போகிறதென்றும், உடனே கிளம்பிச் சென்று குடும்பங்களோடே சேர்ந்து களிக்கப்பெறலாமென்றும் பாரித்துக்கொண்டிருந்தது; இருக்கையில், ஒரு காட்டானை திடீரென்று அத்தாமரையோடையிலிறங்கி அனைத்தையும் வேரற்றியாகப்பறித்துக் கபளீகரித்திட்டது என்கை. இந்தக்கணக்கிலே மனிசர்களுக்கு நேரும் மரணத்துன்பங்களும் பலபல.

கெடுமாறும்—பிறரைக் கெடுக்கவேணுமென்று கோலியிருக்குமவர்கள் தாங்களே கெட்டுப்போகிற விதங்களும் பலபல. ஒரு கள்வன் பிறர்மனையிலே புகுந்து திருடுவதாகச் சென்றான்; அங்கே அகத்துக்குடையார்கையிலே பிடியுண்டு பரிபவங்கள் பட்டுக்கிடக்கின்றான்; அதுவுமன்றியில் மற்றொரு கள்வன் இவன்றன் வீட்டிலே புகுந்து ஏற்கனவே இவன் பலகாலமாகக் களவுகண்டு திரட்டிவைத்திருந்த பொருள்களையெல்லாம் கவர்ந்து சென்றான். இப்படியாக உலகர் கெடுமாறுகள் வாசாமகோசரம்.

[தமருற்றார் இத்யாதி.] ஆழ்வார்க்குத் தமர்களும் ஸ்ரீவைஷ்ணவர்களேயாயிருப்பர்கள். உலகர்கள் சரீரஸம்பந்தத்தைப்பற்றிச் சிலரை ஞாதிகளென்றும் ஸம்பந்திகளென்றும் குலாவிப்போருவர்கள். அப்படிப்பட்ட உறவினர்கள் கீழ்ச்சொன்ன சாவுகளிலும் கேடுகளிலும் மேல்விழுந்து கிடந்து கூப்பாடு போடுவர்கள். ஆக இப்படிப்பட்ட உலகியற்கை என்னே! நெடுக ஜீவிக்க மநோரதியா நிற்கையில் முடிவது, நாலுகாசு கையிலேயுண்டானவாறே 'இது நமக்கு உண்டு' என்றிருக்க அது கெட்டுப்போவது, தேஹபந்துக்களையே தமக்கு ஸகலவித பந்துவுமாக நினைத்து இவற்றுக்கு ஒன்றுவந்தவாறே 'பட்டேன்! கெட்டேன்!' என்று கூப்பிட்டு அலற்றுகிறது, ஆகிய இவையுமொரு லோகயாத்ரையே! என்று ஆச்சரியப்படுகிறாராயிற்று.

இப்படிப்பட்ட ஆழ்வாரை நோக்கி எம்பெருமான் "ஆழ்வீர்! இவ்வுலகு எக்கேடு கெட்டால் உமக்கென்ன? அவர்களைப்போல் அலற்றும்படியான நிலையில் உம்மை நான் வைத்திருக்கவில்லையே!; என்னைச் சொல்லியலற்றும்படியாகவன்றோ உம்மை நான் வைத்திருப்பது; தளராதே கொள்ளும்" என்றருளிச்செய்ய; ஆமாறு ஒன்றறியேன் நான் என்கிறார். இந்த ப்ரக்ருதி மண்டலத்திலே என்னை வைத்திருக்கிறாயாகையாலே இது என்னை இனி எப்பாடு படுத்துமோவென்று மிக அஞ்சுகின்றேனென்கை. இந்த ஸம்ஸாரிகளுக்கும் உன்னோடு உறவு குறையற்றிருக்கவும் ப்ரக்ருதிக்கு வசப்பட்டிருத்தலாலன்றோ உன்னை யிழந்து படுகிறார்கள்; அந்த ப்ரக்ருதியில்தானே நீ என்னையும் வைத்திருக்கிறது; "ஆற்றங்கரை வாழ்மரம்போல் அஞ்சுகின்றேன்" என்றும், "காற்றத்திடைப்பட்ட கலவர் மனம்போல் ஆற்றத்துளங்காநிற்பன்" என்றும், "பாம்போடொரு கூரையிலே பயின்றாற்போல் தாங்காதுள்ளம் தள்ளும்" என்றும், "இருபாடெரி கொள்ளியினுள்ளெறும்பேபோல் உருகாநிற்குமென்னுள்ளம்" என்றும் ஞானிகள் கதரவேண்டும்படியான நிலத்திலே என்னை வைத்திருக்கையாலே இந்த ஸம்ஸாரிகளைப்போலே எனக்கும் என்ன ஆகுமோ! என்று அஞ்சவேண்டும்படியாயிராநின்றதே! என்றவாறு.

"ஆமாறொன்று அறியேன் நான்" என்றவிடத்தில் இன்னாருக்கு என்றில்லாமையாலே, இந்த ஸம்ஸாரிகளுக்கு ஆமாறு ஒன்று அறியேன் என்றுமுரைக்கலாம். இவர்களுக்கு இத்துயரம் நீங்கும் வழி அறிகின்றிலேன் என்க.

அரவு அணையாய்! = திருவனந்தாழ்வானொருவனையே * சென்றால் குடையாம் இருந்தால் சிங்காசனமாம் இத்யாதிப்படியே ஸகலவித கைங்கர்யங்களுக்கும் உரியவனாகக் கொள்ள வேணுமென்றொரு நிர்ப்பந்த முண்டோவென்று கேட்கிறபடி.

கூமாறு—கூவுமாறு என்றபடி. என்னை நீ அழைத்துக்கொள்ளும்படியாக என்கை. இவ்விபூதியிலே இங்ஙனே கதறுகிறவன் நானொருவனே யல்லது வேறொருவருமில்லை; ஆகையாலே என்னைப்பற்றி விசேஷித்துத் திருவுள்ளம்பற்ற வேணுமென்கிறார் அடியேனைக் குறிக்கொண்டே என்று. .... .... .... .... (௨)

கொண்டாட்டும்குலம்புனைவும் தமருற்றார்விழுநிதியும் *
வண்டார்பூங்குழலாளும் மனையொழியஉயிர்மாய்தல் *
கண்டாற்றேனுலகியற்கை கடல்வண்ணா ! அடியேனை *
பண்டேபோல்கருதாது உன்னடிக்கேகூய்ப்பணிகொள்ளே. (௩)

| | | | |
|---|---|---|---|
| கொண்டாட்டும் | (புதிதாகச் சிலர் ஏறிட்டுச் செய்கிற) கொண்டாட்டமும் | உயிர் மாய்தல் | (திடீரென்று) இறந்து போவதா |
| குலம் புனைவும் | இல்லாத குலத்தை ஏறிட்டுக் கொண்டு அஹங்கரிப்பதும் | உலகு இயற்கை கண்டு | இந்த லோகயாத்திரையைக் கண்டு |
| தமர் | தாயாதிகளும் | ஆற்றேன் | ஸஹிக்கமாட்டேன்; |
| உற்றார் | உறவினரும் | கடல் வண்ணா | கடல் வண்ணனான எம்பெருமானே! |
| விழு நிதியும் | அளவற்ற செல்வமும் | அடியேனை | அடியனான என்னை |
| வண்டு ஆர் பூ குழலாளும் | வண்டுகள் படிந்த பூக்கள் நிறைந்த கூந்தலையுடைய மனைவியும் | பண்டே போல் கருதாது | இத்தனை நாளும்போல் நினைத்திராமல் |
| மனை | வீடும் (ஆகிய இவை) | உன் அடிக்கே | உன் திருவடிவாரத்திலே |
| ஒழிய | தன்னைவிட்டு நீங்க | கூய் | அழைத்துக் கொண்டு |
| | | பணி கொள் | அடிமை கொண்டருளவேணும். |

* * *—இப்பாசுரத்திற்கு ஈடு முப்பத்தாறாயிரப்படி ஸ்ரீஸூக்திகள் இன்சுவையே வடிவெடுத்தவை. ஆசார்யர்களுக்கு சாஸ்த்ரார்த்த சிக்ஷணங்களிற்போலவே லோகரீதி வர்ணனங்களிலும் வல்லமை வியக்கத்தக்கதென்று அஸ்மதாசார்யரான அழகிய மணவாளச்சீயர் அருளிச்செய்யும்படி.

கோண்டாட்டும் = முன்பு இன்னானென்று தெரிந்துகொள்ள முடியாதபடி அபதார்த்த ப்க் கிடந்தவொருவன் நாலுகாசு கைப்பட்டவாறே நாலுபேர்களால் கொண்டாடப்படு வும்; அப்படிப்பட்ட கொண்டாட்டமும்.

குலம்புனைவும் = நாலுபேர்கள் கொண்டாடத் தொடங்கினபோதே தாம் அநாதி ாகவே பெரிய நற்குடிப்பிறப்புடையார் என்று காட்டிக்கொள்வதற்காக 'இன்ன திரு ம்சம்' என்று ஏறிட்டுக்கொள்ளப் புகுவர்களாம்; அங்ஙனே யொரு குலத்தைத் தொடுத்துக் காள்வதும்.

தமர்—ஏற்கனவே தாயாதிகளாயிருந்தாலுங்கூட 'இவனுடைய தாயாதியாக நம்மைச் சொல்லிக்கொள்வது நமக்கு நிறக்கேடு' என்று விட்டுத் தொலைவர்கள்; அப்படி விடப்பட்ட வன்தானே சிறிது செல்வம் பெற்றவாறே தாயாதிகளல்லாதாருங்கூட 'இவனுடைய ஞாதிக ாக நம்மைச் சொல்லிக்கொள்ளுதல் நமக்கு மேன்மை' என்று நினைத்து 'இவரும் நாங்களும் ஒரே குடும்பம்' என்று சொல்லி அணுகிப்போருவர்கள்.

உற்றார் = பெண்கொடுத்தல் கொள்ளுதல் முதலிய ஸம்பந்தங்கள் செய்து கொள்வதற் குத் தகுதியற்றவன் என்று முன்னம் கைவிடப்பட்டிருந்தாலும் இப்போதாக உறவுக்கு மேல்விழாநிற்பர்களாம்.

விழுநிதியும் = நாலுகாசு சேர்ந்தவிடத்தே பின்னையும் பத்தெட்டு காசுகள் வந்து சேருமே; அப்படியே சேர்ந்துசேர்ந்து சீரிய செல்வமாகும். அந்தச் செல்வத்திற்கு ஒரு விநியோகம் வேணுமே.—(இங்கே நம்பிள்ளையீடு;—) "நினைவின்றிக்கே யிருக்கச் செய்தே சருகிலே திரளுமாப்போலே சீரிய நிதி வந்து கைப்புகுருமே; அதுக்குப் போக்கடிகாணாமை யாலே செய்வதறியாமை அத்தையிட்டு ஒரு ஸ்த்ரீயை ஸ்வீகரிக்கும்; அவள் தான் *வண்டார் பூங்குழலாளாயிற்று; இவள் செவ்வியை வண்டே புஜித்துப் போமித்தனை போக்கித் தான் புஜிக்கமாட்டான். ஹோமயோக்யதை யில்லாத பருவத்திலேயாயிற்று ஸ்வீகரிப்பது."

மனையொழிய உயிர்மாய்தல் கண்டு = அவளும் தானுமாய் ஏகாந்தமாக இருக்கைக் கென்று ஒரு மாடமாளிகையைப் பல நிலமாகக் கட்டுவிப்பன்; ஆக இவை யெல்லாவற் றையும் விட்டு ஒருநாள் திடீரென்று மரணம் நேர்பட, அப்போதைய நிர்வேதங்கள் கண்டு பொறுக்கவொண்ணாதவையாயிருக்கும். இதுவரையில் ஒருவாறு இவ்விளிம்புகளை யெல்லாங் கண்டு பொறுத்திருந்தேனாகிலும் இனி ஒரு நொடிப்பொழுதும் ஆற்றகில்லேனாதலால் விரைந்து அடியேனைத் திருவடி சேர்த்துக்கொள்ளவேணு மென்றாராயிற்று. (௯)

கொள்ளென்றுகிளர்ந்தெழுந்த பெருஞ்செல்வம்நெருப்பாக *
கொள்ளென்றுதமம்மூடும் இவையென்னஉலகியற்கை ? *
வள்ளலே ! மணிவண்ணா ! உனகழற்கேவரும்பரிசு *
வள்ளல்செய்தடியேனை உனதருளால்வாங்காயே. (௰)

| | | | |
|---|---|---|---|
| கொள் என்று கிளர்ந்து எழுந்த | 'என்னைக்கொள் என்னைக் கொள்' என்று மேன்மேலும் பெருகித் தோற்றுகிற | கொள் என்று | அந்தச் செல்வத்தையே மேன் மேலும் கொள்ளும்படியாக |
| பெரு செல்வம் | பெரிய செல்வமானது | தமம் மூடும், இவை உலகு இயற்கை என்ன | தமோ குணம் மேலிட்டுச் செல்லு கின்ற இந்த லோகஸ்வபாவ மிருந்தபடி என்னே! |
| நெருப்பு ஆக | நெருப்புப்போல் ஸமூல நாசம் பண்ணாநிற்கச் செய்தேயும் (அதில் நசை யொழியாமல்) | வள்ளலே | மஹோதாரனே! |

| | | | |
|---|---|---|---|
| மணி வண்ணா | நீலமணிவண்ணனே; | வள்ளல் செய்து | —ஔதார்யத்தைக் காட்டி |
| உன கழற்கே வரும் பரிசு | உன் திருவடிவாரத்திலேயே வந்து சேரும்படி | உனது அருளால் | —உனது பரம க்ருபையாலே |
| அடியேனை | அடியேன் விஷயத்தில் | வாங்காய் | கைக்கொண்டருளவேணும். |

* * * [கோள்ளென்று கிளர்ந்து.] ஐச்வர்யமானது அநர்த்தஹேது என்பதைக் கட்கூடாகக் காணுநிற்கச்செய்தேயும், பின்னையும் மேல்விழுந்து அதிலே நசை பண்ணிப் போருகிற லோகயாத்ரையைக் காணப்போகிறதில்லையே! என்கிறார். நெருப்புக்கு ஆச்ரயாசம் என்று பெயர்; தனக்குப் பற்றுக்கோடான இடத்தையே கபளீகரிப்பது நெருப்பின் இயல்பு; அதுபோலவே செல்வமும் தான் பற்றுகிற இடத்தை வேரோடே அழிக்கவல்லது என்பதைக் கண்ணாரக் காணுநிற்கச் செய்தேயும்—என்பது முதலடியின் கருத்து. செல்வம் விஞ்சி ஜீவிக்கப் பெறுமவர்களே அச்செல்வமே காரணமாகப் பொறாமையாளர்கள் சித்திரவதம் செய்வது உலகவியற்கையாதலால் ஆழ்வார் இங்ஙனே யருளிச்செய்தது மிகப் பொருந்தும்.

நெருப்பாக என்றவிடத்தில் உம்மை தொக்கியிருப்பதாகக் கொள்ளவேணும்.

கோள்ளென்று தமமூடும்—"பகல்கண்ட குழியிலே இராவிழுவாரைப் போலே" என்று ஒரு த்ருஷ்டாந்தம் அடிக்கடி ஆசாரியர்கள் ஸாதிப்பதுண்டு; அதாவது, ஓரிடத்தில் ஒரு பெரிய பள்ளமிருக்கும்; அதனைப் பகலில் நன்றாகக் கண்டிருக்கச் செய்தேயும் இரவில் இருளிலே செல்லும்போது ஸஹஸா அதிலே விழுந்து படுவர்களாம்; அப்படியே செல்வம் விநாசஹேது என்பதை ஸ்பஷ்டமாகக் காணுநிற்கச்செய்தேயும் மீண்டும் அதனையே கொள்ளும்படியாக இப்படியும் ஒரு தமோகுணம்வந்து மூடுமோவென்று ஆழ்வார் வியக்கிறார். தமஸ் என்னும் வடசொல் தமமெனத்திரிந்தது.

வள்ளலே மணிவண்ணா—வள்ளல் என்றால் தாராளமாகக் கொடுப்பவன் என்று பொருள்; எதைக்கொடுப்பவனென்னில், மணிவண்ணா! என்கிற பதச் சேர்த்தியினால் தனது திருமேனியையே முற்றூட்டாக அநுபவிக்கக் கொடுப்பவனென்பது பெறப்படும். "மாணிக்கப் பண்டாரத்தையிறே ஔதார்யம் பண்ணிற்று" என்பது நம்பிள்ளையீடு. (௪)

வாங்குநீர்மலருலகில் நிற்பனவும்திரிவனவும் *
ஆங்குயிர்கள்பிறப்பிறப்புப் பிணிமூப்பால்தகர்ப்புண்ணும் *
ஈங்கிதன்மேல்வெந்நரகம் இவையென்னஉலகியற்கை ? *
வாங்கெனைநீமணிவண்ணா! அடியேனைமறுக்கேலே. (௫)

| | |
|---|---|
| வாங்கும் | உலகங்களை யெல்லாம் பிறகு தன் பக்கலிலே ஸம்ஹரித்துக் கொள்ள வல்லதான |
| நீர் | நீரிலே |
| மலர் | மலர்ந்த |
| உலகில் | பூமியின் கண் |
| நிற்பனவும் | ஸ்தாவரங்களும் |
| திரிவனவும் | ஜங்கமங்களுமான |
| ஆங்கு | அவ்வவ்விடங்களிலுள்ள |
| உயிர்கள் | பிராணிகள் |
| ஈங்கு | இப்புவியில் |
| பிறப்பு இறப்பு பிணி மூப்பால் | பிறப்பது இறப்பது வியாதி கொண்டிருப்பது கிழத்தனமடைவது ஆகிய இவற்றாலே |
| தகர்ப்புண்ணும் | வருந்திக்கிடக்கும்; |
| இதன் மேல் | இறந்தொழிந்தபின்போவென்னில் |
| வெம் நரகம் | கொடிய நரக வேதனையாம்; |
| இவை என்ன உலகு இயற்கை!—; | |
| மணி வண்ணா | நீலமணி வண்ணனே! |
| எனை | இத்துயரம் பொறுக்க மாட்டாத என்னை |
| வாங்கு | அங்கீகரித்தருளவேணும் |
| அடியேனை | உன்னடியனான என்னை |
| மறுக்கேல் | கலங்கப் பண்ண வேண்டா. |

* * *—பிறப்பது மிறப்பதுமாய் நோவுபட்டுத்திரிகிற இந்த ஸம்ஸாரிகள் நடுவில்நின்றும், இத்துன்பம் நடையாடாத தேசவிசேஷத்திலே யென்னையழைத்துக் கொண்டருள வேணுமென்கிறார்.

வாங்கு நீர்மலருலகில் என்பதற்கு இரண்டுபடியாகப் பொருள் கூறுவர்; (வாங்குதல் சூழ்தலாய்) நீர்வாங்கு—கடல்சூழ்ந்த, மலர்—விஸ்தீர்ணமான, உலகில், என்று ஒரு பொருள். மற்றொருபொருளாவது, காரியப்பொருள்களுக்கெல்லாம் காரணப் பொருளிலேயே லயமாகையாலேயே, * அவவனவ ஸஸஜஹ—அப ஏவ ஸஸர்ஜாதௌ* என்கிறபடியே முழு முதற்காரணமான நீரிலேயே காரியப் பொருள்களெல்லாம் லயமடைய வேண்டுகையாலும், மீண்டும் அதிலிருந்தே உத்பத்தியாகவேண்டுகையாலும், வாங்கும் நீர்—காரியப்பொருள்களையெல்லாம் தன்னிடத்தே சுருக்கிக்கொள்ளுமதான நீரில்நின்று, மலர்—மறுபடியும் உத்பவித்த, உலகில்; என்பதாம்.

இப்படிப்பட்ட வுலகத்திலே ஸ்தாவரஜங்கமாத்மகங்களான ஸகலப்ராணிகளும் அநுபவிக்கும் துயரங்கள் கண்கொண்டு காணவொண்ணாதவை; இதற்குமேல் கும்பீபாகம் முதலிய நரகங்களில் படும் யாதனைகளும் அளவிலாதவை; "நாமடித்தென்னையனேக தண்டம் செய்வதா நிற்பர் நமன்தமர்கள்" என்றும், "நமன்தமர்பற்றி நலிந்திட்டு இந்த ஊனே புகேயென்று மோதும்போது" என்றும், நமன்தமர்பற்றி யெற்றிவைத்து எரியெழுகின்ற செம்பினாலியன்ற பாவையைப் பாவீதழுவென மொழிவதற்கஞ்சி" என்றும் மஹான்கள் கூறுவர்கள். இவையெல்லாம் படுப்படியாயோ என்னை நீ இங்கு வைத்திருக்கின்றது? அந்தோ! இப்படியென்னைக் கலங்கப்பண்ணாதே சடக்கென திருவடி சேர்த்துக் கொள்ளவேணும்.

மறுக்கிவல்வலைப்படுத்திக் குமைத்திட்டுக்கொன்றுண்பர் *
அறப்பொருளையறிந்தோரார் இவையென்னஉலகியற்கை ? *
வெறித்துளவமுடியானே ! வினையேனைஉனக்கடிமை *
அறக்கொண்டாய் * இனிஎன்னாரமுதே ! கூயருளாயே. (௯)

மறுக்கி — பயமூட்டி
வல் வலை படுத்தி — தங்களது கொடிய வலையிலே சிக்கிக்கொள்ளும்படி செய்து
குமைத்திட்டு கொன்று — சித்ரவதம் பண்ணி
உண்பர் — தங்கள் வயிற்றை வளர்ப்பர்கள்;
அறம் பொருளை அறிந்து ஓரார் — தருமதத்துவத்தை யறிந்து கவனிப்பாரில்லை;
இவை என்ன உலகு இயற்கை!—;
வெறி துளவம் முடியானே — பரிமளம்மிக்க திருத்துழாயைத் திருமுடியிலணிந்துள்ளவனே
(இப்படிப்பட்ட ஒப்பனையழகைக்காட்டி)
வினையேனை — பாவியான என்னை
உனக்கு அற — உன் விஷயத்திலேயே அற்றுத்தீரும்படி
அடிமை கொண்டாய் — ஏற்கனவே அடிமை கொண்டிருப்பவனே!
என் ஆர் அமுதே — எனக்கு பரிபூர்ணமான அமுதமே!
இனி — உடனே
கூய் அருளாய் — அழைத்துக்கொண்டருள வேணும்.

* * * [மறுக்கிவல்வலைப்படுத்தி] பரமஹிம்ஸையே போதுபோக்கான இந்த லோகயாத்ரையை நான் காணாதபடி என்னையழைத்துக் கொண்டருளவேணுமென்கிறார். ஆழ்வார் திருப்புளியாழ்வாரடியிலே திருக்கண்களை மூடிக்கொண்டு எழுந்தருளியிரா நிற்கச்செய்தேயும் லோகயாத்ரை யுள்ளது உள்ளபடியுணர்ந்து பேசுகிறது என்னே! என்று வியக்கவேண்டும் படியிராநின்றது.

கையிலே நாலுகாசு உள்ளவர்களைக் கண்டால் அதைப் பறிக்கவெண்ணிச் சில உபாயங்கள் செய்வர்கள்; 'உன்னை இன்றைக்கும் இன்றைக்குமாக இன்னபடி செய்யக் கோலியிருக்கி

ருர்கள். என்று சில பொய்களைச் சொல்லி அச்சமுறுத்தித் தங்களிடத்தே நம்பிக்கையுண்டாய்ப் பொருள்களையெல்லாம் தங்களிடத்திலேயே கொண்டுவைக்கும்படியாகச் செய்து இப்படியாக வலையிலே அகப்படுத்திக்கொண்டு மரணாந்தமான ஹிம்ஸைகளையும் பண்ணி வயிறு வளர்ப்பர்கள் ஸம்ஸாரிகள்; தேஹத்திற்காட்டில் வேறுபட்டதான ஆத்மவஸ்து ஒன்று இருக்கின்றதே; அது படும்பாடு என்னாகுமோ! என்று சிறிதும் ஆராய்வாரில்லை; இப்படி ஒரு லோகயாத்ரையுண்டாயிருப்பதே! பிரானே. இக்கொடிய ஸம்ஸாரிகள் நடுவேயிருக்கிற என்னை உன்னுடைய பரமபோக்யதையைக்காட்டி ஏற்கனவே அடிமை கொண்டிருக்கிறாய்; இருந்தாலும் இந்நிலத்திலேயே இன்னமும் வைத்திடுவாயாகில் என்னை நீ அடிமை கொண்டதெல்லாம் பழுதாயொழியுமத்தனை; சப்தாதி விஷயப்ரவணராயிருக்கிற இவர்களிலே நானுமொருத்தனாய்த் தொலைந்து போவேனத்தனை; அங்ஙனம் போகாதபடி விரைந்து திருவடி சேர்த்துக்கொண்டருள வேணுமென்றாராயிற்று.

ஆயேயிவ்வுலகத்து நிற்பனவும்திரிவனவும்*
நீயேமற்றொருபொருளும் இன்றிநீநின்றமையால்*
நோயேமுப்பிறப்பிறப்புப் பிணியேயென்றிவையொழிய*
கூயேகொள்ளடியேனைக் கொடுவுலகம்காட்டேலே. (எ)

| | | | |
|---|---|---|---|
| இ உலகத்து | இந்த லோகத்தில் | நோய் மூப்பு பிறப்பு இறப்பு பிணி என்ற இவை ஒழிய | மனோவியாதி, கிழத்தனம், ஜனன மரணங்கள், சரீரபீடைகள் எனப்படுகிற இவை தொலையும்படி |
| நிற்பனவும் | ஸ்தாவரப் பொருள்களும் | அடியேனை | அடியனான வென்னை |
| திரிவனவும் | ஜங்கமப் பொருள்களும் | கூயே கொள் | அழைத்துக் கொண்டருள வேணும்; |
| நீயே ஆய் | நீயாகவே யிருந்து | கொடு உலகம் | கொடிய இவ்வுலகத்தை |
| மற்று ஒரு பொருளும் இன்றி | நீயல்லாத பொருள் வேறொன்றுமில்லாதபடி | காட்டேல் | இனிமேலும் காட்டவேண்டா. |
| நீ நின்றமையால்—நீயிருப்பதனாலே | | | |

* * *—"ஆழ்வீர்! உம்மை நானழைத்துக்கொள்வதென்று ஒன்றுண்டோ? பேறு உம்மதான பின்பு நீர்தாமே முயற்சிசெய்து வந்து சேரக்கடவீரத்தனை" என்று எம்பெருமான் திருவுள்ளமானதாகக்கொண்டு, ஸகல பதார்த்தங்களும் நீயிட்டவழக்கான பின்பு நீயே யுன்னைக்கிட்டும்வழி பார்த்தருளவேணுமென்கிறார்.

ஆயே! என்பதற்கு மூன்றுபடியாகப் பொருள் கொள்ளலாம்; தாயே! என்று எம்பெருமானை விளிக்கிறபடி; அந்தோ! என்றபடி; "இவ்வுலகத்து நிற்பனவுந் திரிவனவும் நீயே ஆய்" என்று மேலே கூட்டுகிறபடி.

"தேந விநா த்ருணக்ரமபி ந சலதி" என்கிறபடியே ஸகல ஜங்கமஸ்தாவரங்களையும் அநுப்ரவேசித்து ஆட்டிவைப்பவன் நீயேயானபின்பு எனக்கு நான் ஒரு நன்மைதேடிக்கொள்வதுண்டோ? பத்த ஸம்ஸாரிகளில் நின்றும் என்னை வேறுபடுத்தி முமுக்ஷுவாக ஆக்கிவைத்த நீயே முக்தனுமாக்கி வைத்தருளவேணும் என்றாராயிற்று.

மூப்பு பிறப்பு—மூப்புப்பிறப்பு என்று ஸந்தியாகவேண்டுமிடத்து 'மூப்பிறப்பு' என்றனது தொகுத்தல் புணர்ச்சி. "ஒண் சங்கதை வாளாழியான்" என்றவிடத்திற்போல.

பிணி—தாரித்ரியமுமாம்.

கொடுவுலகம் காட்டேல்=இவ்வுலகத்தின் கொடுமையைத் தவிர்த்து இவ்விபூதிதன்னையே நித்ய விபூதியாக்கிக் காட்டித்தரவல்லையேல் காட்டுவாயாக, என்பது உட்கருத்து. (எ)

காட்டிநீகரந்துமிழும் நிலநீர்தீவிசும்புகால் *
ஈட்டிநீவைத்தமைத்த இமையோர்வாழ்தனிமுட்டை *
கோட்டையினில்கழித்து என்னையுன்கொழுஞ்சோதியுயரத்து *
கூட்டரியதிருவடிக்கள் எஞ்ஞான்றுகூட்டுதியே. (உ)

(எம்பெருமானே)
நீ
ட்டி — படைக்கும்போது பிரகாசிப்பித்து
ரந்து — (பிரளய காலத்திலே) உள்ளே மறைத்து
மிழும் — மறுபடியும் வெளிப்படுத்துகின்ற
லம் நீர் தீ விசும்பு கால் — பஞ்ச பூதங்களையும்
ட்டி வைத்து — ஒன்றுகத் திரட்டி வைத்து
அமைத்த — ஒழுங்கு படுத்திய
இமையோர் வாழ் தனி முட்டை — பிரமாண்டமாகிற
கோட்டையினில்—கோட்டையில் நின்றும்
என்னை கழித்து—என்னை அப்புறப்படுத்தி
உன் — உன்னுடைய
கொழு சோதி உயரத்து — மிக்க வொளியுருவமாய் எல்லா வற்றினும் உயர்ந்ததான திரு நாட்டிலே
கூட்டு அரிய — கூடுதற்கரிதான
திருவடிக்கண் — திருவடிகளிலே
எஞ்ஞான்று — என்றைக்கு
கூட்டுதி — கூட்டிக்கொள்வாய்!.

* * *—'ஆழ்வீர்! நீர் விருப்பியபடியே நாம் செய்கிறோம் என்று எம்பெருமான் அருளிச்செய்ய, அது என்றைக்குச் செய்வதாகத் திருவுள்ளமோ ? என்கிறார்.

இப்போது ஆழ்வார் தாம் இருக்கப்பெற்ற பிரகிருதி மண்டலத்தின் தன்மையை முன்னிரண்டடிகளால் கூறுகின்றார். ஒரு காலத்திலே ஸ்ருஷ்டித்தும், ஒரு காலத்திலே பிரளயங்கொள்ளாதபடி உள்ளடக்கியும், மற்றொரு காலத்திலே மறுபடியும் வெளிப்படுத்தியும் போருகிற ஐந்து பூதங்களையும் பஞ்சீகரண ப்ரகாரத்தாலே திரட்டி, இவைகொண்டு நி சமைத் துவைத்த ப்ரஹ்மாண்டமாகிற கோட்டையில் நின்றும் என்னைப் புறப்படவிட்டு, ஸம்ஸார நாற்றம் தொட்டறியாததும் சுத்த ஸத்வமயமானதும் நிரவதிக தேஜோரூபமுமான பரமபதத் திலே திருவடிகளோடே சேர்த்துக்கொள்வது என்றைக்கோ? ஸ்ரீ பராங்குசனுக்கு ஒரு நாளிட்டுக்கொடுத்ததுபோலே அடியேனுக்கும் கொடுத்தால் ஆறியிருக்கத்தட்டில்லையே; இன் னநாளிலேயென்று ஒரு வார்த்தை யருளிச் செய்யவேணும் என்றாராயிற்று.

இப்பாட்டினிட்டிலே ஒரு வார்த்தை:—"பிள்ளை திருநறையூரரையர், ஒரு குருவி பிணைத்தபிணை ஒருவரால் அவிழ்க்கவொண்கிறதில்லை; ஒரு ஸர்வசக்தி, கர்மாநுகூலமாகப் பிணைத்தபிணையை அவனைக் கால்கட்டாதே இவ்வெலியெலும்பனான ஸம்ஸாரியால் அவிழ்த்துக் கொள்ளப்போமோ வென்று பணிப்பர்" என்பதாம்.

இமையோர்வாழ் தனிமுட்டை=பிரமன் முதலிய க்ஷேத்ரஜ்ஞவர்க்கங்கள் நிறைந்த அண்டம் என்றபடி. .... ... .... ... (அ)

கூட்டுதிநின்குரைகழல்கள் இமையோரும்தொழாவகைசெய்து *
ஆட்டுதிநீயரவணையாய் ! அடியேனுமஃதறிவன் *
வேட்கையெல்லாம்விடுத்து என்னையுன்திருவடியேசுமந்துழல *
கூட்டரியதிருவடிக்கள் கூட்டினைநான்கண்டேனே. (ங)

அரவு அணையாய் — சேஷசாயியான பெருமானே!,
நீ — நீ
நின் குரை கழல்கள் — (அபிமதரான சிலரை) ஆபரணத்வநி பொருந்திய உனது திருவடிகளிலே

| | | | |
|---|---|---|---|
| கூட்டுதி | சேர்த்துக் கொள்ளுகிறாய்; (திருவுள்ள மில்லையாகில்) | வேட்கை எல்லாம் விடுத்து | விஷயாந்தர விருப்பங்களெல்லா வற்றையும் கழித்து |
| இமையோரும் | (ஞானசக்திகள் நிறைந்திருக்கப் பெற்ற) தேவர்களும் | உன் திரு அடியே | உனது திருவடிகளையே |
| தொழா வகை செய்து | கண்டு அநுபவியாதபடி பண்ணி | சுமந்து உழல | நான் தலையால் சுமந்து திரியும் படி |
| ஆட்டுதி | அலைக்கின்றாய்; | கூட்ட அரிய திரு அடிக்கண் | துர்லபமான திருவடிகளிலே |
| அது | இப்படி எளியனாயும் அரியனாயு மிருக்கும் தன்மையை | கூட்டினை | சேர்த்துக் கொண்டாய்; |
| அடியேனும் | நானும் | நான் கண்டேன் | இதை ப்ரத்யக்ஷமாக அநுபவித்தேன். |
| அறிவன் | அறிந்தேயிருக்கின்றேன்; | | |
| என்னை | எனக்குண்டான | | |

* * * ஆழ்வாருடைய ஆர்த்திதீரும்படி பரமபதத்திலிருப்பைக் காட்டிக்கொடுக்க, அதுகண்டு தாம் களித்தமை கூறுகின்றது இப்பாசுரம். கூட்டுதிநின் குரைகழல்கள் = சிலரைத் திருவடி சேர்த்துக்கொள்ளத் திருவுள்ளம்பற்றினால், அவர்கள் எவ்வளவு தண்ணியர்களாயிருந்தாலும் தன்னுடைய சக்தியே காரணமாக அவர்களைத் திருவடி சேர்த்துக்கொள்ளுகிறா யென்கை. இன்னாரினையாரென்று பாராமல், உகந்தாரைத் திருவடி சேர்த்துக்கொள்ளுதல் உன்னுடைய இயல்வு என்றபடி.

இமையோரும் தொழாவகைசெய்து ஆட்டுதி = பிரமன் முதலிய பெரியோர்களேயாகிலும் உகப்புக்கு இலக்கு ஆகாதவர்களை வந்து கிட்டாதபடிபண்ணி அலைக்கின்றாயென்றபடி.

அடியேனும் அது அறிவன் = விருப்பமுண்டானால் சிலர்க்கு எளியனாகியும், விருப்பமில்லையாகில் சிலர்க்கு அரியனாகியும் போருகின்றாயென்கிற இந்த உன்படியை நான் அறிந்துகொண்டேயிருக்கின்றேன் என்று கூறின ஆழ்வாரை நோக்கி எம்பெருமான் 'ஆழ்வீர்! இப்போது நீர் அறிந்துகொண்டது என்ன?' என்று கேட்க; இப்போது என்னை நீ விஷயீகரிக்கத் திருவுள்ளம்பற்றினபடியாலே திருவடியோடே என்னைச் சேர்த்துக்கொண்டாயே! இதுதான் நான் கண்டது என்கிறார்.

வேட்கையெல்லாம் விடுத்து = இவ்வுலகில் என்னுடைய ஆசைக்கு இலக்காகாத பொருளே இல்லை; கண்டபொருள்களிலெல்லாம் 'எனக்கு, எனக்கு' என்றே ஆசைவைத்துப் போந்தேன்; அந்த ஆசைகளையெல்லாம் விடுவித்தருளினாய். அதுவன்றியும், [உன் திருவடியே சுமந்துழல] பாதாழ்வானுக்கு மரவடியைக்கொடுத்து உபசந்தனம் பண்ணினாப் போலன்றிக்கே ஸாக்ஷாத் திருவடிகளையே என்தலைமீது வைத்தருளினாய்; இதைக் கேட்டார்வாய்க் கேட்கையன்றிக்கே நான் அனுபவிக்கப் பெற்றேனாகையாலே அறிந்தேன்—என்றாராயிற்று.

கண்டுகேட்டுற்றுமோந்துண்டுழலும் ஐங்கருவி
கண்டவின்பம் * தெரிவரிய வளவில்லாச்சிற்றின்பம் *
ஒண்டொடியாள்திருமகளும் நீயுமேநிலாநிற்ப *
கண்டசதிர்கண்டொழிந்தேன் அடைந்தேனுன்திருவடியே. (௧0)

| | | | |
|---|---|---|---|
| ஒண் தொடியாள் | அழகிய கைவளைகளையுடையளாகிய | கண்டு கேட்டு உற்று மோந்து உண்டு உழலும் ஐங்கருவி கண்ட இன்பம் | காண்பது கேட்பது தொடுவது மோருவது உட்கொள்ளுவதாகிற வேலைகளைச்செய்து கொண்டு அலைகின்ற பஞ்சேந்திரியங்களுக்கும் வாய்த்த விஷய சுகங்களையும் |
| திரு மகளும் | பெரிய பிராட்டியாரும் | | |
| நீயுமே | அவளுடைய நாயகனான நீயுமே | | |
| நிலா நிற்ப கண்ட சதிர் | களித்து வாழ்கிற அழகிய இருப்பை | | |
| கண்டு | இப்போது காணப்பெற்று | | |

| | | | |
|---|---|---|---|
| வு அரிய / வு இல்லா / று இன்பம் | கைவல்ய ஸுகத்தையும் | உன் திரு / அடியே / அடைந்தேன் | உனது திருவடிகளை அடையவும் பெற்றேன். |
| ந்தேன் | தவிர்க்கப் பெற்றேன்; | | |

* * * கீழ்ப்பாசுரத்தில் ப்ரஸங்கித்தபேற்றை உகப்பின் மிகுதியாலே இன்னமும் ர்னியுரைக்கின்ருரிதில்.

ஒண்டொடியாள் திருமகளும் நீயுமே நிலாநிற்பக்கண்ட சதிர்கண்டு—கண்டுகேட்ற்று மோந்துண்டுழலுமைங் கருவிகண்ட வின்பமும் தெரிவரிய வளவில்லாச் சிற்றின்பமும் ழிந்தேன், உன்திருவடியே அடைந்தேன்—என்று அந்வயிப்பது.

“ வைகுண்டே து பரே லோகே ச்ரியா ஸார்த்தம் ஜகத் பதி: । ஆஸ்தே விஷ்ணுரசிந்த்யாத்மா =
வைகுண்டே து பரே லோகே ச்ரியா ஸார்த்தம் ஜகத் பதி:, ஆஸ்தே விஷ்ணுரசிந்த்யாத்மா.” என்கிறபடியே* தன் திருமாதுடனே தான் தனியரசாயுறைகின்ற விருப்பை எம்பெருமான் ஆழ்வார்க்குக் காட்டிக்கொடுத்தருளினதலால் “ஒண்தொடியாள் திருமகளும் நீயுமே நிலாநிற்பக்கண்ட சதிர்கண்டு” என்கிருர், தோடி என்று கைவளைக்குப்பெயர்; ஒளிபொருந்திய கைவளைகளையுடையவள் என்று பிராட்டிக்கு இவ்வடைமொழி கொடுத்ததனல், க்ஷணகாலமும் விட்டுப் பிரியாதவள் என்பது பெறப்படும். இவ்விடத்தில்—*யாமி நயாமீதி தவைவ வததி புரஸ்தாத் க்ஷணேந தந்வங்க்யா: । களிதாநி புரோவலயாநி அபராணி புநஸ் ததைவ தலிதாநி = யாமி ந யாமீதி தவே வததி புரஸ்தாத் க்ஷணேந தந்வங்க்யா:, களிதாநி புரோவலயாநி அபராணி புநஸ் ததைவ தலிதாநி,” என்ற சுலோகத்தின் தாற்பரியம் நினைக்கத்தகும். அதாவது, தலைமகன் தலைமகளைநோக்கி, ‘என் கண்மணி! நான் உன்னைப் பிரிந்து ஓர் ஊர்க்குச் செல்கின்றேன்’ என்று சொன்ன நொடிப்பொழுதிலேயே அவளது கையில் அணியப்பட்டிருந்த வளைகளில் முன்னேயிருந்த வளைகள் கழன்று கீழே வீழ்ந்தன. அதனைக்கண்ட கணவன் ‘இவள் நமது பிரிவைப் பொறுத்திருக்க மாட்டாதவளாகையாலே இவளைப் பிரிந்து நாம் வெளியேறலாகாது’ என்று நினைத்து உடனே ‘நயாமி’ என்றுன்; இதற்கு இரண்டுவகையான பொருள்: ந, யாமி என்று இரண்டு பதமாகக்கொண்டால் ‘நான்போகிறதில்லை’ என்று பொருள்படும்; ‘நயாமி’ என்று ஒரு சொல்வடிவமாகவே கொண்டால் உன்னையும் உடனழைத்துக் கொண்டு போகிறேன்’ என்று பொருள்படும். இரண்டுவகையான பொருளும் இங்குத்தலைமகனுக்கு விவக்ஷிதமே. நாயகிக்கு அச்சொல் செவிப்பட்ட நொடிப்பொழுதிலேயே, கையில்நின்றும் கழன்றவைபோக நின்ற வளைகள் படீல் என்று வெடித்துத்துகளாய் விழுந்தன என்பது மேற்காட்டிய சுலோகத்தின் கருத்து. நாயகனுடையபிரிவு ப்ரஸ்தாவத்தில் வந்த மாத்திரத்திலேயே உத்தம நாயகியினது உடல் மிகவும் மெலிந்துபோகும் என்பதும், அந்த விச்லேஷவார்த்தை மாறினவாறே உடம்பு பூரிக்குமென்பதும் உள்ளுறை. பெரிய பிராட்டியார்க்கு ஒருபோதும் பிரிவைப்பற்றின ப்ரஸ்தாவமேயில்லாமலிருக்குமாதலால் ஒண்தொடியாள் திருமகள் எனப்பட்டது.

“திருமகளும் நீயுமே நிலாநிற்ப” என்கிறது பொருந்துமோ? பல கோடி நூறாயிரம் நித்ய முக்தர்களும் அங்கு இருக்கும்போது “திருமகளும் நீயுமே” என்று பிரிநிலையேகாரம் இட்டுப்பேசுவது கூடாதே என்று சங்கைபிறக்கும்; இதற்குப்பரிஹாரமாக நம்பிள்ளை யருளிச்செய்வது காண்மின்;—“இருவருடையவும் அபிமானத்துக்குள்ளே த்ரிபாத் விபூதியாக அடங்கிக்கிடக்கும்; வாசல்தோறும் ஈச்வரர்கள் இங்கேயிறே.” என்பதாம். அங்கு நித்ய முக்தர்கள் சேஷத்வாநுஸந்தானமுறைப்பினல் தனிப்பட்டுத் தோன்றுமே திவ்யதம்பதிகளின்

அபிமானத்துக்குள்ளே அடங்கிக் கிடக்கின்றமையாலே அவர்களைப் பிரித்துச்சொல்லவேண்டிய அவசியமில்லை; இந்நிலத்தில் மனைதோறும் 'நானே கடவுள், நானே கடவுள்' என்றிருப்பதுபோல, திருநாட்டில் அஹம்பாவமடித்துத் திரிகிறவர் ஒருவருமில்லையாதலால் திவ்யதம்பதிகளைச் சொன்னதுவே போதுமென்றபடி.

நிலாநிற்ப=அழகுற நிற்ப. இந்த திவ்யஸேவையை இங்கே காட்டிக்கொடுக்கக் கண்டதனால் இந்நிலத்து விஷயபோகங்களையும் கைவல்ய மோக்ஷமென்கிற அல்பானந்தத்தையும் காரியமிழந்தேனென்கிறார். கண்ணாலே சில ரூபங்களைக் கண்டும், காதாலே சில சப்தங்களைக்கேட்டும், த்வகிந்திரியத்தாலே சிலவற்றைத் தொட்டும், மூக்காலே சிலவற்றை மோந்தும், நாவினால் சிலவற்றை உட்கொண்டும் இங்ஙனே பஞ்சேந்திரியங்களாலும் பெறப்படுகிற இஹலோக விஷய ஸுகங்களில் வெறுப்படைந்தேன். தெரிவரிய அளவில்லாச் சிற்றின்பம் என்பது கைவல்ய ஸுகத்தை. கீழ்ச்சொன்ன கண் முதலிய இந்திரியங்களினால் க்ரஹித்து அநுபவிக்க அரிதாகையாலே தெரிவரிய என்றது. நித்யமோக்ஷமாகையாலே அளவில்லா என்றது. பகவதநுபவத்தை யபேக்ஷித்து அற்பமாகையாலே சிற்றின்பம் என்றது. (க0)

திருவடியைநாரணனைக் கேசவனைப்பரஞ்சுடரை *
திருவடிசேர்வதுகருதிச் செழுங்குருகூர்ச்சடகோபன் *
திருவடிமேலுரைத்ததமிழ் ஆயிரத்துளிப்பத்தும் *
திருவடியேயடைவிக்கும் திருவடிசேர்ந்தொன்றுமினே. (கக)

திரு அடியை — ஸர்வ ஸ்வாமியாய்
நாரணனை — நாராயணனாய்
கேசவனை — கேசவனாய்
பரம் சுடரை — பரஞ்சோதியாயிருக்கிற எம்பெருமானை
திரு அடி சேர்வது கருதி — கிட்டியநுபவிக்க விரும்பி
செழு குருகூர் சடகோபன்;—
திரு அடி மேல் — அவனது திருவடிகளின் மீது
உரைத்த — அருளிச்செய்த
தமிழ் ஆயிரத்துள் இப்பத்தும்—;
திரு அடியே — அந்தத் திருவடிகளையே
அடைவிக்கும் — அடையப்பண்ணும்;
(ஆதலால், நீங்கள்)
திரு அடி சேர்ந்து — அந்தத் திருவடிகளைக் கிட்டி
ஒன்றுமின் — பொருந்தியிருக்கப் பாருங்கள்

* * *—[திருவடியை நாரணனை] இத்திருவாய்மொழியானது, தன்னைக் கற்பவர்களை அவன் திருவடிகளோடே சேர்விக்கும் என்று பயனுரைத்துத் தலைக்கட்டுகிறது. முதலடியில் திருவடி யென்றது ஸர்வஸ்வாமி யென்றபடி. கேசவன் என்ற திருநாமம் மூன்று வகையான பொருள்களைக் கொண்டிருக்கும். 1. சிறந்த மயிர்முடியையுடையவன். 2. கேசியென்னும்அசுரனை (ஸ்ரீ க்ருஷ்ணாவதாரத்தில்) வதஞ்செய்தவன். 3. பிரமனுக்கும் சிவபிரானுக்கும் நியாமகன்—என்பன மூன்று அர்த்தங்கள்.

இப்படிப்பட்ட எம்பெருமானுடைய திருவடிகளைச்சென்று கிட்டவேணுமென்கிற மனோரதத்தையுடையவராய் ஆழ்வார் அருளிச்செய்த ஆயிரத்துள் இப்பத்துப்பாசுரமும் சடக்கென பகவத் பாதாரவிந்த ப்ராப்தியைப் பண்ணுவிக்கும்; ஆகையாலே, பக்தர்காள்! நீங்கள் இங்குள்ளவளவும் இத்திருவாய்மொழியைக்கொண்டு அவனது திருவடிவாரத்திலே கைங்கரியம் பண்ணிப்போருங்கோள்—என்றதாயிற்று.

ஒன்பதாந் திருவாய்மொழி முற்றிற்று.
ஆழ்வார் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ:

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# பத்தாந்திருவாய்மொழி—ஒன்றுந்தேவுமுலகும்.



உரையவதாரிகை:—கீழ்த்திருவாய்மொழியிலே ஆழ்வார் தமக்கு ஸம்ஸாரிகளினிடையே ஸஹவாஸம் பொறுக்கமுடியாமல் பலவாருகக் கதற, ஒருவிதமாக அவருடைய ஆர்த்தியை மாற்றவேணுமென்று திருவுள்ளம்பற்றின எம்பெருமான், திருநாட்டிலே திருவுளும் தானுமாக இருக்கிற இருப்பை இங்கே இவர்க்குக் காட்டிக்கொடுத்தருள, இவரும் கண்டு ஒருவாறு களிக்கப்பெற்ருர்.

*கண்ணுளா கடல் கடைந்தாய் உனகழற்கே வரும் பரிசு, தண்ணுவா தடியேனைப் பணிகண்டாய் சாமாறே* என்றும் *ஆமாருென்றறியேன் நான் அரவணையாயம்மானே!, கூமாறே விரைகண்டாய் அடியேனைக் குறிக்கொண்டே* என்றும் கல்லும் கரையும்படி ஆழ்வார் கூப்பிடாநிற்கச்செய்தேயும் எம்பெருமான் இவரை இந்நிலத்திலேயே வைத்திருப்பதற்குப் பல ஹேதுக்கள் உண்டு; ஆழ்வாரைக்கொண்டு உபதேசங்கள் பண்ணுவித்து நாட்டைத் திருத்தவேணுமென்பது ஒரு ஹேதுவாகையாலே, அதனை எம்பெருமான் ஆழ்வார்க்கு ஒருவாறு நினைப்பூட்டினன்போலும் ஆழ்வாரும் எம்பெருமானுடைய நியமனத்தை நிறைவேற்றக்கருதி, பிரகிருதத்தில் எவ்விதமான உபதேசத்தைப் பண்ணலாமென்று பார்த்தார். உலகர் பெரும்பாலும் எம்பெருமானுடைய பரத்வத்தை அறியப்பெருதவர்களாயும் தேவதாந்தரங்கள்பக்கலிலே வியாமோஹம் கொண்டவர்களாயும் காணப்படுகையாலே இவர்களுக்கு எம்பெருமானுடைய பரத்வத்தையும் இதரதெய்வங்களின் நிஹீநத்வத்தையும் நன்கு உணர்த்திேனுமாகில் இவர்கள் திருந்தி ஸம்ஸாரம் அடியறக்கூடும் என்று திருவுள்ளம் பற்றி அங்ஙனே உபதேசித்தருளுகிருர் இத்திருவாய்மொழியாலே.

கீழே * உயர்வறவுயர்நலம் * திண்ணன்வீடு * முதலான திருவாய்மொழிகளிலும் எம்பெருமானுடைய பரத்வத்தை அருளிச்செய்திருந்தாலும், இத்திருவாய்மொழி அர்ச்சாவதாரத்திலே பரத்வத்தை முதலிக்கிறதாகையாலே வீறுபெற்றிருக்கும். திருக்குருகூர் என்கிற ஆழ்வார் திருநகரியில் கோயில் கொண்டிருக்கும் எம்பெருமானுக்கு ஆதிநாதப் பெருமாள் என்று திருநாமமாகையாலே, ஸகலஜகத்காரணபூதன் என்கிற அத்திருநாமத்தை ஸாற்றித் திருக்கின்ற இப்பெருமான் பக்கலிலே பரத்வத்தை எடுத்துரைக்கப் பாங்காயிருக்குமென்று திருவுள்ளம் பற்றிஞராயிற்று.

உலகுக்கெல்லாம் முழுமுதற்காரணமான பொருள் எதுவோ அதுவே பரதெய்வமென்றும் அதுவே உபாஸிக்கத் தகுந்ததென்றும் உபநிஷத்துக்கள் முறையிடுகின்றன. இனி, எந்தெய்வம் முழுமுதற்கடவுள் என்று ஆராய்ந்து பார்க்குமிடத்தில், இதை சாஸ்த்ரங்களைக் கொண்டே அறுதியிடவேணும். அப்படி சாஸ்த்ரங்களைக்கொண்டு பரிசீலனை செய்வதற்கு முன்னே எம்பெருமானுடைய திருமேனியின் அமைப்பு இருக்கும்படியை நோக்கின மாத்திரத்திலும் இவனே ஸகலகாரண பூதனென்னுமிடம் எளிதில் அறியக்கூடியதாயிருக்குமென்று இவ்வாழ்வார்தாமே பெரிய திருவந்தாதியில் ஒரு பாசுரத்தாலே வெகு அழகாக அருளிச்செய்தார்; அதாவது—(72) "முதலாந்திருவுருவம் மூன்றென்பர், ஒன்றே முதலாகும் மூன்

றக்குமென்பர்—முதல்வா, நிகரிலகு காருருவா நின்னகத்ததன்றோ, புகரிலகு தாமரையின் பூ" என்பதாம். அரி அயன் அரன் என்கிற மும்மூர்த்திகளும் பரஸ்பரம் ஏற்றத்தாழ்வு இன்றியே ஒத்திருப்பரென்று சிலர் கூறுவர்; மேற்கூறிய மும்மூர்த்திகளிற்காட்டில் வேறுபட்ட நான்காவது தத்துவம் ஒன்றுண்டு என்றும், அதுவே இம்மூன்று தத்துவங்கட்கும் நிர்வாஹகமானது என்றும் சிலர் கூறுவர்கள்; இங்ஙனே அவரவர்கள் சொல்லுவதெல்லாம் தகுதியற்றது என்பதை எம்பெருமானே! உனது திருநாபியில் தோன்றியுள்ள தாமரைப்பூவே அறுதியிட்டுக்காட்டாநின்றது—என்பது மேலெடுத்துக்காட்டிய பாசுரத்தின் கருத்து. சிவன் பிரமனிடத்துத் தோன்றியவனென்றும் அந்தப் பிரமன் கமலத்துத் தோன்றியவனென்றும், அக்கமலம் திருநாபியிலுள்ள தென்றும், அந்தத் திருநாபி ஸ்ரீமந்நாராயணனுடையதென்றும் அறியப்பெற்றால் அந்த ஸ்ரீமந்நாராயணனே ஸகலஜகத்காரணபூத பரதேவதையாவன் என்னுமிடம் எளிதில் அறியலாம் என்று நிரூபித்துக்காட்டியவாறு.

இனி வேதாந்தங்களினுட்புகுந்து பரிசீலனை செய்தால், ஸகல ஜகத்காரண பூதமான தெய்வம் இன்னதென்பதை அறுதியிடும்வழி எங்ஙனேயென்னில், சாந்தோக்யமென்னும் உபநிஷத்தில் * ஸதேவ ஸோம்யேதமக்ர ஆஸீத் * என்கிற வாக்யமானது காரணபூதமான வஸ்துவை ஸத் என்ற சப்தத்தாலே ஓதிற்று; இது ஸாமாந்ய சப்தமேயல்லது விசேஷசப்தமன்று; மற்றொரு உபநிஷத்து * ஆத்மா வா இதமேக ஏவாக்ர ஆஸீத் என்று ஆத்ம சப்தத்தாலே ஓதிற்று; இதுவும் விசேஷசப்தமன்று மற்றொரு உபநிஷத்து * ப்ரஹ்ம வா இதமேகமேவாக்ர ஆஸீத் என்று ப்ரஹ்ம சப்தத்தாலே ஓதிற்று; இதுவும் விசேஷசப்தமன்று. கடைசியாக மஹோபநிஷத்திலே * ஏகோ ஹ வை நாராயண ஆஸீத் ந ப்ரஹ்மா நேஶாநோ நேமே த்யாவாப்ருதிவீ * என்று நாராயண சப்தத்தாலே ஜகத்காரணபூதமான வஸ்து ஓதப்பட்டிருக்கிறது. இந்த நாராயண சப்தமானது ஸத்சப்தம் போலவும் ஆத்மசப்தம் போலவும் ப்ரஹ்மசப்தம்போலவுமன்றிக்கே விசேஷசப்தமாகையாலே கீழெடுத்த ஸாமாந்ய சப்தங்களெல்லாம் இந்த விசேஷ வ்யக்தியிலே பர்யவஸித்து நின்று நாராயணனே ஸகலஜகத்காரணபூதன் என்று காட்டி அவன்றன்னையே பரதெய்வமாக நிலைநாட்டுகிற்கும். இப்படி வேத வேதாந்தங்களிலே சிரமப்பட்டுப் பரத்வநிஷ்கர்ஷம் பண்ணப்படவேண்டிய பரமபுருஷன் திருக்குருகூரிலேயே * [illegible]—அர்ச்சயஸ் ஸர்வஸஹிஷ்ணுரர்ச்சகபராதீநாகிலாத்மஸ்திதி: * என்கிறபடியே எளியனாய்க்காட்சிதந்தருளாநிற்க இவனைப்பணிந்து உஜ்ஜீவித்துப்போகாதே அல்பதெய்வங்களைப் பணிந்து அநர்த்தப்பட்டுப்போகிறீர்களே! என்று தேவதாந்தரபரர்களைத் தட்டியுணர்த்துவது இத்திருவாய்மொழி.

உலகத்தில் பலர் பல சாஸ்த்ரங்களையும் கற்றுவைத்தும் 'பரதத்துவமின்னது' என்று துணியமாட்டாமல் கண்ட தெய்வங்களின் காலிலும் குனிகின்றார்கள்; நம் எம்பெருமானுடைய திருவடிஸம்பந்தம் பெற்றவர்கள் எத்தனையேனும் கல்வியறிவு இல்லாதவர்களாயிருந்தாலுங்கூட தேவதாந்தரங்களை அடுப்பிடுகல்லாக நினைத்திருப்பர்கள்; இதற்குக் காரணம்—பரமகாருணிகரான நம்மாழ்வார் * ஒன்றுந்தேவு மென்கிற இத்திருவாய்மொழியை அருளிச்செய்து வைத்ததேயாம்—என்று எம்பார் அருளிச்செய்வராம். ... ... (*)

ஒன்றுந்தேவுமுலகுமுயிரும்மற்றும் யாதுமில்லா
வன்று * நான்முகன்தன்னோடு தேவருலகோடுயிர்படைத்தான் *
குன்றம்போல்மணிமாடநீடு திருக்குருகூரதனுள் *
நின்றவாதிப்பிரான்நிற்க மற்றைத்தெய்வம்நாடுதிரே. (க)

| | | | |
|---|---|---|---|
| தேவும் | தேவர்களும் | நின்ற | சாஸ்த்ரங்களில் நிலைத்திருப்பவனுமான |
| உலகும் | அவர்களுக்கிருப்பிடமான உலகங்களும் | ஆதி பிரான் | ஆதிநாதனென்னும் எம்பெருமான் |
| உயிரும் | மனிதர் முதலிய பிராணிகளும் | குன்றம் போல் மணிமாடம் நீடு | மலைபோன்ற திருமாளிகைகள் உயர்ந்திருக்கப்பெற்ற |
| மற்றும் யாதும் | மற்றுமுள்ள எல்லாமும் | திரு குருகூர் அதனுள் | திருநகரியிலே |
| ஒன்றும் இல்லா அன்று | சிறிதுமில்லாத அந்த ஊழிக் காலத்திலே | நிற்க | காட்சிதந்து கொண்டிருக்கும் போது |
| நான்முகன் தன்னொடு | பிரமனையும் | மற்றைதெய்வம் | வேறுதெய்வங்களை |
| தேவர் | தேவதைகளையும் | நாடுதிர் ஏ | தேடியோடுகின்றீர்களே. |
| உலகு | உலகங்களையும் | | |
| உயிர் | பிராணிகளையும் | | |
| படைத்தான் | படைத்தவனும் | | |

* * *—ஸகலஜகத்காரணபூதனான ஸர்வேச்வரன் திருநகரியிலே எளியனாய்க் காட்சி தந்தருளாநிற்க, வேறு தெய்வத்தைத் தேடி யோடுகிறீர்களே! இது என்ன அறிவு கேடு! என்று வெறுக்கிறார்.

எம்பெருமானுடைய ஜகத்காரணத்வத்தை மூதலிப்பன முன்னடிகள். ஒன்றும் என்பதை மேலுள்ள தேவும் இத்யாதிகளுக்கு விசேஷணமாக அந்வயிப்பதும், "தேவுமுலகு முயிரும் மற்றும்யாதும் ஒன்றும் இல்லாவன்று" என்று அந்வயித்து உரைப்பதும் பொருந்தும். விசேஷணமாக அந்வயிப்பதனால், ஒன்றுதல்—பொருந்துதலாய், அதாவது லயிப்பதாய், * தஃ [illegible] * என்கிறபடியே, கார்யத்திற்குக் காரணத்திலே லயமாகச் சொல்லுகையாலே [illegible] பூதனான தன்பக்கலிலே சென்று ஒன்றுகிற [அதாவது, லயமடைகிற] தேவும்—தேவஜாதியும், உலகும்—அத்தேவர்களின் இருப்பிடங்களும், உயிரும்—மனிசர் முதலிய பிராணிவர்க்கமும், இப்படி பிரித்துப் பிரித்துச் சொல்லவேண்டாதபடி எதுவுமே இல்லாமலிருந்த ஊழிகாலத்திலே முந்துற முன்னம் நான்முகனைப்படைத்து, அவன் வழியாக தேவ ஜாதியையும் அவர்களுக்கு இருப்பிடமான லோகங்களையும் இவ்வருகே சேதநவர்க்கங்களையும் ஸ்ருஷ்டித்தானாயிற்று எம்பெருமான் என்றுகொள்க.

இங்கே நம்பிள்ளையீட்டில் விநோதமாக அருளிச்செய்வதொரு ஸ்ரீஸூக்திகாண்மின்;— "ஸர்வேச்வரன் சதுர்முகனை ஸ்ருஷ்டித்தான்; சதுர்முகன் பஞ்சமுகனை ஸ்ருஷ்டித்தான்; பஞ்சமுகன ஷண்முகனை ஸ்ருஷ்டித்தான்; ஆக இதுதான் பரம்பரமுகமாயிற்றுக் காணும்."

ஆக இப்படிப்பட்ட ஸர்வேச்வரன் உங்களுக்குக் கண்ணாலேகண்டு ஆச்ரயிக்கலாம்படி, மலைபோன்றழகியமணிமாடங்கள் உயர்ந்திருக்கிற திருநகரியிலே 'நம்மைக்காணவருவார் ஆரேனுமுண்டோ?' என்று நின்று நின்று எதிர்பார்த்திருக்க, வேறேயொரு தெய்வத்தை அந்தோ! தேடித்திரிகின்றீர்களே!

* வாஸுதேவம் பரித்யஜ்ய யோந்யம் தேவமுபாஸதே। த்ருஷிதோ ஜாஹ்நவீதீரே கூபம் கநதி துர்மதி:॥ வாஸுதேவம் பரித்யஜ்ய யோந்யம் தேவமுபாஸதே. த்ருஷிதோ ஜாஹ்நவீதீரே கூபம் கநதி துர்மதி: * என்கிற ச்லோகம் இவ்விடத்திற்குப் பொருந்த அநுஸந்திக்கத்தகும். தாஹித்தவன், கங்கை பெருகியோடுமிடத்திலே அதிலே அள்ளிக் குடித்துத் தன் விடாய் தீரமாட்டாதே அதன் கரையிலே குந்தாலிகொண்டு கிணறுகல்ல முயலுமா போலே இருந்தது இவர்களுடையபடி. திருமாலையில் "கேட்டிரே நம்பிமீர்காள்! கெருடவாகனனும் நிற்கச், சேட்டைதன் மடியகத்துச் செல்வம்பார்த் திருக்கின்றீரே." என்ற பாசுரமும் இங்கு நினைக்கத்தகும்.

திருக்குருகூர்—இது பாண்டிநாட்டுத் திருப்பதிகள் பதினெட்டில் ஒன்று; ஆழ்வார் திருநகரியென வழங்கப்படுமது. குருகாபுரீ [குருகாபுரி] என்பது வடமொழிவழக்கு.

நாடிநீர்வணங்கும் தெய்வமும் உம்மையும்முன்படைத்தான் *
வீடில்சீர்புகழாதிப்பிரான் அவன்மேவியுறைகோயில் *
மாடமாளிகைசூழ்ந்தழகாய திருக்குருகூரதனை *
பாடியாடிப்பரவிச்சேன்மின்கள் பல்லுலகீர்! பரந்தே. (உ)

| | |
|---|---|
| பல் உலகிர் | பலவகைப்பட்ட உலகர்களே! |
| நீர் | நீங்கள் |
| நாடி | தேடி |
| வணங்கும் | வணங்கும்படியாயுள்ள |
| உம்மையும் | உங்களையும் |
| முன் படைத்தான் | முன்னம் படைத்தவனும் |
| வீடு இல் சீர் | நித்யஸித்தங்களான திருக்குணங்களாலுண்டான |
| புகழ் | புகழையுடையனுமான |
| ஆதி பிரான் அவன் மேவி உறைகோயில் | ஆதிநாதன் விரும்பி யெழுந்தருளியிருக்குமிடமான |
| மாடம் மாளிகை சூழ்ந்து அழகு ஆய திரு குரு கூர் அதனை | மாடமாளிகைகளால் சூழப்பட்டு அழகு வாய்ந்த திருநகரியை |
| பாடி ஆடி | பாடுதலும் ஆடுதலும் செய்து கொண்டு |
| பரவி | |
| பரந்து செல்மின்கள் | எல்லாவிடத்திலும் பரவி நடவுங்கள். |

* * * உலகர்களே! நீங்கள் எந்த தெய்வங்களைப் பணிகின்றீர்களோ, அந்த தெய்வங்களோடு உங்களோடு ஒரு வாசியில்லை; நீங்கள் எப்படி கார்யபூதர்களோ அப்படியே அவர்களும் கார்யபூதர்களேயல்லது காரணபூதர்களல்லர்; ஆகையாலே, அவர்களை நீங்கள் ஆச்ரயிப்பது போல உங்களையும் அவர்கள் ஆச்ரயிக்கலாம். உங்களைக்காட்டிலும் அவர்களுக்குச் சிறிது ஞானமும் சக்தியும் ஏறியிருக்கிறது என்கிற இவ்வளவேயல்லது வேறொரு வாசியில்லைகிடீர்; உங்களோடு அவர்களோடு வாசியற அனைவர்க்கும் காரணபூதனான ஸ்ரீமந்நாராயணன் காட்சி தந்தருளுமிடமாகிய திருநகரியைப் பணியுங்கோளென்கிறார்.

நீர்நாடிவணங்கும் தெய்வமும்—நாடுதலாவது தேடுதல்; உங்களால் தேடிவணங்கப்படுகிற தெய்வங்களையும் என்றபடி. சாஸ்த்ரங்களானவை *ஸோऽந்வேஷ்டவ்யஸ்ஸ விஜிஜ்ஞாஸிதவ்ய:* என்று பரமபுருஷனைத் தேடவேண்டுமென்று சொல்லாநிற்க, அந்தோ! நீங்கள் காபுருஷர்களைத் தேடி யோடுவதே! என்று கர்ஹிக்கிறபடி. எம்பெருமான் உங்களைத் தேடாநிற்க, நீங்கள் நீசர்களைத்தேடியோடாநின்றீர்களே! என்றுமாம்.

இங்கே நம்பிள்ளையீடு;—"கள்ளரைத் தேடிப்பிடிக்குமாபோலே தேடிப் பிடிக்க வேண்டியிருக்கிறபடி; ஆடு திருடினகள்ளரிறே இவர்கள்தாம்".—ஜீவஹிம்ஸையையே ஆராதனமாகக்கொண்டிருக்கிற க்ஷுத்ர தெய்வங்களென்று காட்டினபடி.

வீடு இல் சீர்புகழ்=சீர் என்பதற்குச் செல்வம் என்கிற பொருளும் குணம் என்கிற பொருளும் உண்டு. ஒருநாளுங் குறையாத செல்வங்களையுடையவன் என்றும், நித்யஸித்தங்களான திருக்குணங்களையுடையவன் என்றும் கொள்க.

அவன்மேவியுறை கோயில் என்றவிடத்து நம்பிள்ளையீடு;—"அவன் பரமபதத்தில் உள்ளதுப்போடே போலேகாணுமிருப்பது; ஸம்ஸாரிகள் படுகிற க்லேசத்தை அநுஸந்தித்து 'இவை என்படுகிறனவோ' என்று திருவுள்ளத்தில் வெறுப்போடேயாயிற்று அங்கிருப்பது...

'பரமபதத்திலும் ஸம்ஸாரிகள் படுகிற க்லேசத்தை யநுஸந்தித்துத் திருவுள்ளத்தில் வெதுப் போடேயாயிற்று எழுந்தருளியிருப்பது' என்று பட்டர் அருளிச்செய்ய, ஆச்சானும் பிள்ளை யாழ்வானும் இத்தைக்கேட்டு 'பரமபதத்திலே ஆநந்த நிர்ப்பரனாயிருக்கிற விருப்பிலே திரு வுள்ளத்திலே ஒரு வ்யஸநத்தோடே யிருந்தானென்கை உசிதமோ?' என்றார்கள்—என்று பண்டிதரென்கிறவர் வந்து விண்ணப்பஞ்செய்ய, *வ்யஸநேஷு மநுஷ்யாணாம் ப்ருசம் பவதி துஃகிதஃ—வ்யஸநேஷு மநுஷ்யாணாம் ப்ருசம்பவதி து:க்கித:.* என்றது குணப்ரகரணத் திலேயோ தோஷப்ரகரணத்திலேயோ வென்று கேட்கமாட்டிற்றிலீரோ? இது குணமாகில் குணமென்று பேர் பெற்றவற்றில் அங்கில்லாததொன்றுண்டோ என்றருளிச்செய்தார்."

இந்த ஐதிஹ்யம் இங்கு அருளிச்செய்ய ப்ரஸக்தி ஏதென்னில்; மூலத்தில் "அவன் மேவியுறைகோயில்" என்றுள்ளது; மேவியுறைதலாவது ஆசையோடு வாழ்தல்; பரமபதத்தில் பட்ட துக்கம் இங்குத் தீரப்பெறுவோமென்று ஆசைப்பட்டு வாழ்தலென்றே பொருள் சொல்லவேண்டியிருத்தலால், பரமபதத்திலும் பெருமானுக்கு து:க்கப்ரஸக்தியுண்டோ வென்று சங்கையுண்டாகுமாதலால் அதைப்பரிஹரிக்க ஐதிஹ்யமருளிச் செய்தபடி.

எம்பெருமானை ஸமஸ்தகல்யாண குணாத்மகன் என்றும் *உயர்வறவுயர் நலமுடைய வன் என்றும் கூறுகின்றவர்கள், "ஒன்றொழியாமே ஸகலகுணங்களும் அப்பெருமானிடத்தே யிருக்கின்றன" என்று இசைந்தே தீரவேண்டும். ஒரு குணம் இல்லை செய்யப்பட்டாலும் *ஸமஸ்த கல்யாண குணாம்ருதோததி:* என்று சொல்வதற்குக் குறை நேர்ந்ததாகும். துக் கப்படுவதென்பது கல்யாணகுணமன்றே; அது ஹேய குணமாயிற்றே என்று சிலர் கலங்கு வர்கள்; ஸ்வார்த்தமான சோகம் ஹேயமேயல்லது பரார்த்தமான சோகம் ஹேயமே யன்று: அதுதான் சிறந்த குணமெனப்படும். ஆனதுபற்றியே இராமபிரானுடைய சுப குணங்களை யெடுத்துரைக்கின்ற அயோத்யாவாஸி ஜனங்கள் *வ்யஸநேஷு மநுஷ்யாணாம் ப்ருசம் பவதி து:க்கித:* என்றார்கள். எம்பெருமானாரும் ஸ்ரீபாஷ்யத்தில் *ஆச்ரித... வாத்ஸல்ய... என்றருளிச் செய்தார். ஸஹஸ்ரநாமத்திலே விகர்த்தா என்னும் திருநாமத்தின் பாஷ்யத்திலே "...ஸக்தஃ ..." (இதன் கருத்து) தமக்காக இன்பதுன்பங்கள் இல்லாமலிருந்தும் பிறர் இன்பதுன்பங்களை அநுபவிப் பதனால் தாம் இன்பதுன்பங்களையடைந்து விகாரப்படுகிறவர்; இந்த விகாரம் பிறரிடத்தி லுள்ள அன்புபற்றியதாதலால் ஈச்வரனுக்குக் குற்றமாகாது."—என்று பட்டர் ஸ்பஷ்ட மாகவே அருளிச் செய்தார்.

எம்பெருமான் அனுபவிக்கிறதாகச் சொல்லப்படுகின்ற துக்கம் மெய்யானதா, பொய்யானதா என்கிற விசாரமே அவசியமற்றது. எம்பெருமானென்று ஒருவனுளனென் றும் அவன்றான் சமஸ்த கல்யாணகுணநிதியென்றும் இசைகின்றவர்கள் அப்பெருமானைப் பரதுஃக்க துஃக்கியாக இசைந்தேதீரவேணும். இக்குணம் அவனுக்குப்பொருந்தாது என்ப வர்கள் நிர்க்குணப்ரஹ்மவாதிகளேயாவர். ...

முதற்பாட்டில் "திருக்குருகூரதனுள் நின்றவாதிப்பிரான்" என்று எம்பெருமானள வுஞ்சென்று பேசின ஆழ்வார் இப்பாட்டில் "திருக்குருகூரதனைப் பாடியாடிப் பரவிச்சென் மின்கள்" என்கிறார்; எம்பெருமானிற்காட்டிலும் அவன் உகந்தருளினவிடமே பரமப்ராப்யம்

என்று காட்டினபடி. திவ்யதேசத்திலே சென்று சேர்ந்து சேவிப்பதினுங்காட்டில் வழிப் போக்குத்தானே மிக இனிதாகையாலே பாடியாடிப் பரவிச்சென்மின்கள் என்கிறார்.

பரந்தே என்றவிடத்து ஈடு;—"பெரிய திருநாளுக்கு ஸர்வதோதிக்க [ஸர்வதோதிக்க] மாக வந்தேறுமாபோலே நாநாதிக்கமாகப் பாடியாடிப் பரவிச்சென்மின்கள்." (உ)

பரந்ததெய்வமும்பல்லுலகும்படைத்து அன்றுடனேவிழுங்கி *
கரந்துமிழ்ந்துகடந்திடந்தது கண்டும்தெளியகில்லீர் *
சிரங்களாலமரர்வணங்கும் திருக்குருகூரதனுள் *
பரன்திறமன்றிப்பல்லுலகீர் ! தெய்வம்மற்றில்லைபேசுமினே * (ங)

| | |
|---|---|
| பரந்த | விஸ்தீர்ணமான |
| தெய்வமும் | தேவதாவர்க்கங்களையும் |
| பல் உலகும் | (அவர்களுக்குப்) பல உலகங்களையும் |
| படைத்து | ஸ்ருஷ்டித்தும், |
| அன்று | பிரளயம் வந்த காலத்திலே |
| உடனே விழுங்கி | எல்லாவற்றையும் ஒரு சேர விழுங்கி |
| கரந்து | உள்ளே யொளித்து வைத்தும், |
| உமிழ்ந்து | பிறகு வெளிப்படுத்தியும் |
| கடந்து | (மஹாபலியிடத்தில் தானம் பெற்று) அளந்துகொண்டும் |
| இடந்தது | (மஹாவராஹமாய்) இடந்தெடுத்தும் ஆக இப்படிச்செய்த காரியங்களை |
| கண்டும் | பிரமாணங்களாலே கண்டறிந்து வைத்தும் |
| தெளிய கில்லீர் | தெளியமாட்டாத |
| பல் உலகீர் | பலவகைப்பட்ட உலகத்தவர்களே! |
| அமரர் | தேவர்கள் |
| சிரங்களால் வணங்கும் | தலையால் வணங்கப் பெற்ற |
| திரு குருகூர் அதனுள் | திருநகரியில் எழுந்தருளியிருக்கிற |
| பரன் | பரம புருஷனுக்கு |
| திறம் அன்றி | பிரகாரமாயல்லது |
| மற்று | வேறு ஸ்வதந்திரமாயிருப்பதொரு |
| தெய்வம் இல்லை | தேவதை கிடையாது; |
| பேசுமின் | அப்படிப்பட்ட தேவதையொன்று உண்டாகில் சொல்லுங்கள். |

* * * உலகங்களை ரக்ஷித்தருள்வதற்காக எம்பெருமான் செய்து போரும் செயல்களை ஆராய்ந்து பார்த்தாலும் இவனே பரம புருஷனென்று அறியப்போதுமென்கிறார்.

தேவவர்க்கம் முதற்கொண்டு பலவுலகங்களையும் படைத்ததும், *மண்ணாடும் விண்ணாடும் வானவரும் தானவரும் மற்றுமெல்லாம் உண்ணாத பெருவெள்ள முண்ணாமல் தான்விழுங்கி உய்யக்கொண்டதும், பிறகு வெளிநாடுகாணப் புறப்படவிட்டதும், வாமனாவதாரம் பண்ணி மூவடிநீரேற்றுப்பெற்று அளந்து கொண்டதும், மஹாவராஹமாய் அண்டபித்தியில் நின்றும் ஒட்டு விடுவித்தெடுத்துக்கொண்டதுமாகிய இத்தகைய செயல்களைக் கொண்டே இவனே பர தேவதை என்று திண்ணமாக எண்ணலாயிருக்க, அந்தோ! தெளிவுபெற மாட்டிற்றிலீரே என்கிறார் முன்னடிகளில்.

எந்த தெய்வங்களை நீங்கள் சென்று பணிகின்றீர்களோ அந்த தெய்வங்களும் வந்து தலையாலே வணங்கும் திருக்குருகூரில் பரத்வம் பொலிய நிற்கும் பெருமானுக்குச் சீரமல்லாத தெய்வம் ஒன்றுண்டோ?* ஸ்ருக்கா ஸம்ஹா ந்ருந்ராதெவதா: என்னும்படியாக வன்றோ ஸகல தெய்வங்களுமிருக்கின்றன. ஸ்ரீமந் நாராயணனைப்போலே ஸ்வதந்த்ரமான தெய்வம் ஒன்றுண்டாகில் எடுத்துப் பேசுங்களென்கிறார். (ங)

பேசநின்றசிவனுக்கும்பிரமன்தனக்கும் பிறர்க்கும்
நாயகனவனே * கபாலநன்மோக்கத்துக்கண்டுகோண்மின் *
தேசமாமதிள்சூழ்ந்தழகாய திருக்குருகூரதனுள் *
ஈசன்பாலோரவம்பறைதல் என்னாவதிலிங்கியர்க்கே ? (ச)

| | | | |
|---|---|---|---|
| பேச நின்ற | உங்களால் பரதெய்வமாகப் பேசப்படுகின்ற | தேசம் | [illegible] |
| சிவனுக்கும் | ருத்ரனுக்கும் | மா | சிறந்த |
| பிரமன் தனக்கும் | (அவனது தந்தையான) பிரமனுக்கும் | மதிள் சூழ்ந்து | மதில்களால் சூழப்பட்டு |
| பிறர்க்கும் | மற்றுமுள்ள தேவதைகளுக்கும் | அழகு ஆய | அழகு பெற்றதான |
| நாயகன் அவனே | தலைவன் ஸ்ரீமந்நாராயணனே என்றுமிடத்தை | திரு குருகூர் அதனுள் | திருநகரியில் எழுந்தருளியிருக்கிற |
| கபாலநன் மோக்கத்து | கபாலமோக்ஷக்கதையினால் | ஈசன் பால் | ஸர்வேச்வரன் விஷயத்திலே |
| கண்டுகொண்மின் | தெரிந்துகொள்ளுங்கள்; | ஓர் அவம் பறைதல் | தப்பான பேச்சுக்களைப் பேசுவது |
| | | இலிங்கியர்க்கு | லிங்கப்ரமாண வாதிகளுக்கு |
| | | என் ஆவது | என்னபலனைத்தரும் !. |

*** அநுமானத்தாலே ஈச்வரனை ஸாதிக்கவிரும்புகின்றவர்களும் பசுபதியே ஸர்வேச்வரனென்று கூறுபவர்களுமான சிலரை இப்பாசுரத்தாலே நிராகரித்தருளுகிறார். இலிங்கியர்க்கு என்றது ஹேதுவாதிகளுக்கு என்றபடி; அநுமானத்தைக் கொள்பவர்களே ஹேதுவாதிகளாவர்கள். சப்தப்ரமாணமான சாஸ்த்ரத்தின் முன்னே வேறு எந்த ப்ரமாணமும் நிற்கமாட்டாதாகையாலே அந்த சாஸ்த்ரப்ரமாண விருத்தமாக இலிங்கியர் பேசுவது பொருளற்றது என்று நிரூபிக்கிறார். இலிங்கியர்—லிங்கவாதிகள்; லிங்கமாவது ஹேது; அநுமானமென்கை.

ஒருகாலத்திலே பரமசிவன் தன்னைப்போலவே பிரமனும் ஐந்து தலையுடையனாயிருப்பது பலரும் பார்த்து மயங்குதற்கு இடமாயிருக்கின்றதென்று கருதி அவனது சிரமொன்றைக் கிள்ளியெடுத்துவிட, அக்கபாலம் அப்படியே சிவன் கையில் ஒட்டிக்கொள்ளுதலும் அவன் 'இதற்கு என்செய்வது' என்று கவலைப்பட, தேவர்களும் முனிவர்களும், 'இப்பாவந்தொலைப் பிச்சையெடுக்கவேண்டும்; என்றைக்குக் கபாலம் நிறைபுமோ அன்றைக்கே இது கையைவிட்டு அகலும்' என்று உரைக்க, சிவபிரான் பலகாலம் பல தலங்களிலுஞ்சென்று பிச்சையேற்றுக்கொண்டே வருந்தித் திரிந்தும் அக்கபாலம் நீங்காதாக, பின்பு ஒருநாள் பதரிகாச்ரமத்தையடைந்து அக்கு எழுந்தருளியுள்ள நாராயணமூர்த்தியை வணங்கி இரந்தபோது அப்பெருமான் அக்ஷயம் என்று பிக்ஷையிட உடனே அதுநிறைந்து கையைவிட்டு அகன்றது என்பது கபாலநன்மோக்க வரலாறு. கொலையுண்பவனும் கொலை செய்பவனுமான பிரமனும் உருத்திரனும் பரதெய்வமாக இருக்கத்தகுதியுடையரல்லரென்பது இக்கதையினால் தெற்றெனவிளங்கும்.

வேதத்தில் *நஸஹ அாஸஷிவ ஊவ கெவஙஃ* என்றும் *ஊகஊவா—ெ.ா நஷிகீயாய தஸ்ரெ* என்றும், *ஹிரணத்ர ஹஹஃஷஉவதஃதாரெஹஃதவஸ்ஜாதஃ வதிரெக குஷீக்* என்றும் சொல்லியிருப்பவற்றைப் பற்றிக்கொண்டு சிலர் சிவனுக்குப் பாரம்யத்தையும் சிலர் பிரமனுக்குப் பாரம்யத்தையும் பேசுவதுண்டாதலால் ஆழ்வார் அதைத் திருவுள்ளம்பற்றிப் "பேசநின்ற சிவனுக்கும் பிரமன்றனக்கும்" என்கிறார். 'பேசநின்ற' என்பது சிவனுக்குப் போலவே பிரமனுக்கும் அடைமொழியாகத்தகும். சில மூலைகளிலே இவர்களுக்குப் பரத்வம் தோன்றும்படியான வசநவ்யக்திகள் இருந்தாலும் *ஹரஜதஸஹ்ஸ தெவஸ்ர வஓ ஸஙஃவஹஹூ। நாஹரம் விநிஸ்ரதம் வஙவஃ தத்ராதஃ விதாஉஹஃ—ஸ்ருஜதஸ் தஸ்ய தேவஸ்ய பத்மம் ஸூர்யஸமப்ரபம், நாப்யாம் விநிஸ்ஸ்ருதம் பூர்வம் தத்ரோத்பந்ந: பிதாமஹ:* என்றும், *யத்தஉஹ உஹஙக வஙவஃ தத்ஹா வ்ஜாயத। ஹணஹாபி ஸஙஹஙதஃ ஶிவஉ தவயாயஃதாஹ॥—யத் தத் பத்மமபூத் பூர்வம் தத்ர ப்ரஹ்மா வ்யஜாயத, ப்ரஹ்மணச்சாபி ஸம்பூதச் சிவ இத்யவதார்யதாம்* என்றும், *ஹணஃ வஙதாய ஜெஷாய ஶெஷாய—

ப்ரஹ்மண: புத்ராய ஜ்யேஷ்டாய ச்ரேஷ்டாய* என்றும், *ஊஹாதெவஸூவஃஜெயெ ஊஹாூதா ஹாஃஷா்கா நம் தெவதெவொபஹஃவ—மஹாதேவஸ் ஸர்வமேதே மஹாத்மா ஹுத்வா ஆத்மாநம் தேவதேவோ பபூவ* என்றுமுள்ள நூற்றுக்கணக்கான பிரமாணங்களுக்குச் சேர நிர்வஹிக்கவேண்டுகையாலே அப்படி நிர்ணயித்தருளின பரம வைதிகரான ஆழ்வார் "சிவனுக்குப் பிரமன் தனக்கும் பிறர்க்கும் நாயகனவனே" என்று துணிந்து அருளிச் செய்கிறார்.

இங்கே நம்பிள்ளையிட்டு ஸ்ரீஸூக்திகள் காண்மின்;—

"நீங்கள் ஈச்வரர்களாக சங்கித்தவர்களிருவரும் நின்ற நிலை கண்டதே; ஒருவன் தலை கெட்டு நின்றான்; ஒருவன் ஓடுகொண்டு ப்ராயச்சித்தியாய் நின்றான். ஓட்டையோடத்தோடு ஒழுகலோடமாய், உங்கள் குறைதீரப் பற்றுகிற நீங்கள் உங்களிலும் பெருங்குறை வாளரையோ பற்றுவது? 'பாதகியாய் பிக்ஷைக்குத் திரிந்தான்' என்று நீங்களே சொல்லி வைத்து அவனுக்குப் பரத்வத்தைச் சொல்லவோ? ஒருவனுடைய ஈச்வரத்வம் தலையோடே போயிற்று. மற்றவனுடைய ஈச்வரத்வம் அவன் கையோடேயென்று காட்டிக்கொடுக்கிறார் [கண்டு கொண்மின்.] உந்தம் அகங்களிலே நீங்கள் எழுதியிட்டுவைத்த க்ரந்தங்களைப் பார்த்துக்கொள்ளமாட்டிகோளோ முன்னே நின்று பிதற்றுதே யென்கிறார்."

தேசம்—தேஜஸ் என்ற வடசொல்திரிபு. தேசுபொலிந்த திருமதிளாலே சூழப்பட்டு அழகாய திருநகரியிலே நிற்கிற ஸர்வேச்வரன் பக்கலிலே குறை கூறும்படியான தௌர்ப் பாக்யமுண்டாயிற்றே! என்று வெறுக்கிறார். (௪)

இலிங்கத்திட்டபுராணத்தீரும் சமணரும்சாக்கியரும் *
வலிந்துவாதுசெய்வீர்களும் மற்றுநுந்தெய்வமுமாகிநின்றான் *
மலிந்துசெந்நெல்கவரிவீசும் திருக்குருகூரதனுள் *
பொலிந்துநின்றபிரான்கண்டீர் ஒன்றும்பொய்யில்லைபோற்றுமினே. (௫)

| | | | |
|---|---|---|---|
| இலிங்கத்து இட்ட புராணத்தீரும் | லிங்கமாஹாத்மிய விஷயமாகக் கல்பிக்கப்பட்ட புராணத்தைப் பற்றினவர்களாயும் | பொலிந்து நின்ற பிரான் | பொலிந்து நின்ற பிரானென்கிற எம்பெருமானை, |
| சமணரும் | ஜைநர்களாயும் | செந்நெல் | செந்நெற்பயிர்களானவை |
| சாக்கியரும் | பௌத்தர்களாயும் | மலிந்து | ஸம்ருத்திபெற்று |
| வலிந்து வாது செய்வீர்களும் | விதண்டாவாதம் செய்பவர்களாயிருக்கிற நீங்களாகவும் | கவரி வீசும் | சாமரை வீசப்பெற்ற |
| மற்றும் நும் தெய்வமும் ஆகிநின்றான் | தேவதாந்தரங்களாகவும் [இப்படி ஸர்வசரீரகனானவனை] | திரு குருகூர் அதனுள் | திருநகரியிலே |
| | | கண்டீர் | ஸேவியுங்கோள்; |
| | | ஒன்றும் | எள்ளளவும் |
| | | பொய் இல்லை | அஸத்யமில்லை; |
| | | போற்றுமின் | துதியுங்கோள். |

* * * லிங்கபுராணம் முதலாகச் சில குத்ருஷ்டி ஸ்ம்ருதிகளையும் பாஹ்யஸ்ம்ருதிகளையும் பிரமாணமாகக்கொண்டு பேசவந்தவர்களை நிராகரித்தருளுகிறார்.

புராணங்களானவை ராஜஸங்களென்றும் தாமஸங்களென்றும் ஸாத்விகங்களென்றும் பாகுபாடுற்றிருக்கின்றன. *ஸங்கீர்ணேஷு ஸரஸ்வத்யா: பித்ரூணாம் ச நிகத்யதே | ராஜஸேஷு ச மாஹாத்ம்யம் அதிகம் ப்ரஹ்மணோ விது: || ஸாத்விகேஷ்வத கல்பேஷு மாஹாத்ம்யமதிகம் ஹரே: | தேஷ்வேவ யோகஸம்ஸித்தா கமிஷ்யந்தி பராம் கதிம் | ஸங்கீர்ணேஷு ஸரஸ்வத்யா: பித்ரூணாம் ச நிகத்யதே—அக்நேச்சிவஸ்ய மாஹாத்ம்யம் தாமஸேஷு ப்ரகீர்த்திதம், ராஜஸேஷு

சமாஹாத்ம்யம் அதிகம் ப்ரஹ்மணேவிது:; ஸாத்விகேஷ்வத கல்பேஷு மாஹாத்ம்யம் அதிகம் ஹரே: ஸங்கீர்ணேஷு ஸரஸ்வத்யா: பித்ரூணாம் ச நிகத்யதே.* [தாமஸகல்பங்களில் அக்நியினுடையவும் சிவனுடையவும் மாஹாத்மியத்தையும், ராஜஸகல்பங்களில் நான்முகனுடைய மாஹாத்மியத்தையும், ஸாத்விககல்பங்களில் ஸர்வேச்வரனுடைய மாஹாத்மியத்தையும், முக்குணங்களும் கலசின ஸங்கீர்ணகல்பங்களில் பித்ருக்களினுடையவும் ஸரஸ்வதியினுடைய [illegible] பேசியிருப்பதாக [illegible]களை கூறிவைத்தார்கள்.

[illegible] அருளிச்செய்கின்ற தென்பதைச் சிறிது உற்றுப்பார்க்க வேணும்; [illegible] பதி [illegible]—[illegible]; [illegible] யதா யத்ர [illegible] யத்ர [illegible].* [illegible]; [illegible] ஸகாலாத் உத்பந்நம் [illegible] தத்ரைவ ச ஸ்திதம்; ஸ்திதிஸம்ஹார கர்த்தாரம் [illegible] ஜகச்ச ஸ:* என்று விடை அழகாக அவதரித்திருக்கின்றது. இப்படியல்லாமல், எருமையை யானையாகக் கவிபாடித்தரவேணு மென்பாரைப் போலே லிங்கத்துக்குப் பெருமையிட்டுச் சொல்லவேணுமென்று கேள்வியாய், அதன்மேற்பிறந்தது லிங்கபுராணமாகையாலே இலிங்கத்து இட்ட புராணத்தீரும் என்று ஆழ்வார் மருமத்தை வெளியிட்டுப் பேசியருளினராயிற்று. *யா வேதபாஹ்யா: [illegible] யாஶ்ச காஶ்ச குத்ருஷ்டய: [illegible] நிஷ்பலா: [illegible]—யா வேதபாஹ்யா: ஸ்ம்ருதயோ யாச் ச காச் ச குத்ருஷ்டய:, ஸர்வாஸ் தா நிஷ்பலா: ப்ரேத்ய தமோநிஷ்டாஹி தா: ஸ்ம்ருதா:.* என்று மநுமஹர்ஷி சொல்லிவைத்ததும் அறியத்தக்கது.

இப்படிப்பட்ட பாஹ்யகுத்ருஷ்டிமத நிஷ்டர்களை விளித்து, 'நீங்களும் நீங்கள் தொழுகிற தெய்வங்களும் அவனேயாகி நின்றான்' என்று இங்கு ஆழ்வார் அருளிச்செய்வது *[illegible] ப்ரவிஷ்ட [illegible] ஜநாநாம் ஸர்வாத்மா* [illegible] ஸர்வம் நாராயண: [illegible]* இத்யாதி ப்ரமாணங்களை உட்கொண்டாம். சிவபிரான் திரிபுரமெரித்த வரலாற்றை நன்குணர்ந்தால் ஒவ்வொரு தேவதைக்கும் எம்பெருமானே உயிராகி நிற்பவன் என்பது புலனாகும்;

இப்படி ஸர்வாந்தராத்மாவாக இருக்கும் ஸர்வேச்வரன் ப்ரத்யக்ஷஸித்தனல்லன் என்று கண்ணழிவு சொல்லவொண்ணாதபடி திருநகரியிலே ஸந்நிஹிதனாய், பரமபதத்திலுங்காட்டில் இங்கே தன் திருக்குணங்கள் நன்கு விளங்கப் பெற்றதனால் பொலிந்து நின்ற பிரானென்று திருநாமம் அணிந்து விளங்கும் பெருமானை ஸேவித்து, நாம் உபபாதிக்கும் எல்லாக்குணங்களையும் அந்தத் திருமூர்த்தியிலே அநுபவித்து மங்களாசாஸநம் பண்ணுங்கோளென்கிறார் பின்னடிகளால். ... .... .... (ரு)

போற்றிமற்றோர்தெய்வம் பேணப்புறத்திட்டு * உம்மையின்னே
தேற்றிவைத்தது எல்லீரும்வீடுபெற்றால்உலகில்லையேன்றே *
சேற்றில்செந்நெல்கமலமோங்கு திருக்குருகூரதனுள் *
ஆற்றவல்லவன்மாயம்கண்டீர் அதறிந்தறிந்தோடுமினே. (ரு)

| | | | |
|---|---|---|---|
| மற்று ஓர் தெய்வம் | வேறொரு தேவதையை | போற்றி பேண | துதித்து ஆதரிக்கும்படியாக |

| | | | |
|---|---|---|---|
| புறத்து இட்டு | வேறுபடுத்தி | கமலம் | தாமரையும் |
| உம்மை | உங்களை | ஓங்கு | ஓங்கி வளரப்பெற்ற |
| இன்னே | இப்போதுங்களிருக்கிற விதமாக | திரு குருகூர் அதனுள் | திருநகரியிலே எழுந்தருளியிருக்கின்ற |
| தேற்றி வைத்தது | தேவதாந்தரங்களை நம்பும்படியாக (எம்பெருமான்) செய்து வைத்ததானது | ஆற்ற வல்லவன் | பரமசக்தியுக்தனான பெருமானுடைய |
| எல்லீரும் | எல்லாரும் (எதற்காகவென்றால்) | மாயம் கண்டீர் | மாயையேயாமத்தனை; |
| வீடு பெற்றால் | முக்தியடைந்தால் | அது | மாயையென்பதை |
| உலகு இல்லை என்றே | புண்யபாப விஷயமான சாஸ்த்ர மரியாதை குலைந்துபோகுமென்கிற காரணத்தாலேயாகும்; | அறிந்து | தெரிந்துகொண்டு |
| | | அறிந்து | 'அது தப்பும் வழி அவன் திருவடிகளைப்பற்றுவதே' என்றும் தெரிந்துகொண்டு |
| சேற்றில் | சேற்றுநிலத்தில் | ஓடுமின் | திருவடியே சென்று சேரப் பாருங்கள். |
| செந்நெல் | செந்நெற்பயிர்களும் | | |

* * * ஸ்ரீமந்நாராயணனே ஸர்வேச்வரனாகில் அவன் தன்னையே ஆச்ரயிக்கும்படி எங்களைப்பண்ணாமல் இதர தெய்வங்களைத் தொழுமாறு எங்களைச் செய்துவைத்தது என்? என்று சிலர் கேட்பதாகக் கொண்டு அவர்களுக்கு உத்தரமளிக்கும் பாசுரம் இது. உங்கள் பாபந்தான் அதற்குக் காரணம் என்று விடை கூறிற்றாகிறது.

இப்பாசுரத்தில் எல்லீரும் வீடுபெற்றால் உலகில்லையென்றே என்பது தான் மருமமாக வுள்ளது. ஆபாதப்ரதீதியில் இதற்கு என்னபொருள் தோன்றுமென்றால், எல்லாரும் ஸ்ரீமந்நாராயணனையே தொழப்பெற்றால், எல்லாருமே வீடுபெற்றுவிட்டால் லீலாவிபூதி அடியற்றுப்போய்விடும்; அங்ஙனம் போகாமைக்காகவே எம்பெருமான் உங்களை இதர தேவதாபஜநம் பண்ணி ஸம்ஸாரிகளாய்த் தொலைந்துபோம்படி செய்துவைத்தான்—என்பதாகப் பொருள்தோன்றும். இப்படிப்பட்ட பொருள் எம்பெருமானுக்கு மிக்க அவத்யத்தை விளைக்குமதாகையாலே ஆழ்வார் இப்பொருள்பட அருளிச்செய்ய ப்ரஸக்தியில்லை; ஆறாயிரப்படி முதலிய வியாக்கியானங்களில் இங்ஙனே பொருள் நெஞ்சாலும் நினைக்கப்படவில்லை. ஆனால், திருவாய்மொழிக்கு ஸம்ஸ்க்ருதப்பதவுரையிட்டு [ஒன்பதினாயிரப்படி இயற்றிய] தசோபநிஷத்பாஷ்யகாரரான ஸ்ரீரங்கராமாநுஜஸ்வாமி இப்பொருளையே பணித்து வைத்தார்; அவருடைய வாக்கியம் வருமாறு;—"ஸர்வேஷாம் மோக்ஷே ஸதி லீலாவிபூதிருச்சித்யேத இத்யனேந ததநுபபத்தயே ஏவ ஸர்வேச்வரேண ஸ்வவிஷயபக்திநாசகம் தேவதாந்தரவிஷயபக்திப்ராவண்யம் க்ருதமிதி பாவ:." என்பதாம்.

பிள்ளான் முதலிய ஸகலபூர்வாசாரியர்களும் திருவுள்ளம்பற்றின பொருள் யாதெனில்; உலகில்லையென்றே என்ற விடத்தில் உலகு என்பதற்கு சாஸ்த்ரமர்யாதை என்று பொருள். அவரவர்கள் பண்ணின புண்யபாபரூப கருமங்களுக்குத் தக்கபடியே பலன் கொடுப்பதென்று ஒரு சாஸ்த்ரமரியாதை ஏற்பட்டிருக்கின்றது; நீங்கள் முற்பிறவிகளில் பிரபலமான தீவினைகளைச் செய்திருந்தபடியால் அவற்றின் பலனாக இப்பிறப்பில் உங்களை க்ஷுத்ரதேவதாபஜனம் பண்ணும்படியாக உபேக்ஷித்திடலாயிற்று கொடிய பாவங்கள் செய்த உங்களை புண்யாத்மாக்களைப்போலே ஸ்ரீமந்நாராயண ஸமாச்ரயணமே செய்யும்படி பண்ணிவிடுவதானால் அப்போது முன்சொன்ன சாஸ்த்ரமரியாதை அழிந்துவிடுமன்றே. அங்ஙனம் அழியாமைக்காகவே உங்களை இங்ஙனே நிறுத்திவைத்தது—என்கை. வேதாந்த தேசிகனும் தாத்பர்ய ரத்நாவளியில் *தத்த்வஜ்ஞாநாத்யநுரூபம் ஸம்ஸ்ருதிம் விதன்வத: என்று இவ்வர்த்தத்தையே வெளியிட்டருளினர்.

* மம மாயா துரத்யயா * என்று அவன்தானே கீதையில் சொல்லிவைத்தபடி தப்ப வொண்ணாத இந்த மாயையை அவன் திருவடிகளைக் கட்டியே தப்பப்பாருங்களென்கிறார் பின்னடிகளில். ... ... ... .... (௬)

ஓடியோடிப்பலபிறப்பும்பிறந்து மற்றோர்தெய்வம்
பாடியாடிப்பணிந்து* பல்படிகால் வழியேறிக்கண்டீர் *
கூடிவானவரேத்தநின்ற திருக்குருகூரதனுள் *
ஆடுபுட்கொடியாதிமூர்த்திக்கு அடிமைபுகுவதுவே. (௭)

| | | | |
|---|---|---|---|
| ஓடி ஓடி | ஸம்ஸார சக்ரத்திலே [illegible] | வானவர் | தேவர்கள் |
| பலபிறப்பும் பிறந்து | பல பல யோனிகளிலே பிறந்து | கூடி | திரண்டு |
| பல் படி கால் | வம்ச பரம்பரையாக | ஏத்த நின்ற | துதிக்கும்படி நின்ற |
| மற்று ஓர் தெய்வம் வழி ஏறி | தேவதாந்தரங்களை அந்தந்த நூல்களிலே சொல்லியிருக்கிறபடி | திரு குருகூர் அதனுள் | திருநகரியிலே எழுந்தருளியிருக்கின்ற |
| பாடி ஆடி பணிந்து | பலபடியாக வழிபட்டு | ஆடு புள்கொடி ஆதி மூர்த்திக்கு | ஆடுங்கருளக்கொடியுடைய ஆதிநாதப் பெருமானுக்கு |
| கண்டீர் | பலன் கைபுகுந்தமை கண்டீர்களே; | அடிமை புகுவது | அடியராயிருக்கத் தகுதி |

* * *—தேவதாந்தரங்களை ஆச்ரயிப்பதனால் என்னபலன் உண்டாகுமோ அது உங்களுக்கு இதுவரையில் தெரியாமையில்லை; இந்நாள் வரையிலே கைகண்ட பலன்தான் இனிமேலும் காணக்கடவதாயிருக்கும்; ஆனபின்பு கருளக்கொடியுடையானுக்கு அடிமை புகுவதுவே உறுவதென்கிறார்.

தேவதாந்தரபஜனத்தின் பலனை முன்னடிகளில் அருளிச்செய்கிறார். மற்றோர்தெய்வம் பாடியாடிப்பணிந்ததற்குப் பலன் ஓடியோடிப் பல பிறப்பும் பிறப்பதேயத்தனை என்றாராயிற்று. *𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌣𑌂 𑌶𑌿𑌤𑌿𑌕𑌣𑍍𑌠𑌂 𑌚 𑌯𑌾𑌶𑍍𑌚𑌾𑌨𑍍𑌯𑌾 𑌦𑍇𑌵𑌤𑌾𑌃 𑌸𑍍𑌮𑍃𑌤𑌾𑌃 𑌪𑍍𑌰𑌤𑌿𑌬𑍁𑌦𑍍𑌧𑌾 𑌨 𑌸𑍇𑌵𑌨𑍍𑌤𑍇 𑌯𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌪𑌰𑌿𑌮𑌿𑌤𑌂 𑌫𑌲𑌂 = ப்ரஹ்மாணம் சிதிகண்டம் ச யாச் சாந்யா தேவதா: ஸ்ம்ருதா:, ப்ரதிபுத்தா ந ஸேவந்தே யஸ்மாத் பரிமிதம் பலம்* [பிரமன் சிவன் முதலிய தேவதைகளைத் தொழுவதனால் அற்பபலனே கிடைக்குமாதலால் விவேகிகள் அத்தெய்வங்களைத் தொழுவதில்லை] என்கிற பிரமாணத்தை அடியொற்றி ஆழ்வார் அருளிச்செய்கிறபடியால் இங்கே ஒரு ஆக்ஷேபமும் இடம்பெறாது.

நீங்கள் தொழநிற்கிற தெய்வங்களும் வந்து தொழுது தத்தம் வாய்படைத்த பலன் பெறுமாறு தோத்திரம் செய்யுமிடமான திருக்குருகூரிலே ஸேவைஸாதிக்கின்ற பறவையேறு பரம்புருடனுக்கு அடிமை செய்வதே ஸ்வரூப ப்ராப்தமென்றாராயிற்று.

ஆடுபுள்='ஆடு' என்று வெற்றிக்கும் பெயராதலால் வென்றிக்கருடன் என்னவுமாம்.

புக்கடிமையினால்தன்னைக்கண்ட மார்க்கண்டேயனவனை *
நக்கபிரானுமன்றுய்யக்கொண்டது நாராயணனருளே *
கொக்கலர்தடந்தாழைவேலித் திருக்குருகூரதனுள் *
மிக்கவாதிப்பிரான்நிற்க மற்றைத்தெய்வம்விளம்புதிரே. (௮)

| | | | |
|---|---|---|---|
| அடிமையினால் | அடிமைசெய்து | மார்க்கண்டேயனவனை | மார்க்கண்டேயனென்று ப்ரஸித்தனானவனை |
| புக்கு | உள்புகுந்து | அன்று | அக்காலத்தில் |
| தன்னை கண்ட | தன்னைக்காணப்பெற்ற | | |

| | |
|---|---|
| நக்கபிரான் | திகம்பரச்சாமியான ருத்ரன் |
| உய்யக்கொண்டதும் | ரக்ஷித்ததும் |
| நாராயணன் அருளே | நாராயணனுடைய அருளின் பயனேயாகும்; |
| கொக்கு அலர் | கொக்குப்போலே வெண்ணிறமாக அலர்கின்ற |
| தட தாழை | பெரிய தாழைகளை |
| வேலி | வேலியாகவுடைய |
| திரு குருகூர் அதனுள் | திருநகரியிலே |
| மிக்க | மேம்பாடுடைய |
| ஆதி பிரான் நிற்க | ஆதிநாதப்பெருமாளிருக்க |
| மற்று எ தெய்வம் | வேறு எந்த தேவதைகளை |
| விளம்புதிர் . | பேசுகிறீர்கள்? |

* * *—மார்க்கண்டேயன் ருத்ரனை ஆராதித்துத் தன் அபேக்ஷிதம் பெற்றனே யென்று சிலர் சொல்ல, அந்தக்கதையின் மருமமும் கேட்கலாகாதோ வென்கிறார்.

ம்ருகண்டு வென்னும் முனிவர் பிள்ளையில்லாக்குறையினால் பிரமனைக்குறித்துத் தவஞ் செய்தபோது, பிரமன் ப்ரத்யக்ஷமாகி 'முனிவரே! அறிவில்லாமையும் அங்கஹீநத்வமும் பெரும் பிணியும் தீயகுணங்களுமுடையவனாய் நூறு பிராயம் உயிர்வாழ்பவனான புத்ரனை விரும்புகின்றீரோ? அன்றி, கூர்மையான புத்தியும் அழகு பொலிந்தவடிவமும் ஆரோக்கியமும் நற்குணமுமுடையவனாய்ப் பதினாறு பிராயமே வாழ்பவனான குமாரனை விரும்புகின்றீரோ? சொல்லும்' என்ன, முனிவர், 'ஆயுள் சிறிதேனும் அறிவும் அழகும் குணமும் சிறந்து பிணியிலனாகும் ஸத்புத்ரனையே வேண்டுகின்றேன்' என்று தம் கருத்தைக்கூற, நான்முகக்கடவுள் ‡ அவ்வாறே அநுக்ரஹித்தனர். அங்ஙனம் ஊழ்வினையாற் பதினாறுபிராயம்பெற்றுப் பிறந்த புத்திரனான மார்க்கண்டேயன் தனது அல்பாயுஸ்ஸைக்குறித்து வருந்திய தாய்தந்தையரைத்தேற்றித் தான் விதியைக் கடந்து வருவதாகச்சொல்லி, தீர்க்காயுஸ்ஸு பெறுதற் பொருட்டுத் தினந்தோறும் சிவபூஜை செய்துவருகையில் ஒருநாள் யமன் தூதரையனுப்ப, அவர்கள் மார்க்கண்டேயனது தவக்கனலால் அவனை அணுகமாட்டாது அவன் செய்யும் சிவபூஜைச் சிறப்பைக்கண்டஞ்சி வெருண்டோடி யமனிடம் செய்தி சொல்ல, யமனும் கோபித்துத் தனது மந்திரியான காலனை ஏவ, அவன் வந்து நயபயங்களாலழைக்கவும் மார்கண்டேயன் வரமாட்டேனென்று சொல்லிவிட, பிறகு யமன் மிகக்கொதித்துத் தானே நேரில்வந்து மார்க்கண்டயனைக் காலபாசத்தாற் கட்டியிழுக்கத்தொடங்குகையில் அம்முனி குமாரன் சிவலிங்கத்தைத் தழுவிக்கொள்ள, யமன் சிவலிங்கமுட்பட வலித்திழுக்குப்போது சிவபிரான் ஸ்ரீமந்நாராயணனைச் சிந்தைசெய்து அவனது திருவருள்பெற்று அங்குநின்று வெளிப்பட்டு யமனைக் காலாலுதைத்துத்தள்ளி முனிமகனுக்கு என்றும் பதினாறு பிராயமாகவே அனேக கல்பகாலமளவும் இனிது வாழும்படி தீர்க்காயுஸ்ஸைக் கொடுத்தருளினன் என்பதுவரலாறு.

இங்ஙனம் சிவபிரான் மார்க்கண்டேயனுக்கு அருள் செய்தது திருமாலினருளால் தான் பெற்ற சக்தியினாலேயென்பதும், அச்சிவபிரானுக்கு அந்தராத்மாவாய் நின்று தொழில் செய்தவன் ஸர்வேச்வரனான ஸ்ரீமந்நாராயணனே என்பதுமாகிய உண்மை உணரத்தக்கது. சில புராணங்களில் மேலெழுந்தவாரியாகப் பார்க்கும்போது பரமசிவனே மார்க்கண்டேயனுக்கு அபயமளித்ததாகக் காணப்படினும், மஹாபாரதத்தில் ஆரண்யபருவத்தில் நூற்றுத்தொண்

‡ புராணபேதத்தால் இக்கதை சிறிது பேதப்படுவதுமுண்டு: பிரமனுடைய அநுக்ரஹத்தினால் ம்ருகண்டுமுனிவருக்குப் பிள்ளை பிறந்ததாகவும், அப்பிள்ளை ஒருநாள் வீதியில் விளையாடிக்கொண்டிருக்குமிருப்பைத் தாய்தந்தையர் ஆனந்தமாகக் கண்டுகொண்டிருக்குங்கால் 'இப்பிள்ளைக்கு ஆயுள் குறுகிற்று' என்று ஆகாசவாணியொன்று செவிப்பட, அதனால் அத்தாய்தந்தையர் மிக்க வருத்தங்கொண்டதாகவும், அதுகண்ட மார்க்கண்டேயன் 'இதற்கு நீங்கள் வருந்தவேண்டா, இவ்வாபத்தை நானே போக்கிக்கொள்ளுகிறேன்' என்று அவர்களைத் தேற்றித் தான் சிவபூஜைசெய்யத் தொடங்கினனென்பதாகவும் சில புராணங்கள் கூறும்.

*னூற்றிரண்டாமத்யாயத்தில் மார்க்கண்டேயன் தானே தருமபுத்திரரை நோக்கிச் சொல்லுமளவில் ஸ்ரீமந்நாராயணனுடைய வார்த்தைகளை அநுவதிக்குமிடத்து, * விதூஹஸ்தோஸி விப்ரஷே! ஸாம்சைவ ஸரணம் கத:—பித்ருபக்தோஸி விப்ரர்ஷே! மாஞ்சைவ சரணம் கத: * என்றுள்ள ச்லோகத்தினால் இவன் ஸ்ரீமந்நாராயணனை சரணம் புகுந்தவனென்பது நன்கு விளங்கும்.*

*ஸ்ரீ பாகவதத்திலும் பன்னிரண்டாம் ஸ்கந்தத்தில் எட்டாமத்தியாயத்தில் *நாராயணு ஷிம் [illegible]—[நாராயணன் [illegible] மிருத்யும் ஸாதர் [illegible] ஸ்ரீ [illegible] நாராயணனை ஆராதித்து வென்றொழித்தான்] என்று ஸ்பஷ்டமாகச் சொல்லிற்று.*

*மார்க்கண்டேயன் இங்ஙனம் நெடுநாள் வாழ்ந்துவருகையில், மஹாப்ரளயத்தைத் தான் காணவேணுமென்று ஆசைகொண்டு எம்பெருமானைப் போற்றிப் ப்ரார்த்தித்து அங்ஙனம் காணும்போது, மஹாப்ரளயத்தில் திருமாலொருவனை யன்றி மற்றைத்தேவரெவரையும் பிழைத்திருக்கக் காணாதவனாய் அப்பெருமானது திருவயிற்றினுள்ளே அனைவரையுங்கண்டு, முடிவில் தான் நற்கதி பெறுதற்பொருட்டுத் திருமாலையே சரணமடைய, அப்பெருமான் அவனைத் தனது திருவடிகளிற்சேர்த்துக்கொண்டருளினன் என்பதும் அறியத்தக்கது, இதைத் திருவுள்ளம்பற்றியே பன்னீராயிரப்படியுரையில் "அன்று உய்யக் கொண்டதும்" என்பதற்கு—"ப்ரளயதசையிலே பிழைப்பித்து பகவத்பரனுக்கி உஜ்ஜீவிப்பித்தது" என்று உரை கூறப்பட்டது.*

நாராயணனருளே *என்றவிடத்து ஈடு;—"நீ நெடுநாள் பச்சையிட்டு ஆச்ரயித்தாய்; அவ்வாச்ரயணம் வெறுமன் போயிற்றதாக வொண்ணுது—என்று அவனையழைத்து 'நானும் உன்னோபாதி ஒருவனை ஆச்ரயித்துக்காண் இப்பதம் பெற்றது; இனி ஸ்ரீகொடுத்தல் உபதேசங் கொடுத்தலிறே என்று சொல்லி அவனைக்கொண்டுபோய் ஸர்வேச்வரன் பக்கலிலே காட்டிக்கொடுத்தாளுயிற்று."*

*ஆதலால் இப்படி ஸர்வேச்வரனை நாராயணனையொழிய மற்று எந்தத் தெய்வத்தைக் கொண்டாடுகிறீர்களென்பன பின்னடிகள். .... ... (அ)*

விளம்புமாறுசமயமும் அவையாகியமற்றும்தன்பால் *
அளந்துகாண்டற்கரியனாகிய ஆதிப்பிரானமரும் *
வளங்கொள்தண்பணைசூழ்ந்தழகாய திருக்குருகூரதனை *
உளங்கொள்ஞானத்துவைம்மின் உம்மையுய்யக்கொண்டுபோகுறிலே. (௯)

| | | | |
|---|---|---|---|
| *விளம்பும்* | *கண்டபடி சொல்லுவது தவிரப் பொருட்பொருத்தம் சிறிதுமில்லாதவைகளான* | *தன் பால்* | *தன் விஷயத்திலே* |
| *ஆறு சமயமும்* | *ஆறுவகைப்பட்ட பாஹ்ய மதங்களும்* | *அளந்து காண்டற்கு அரியன் ஆகிய* | *எல்லை காணவொண்ணுதவனுயிருக்கிற* |
| *அவை ஆகிய* | *அந்த பாஹ்யமதங்கட்குப் பரியாயமான* | *ஆதி பிரான்* | *ஸகலஜகத் காரணபூதனான ஸர்வேச்வரன்* |
| *மற்றும்* | குத்ருஷ்டி *மதங்களும்* | *அமரும்* | *நித்யவாஸம் பண்ணுமிடமாய்* |

| | | | |
|---|---|---|---|
| வளம் கொள் தண் பணை சூழ்ந்து அழகு ஆய | வளம்மிக்க குளிர்ந்த நீர் நிலங்களாலே சூழப்பட்டு அழகிய தான | உம்மை | உங்களை |
| திரு குருகூர் அதனை | திருநகரியை | உய்யக் கொண்டு போகுறில் | உஜ்ஜிவிப்பித்துக்கொண்டு நடக்கவேண்டியிருந்தீர்களாகில் |
| (நீங்கள்) | | உளர் கொள் ஞானத்து | அந்தரங்கஜ்ஞானத்துக்குள் |
| | | வைம்மின் | வைத்துச் சிந்தனை செய்புங்கள். |

* * * வேதபாஹ்யர்களும் குத்ருஷ்டிகளும் பண்ணுகின்ற துஸ்தர்க்கங்களால் அழிக்கவொண்ணாத ஐச்வர்யத்தையுடையனை எம்பெருமானெழுந்தருளியிருக்கிற திருநகரியை ஆச்ரயியுங்கோள் பிழைக்கவேண்டியிருந்தீர்களாகில் என்கிறார்.

வேதம் முதலிய சாஸ்த்ரங்களை ப்ரமாணமாக இசையாதவர்கள் வேத பாஹ்யர்கள் எனப்படுவர்; அவற்றை ப்ரமாணமாக இசைந்துவைத்தும் அவற்றுக்குத் தவறான அர்த்தங்களைப் பண்ணுமவர்கள் (அதாவது) எம்பெருமானொருவன் தவிர மற்ற தத்துவமொன்றுமேயில்லையென்றும், அவனுக்குக் குணமில்லை, விக்ரஹமில்லை யென்றும் சொல்லுமவர்கள் குத்ருஷ்டிகளெனப்படுவார்; இவ்விருவகுப்பினரையும் பற்றிக் கூரத்தாழ்வான் ஸ்ரீவைகுண்டஸ்தவத்தில் ஒரு ச்லோக மருளிச்செய்கிறார்; அதாவது—*வாஹ்யா: கு3த்3ருஷ்டய இதி த்3விதயே(அ)ப்யபாரம் கோ4ரம் தமஸ் ஸமுபயாந்தி நவீக்ஷஸே தாந் । ஜஹ்நுஸுதா ந நீரதி4முபைதி ம்ருக3த்ருஷ்ணிகே(அ)ப்3ஜே: காஸாரஸத்வநிஹதஸ்ய ச கோவிசேஷ: — பாஹ்யா: குத்ருஷ்டய இதி த்விதயேப்யபாரம் கோரம் தமஸ் ஸமுபயாந்தி நவீக்ஷஸே தாந், ஜக்தஸ்ய காநநம்ருகைர் ம்ருகத்ருஷ்ணிகேப்ஸோ: காஸாரஸத்வநிஹதஸ்ய ச கோ விசேஷ:?* என்பதாம். இதன் கருத்தாவது:— வேதபாஹ்யர்களும் வேதகுத்ருஷ்டிகளுமான இருவகுப்பினரும் ஒருநாளும் பகவத் கடாக்ஷத்திற்கு இலக்காகமாட்டாமல் நசித்துப்போவர்கள். வேதத்தை அடியோடே ப்ரமாணமாக அங்கீகரியாதே தூஷிக்கின்ற பாஹ்யர்கள் நசித்துப்போவது யுக்தம்; அப்படியல்லாமல் வேதத்தை ப்ரமாணமாக அங்கீகரித்து வைதிகர்களென்று பேர்பெற்றிருக்கின்றவர்களும் நசித்துப்போவர்களென்னலாமோ என்ன; இருவகுப்பினரும் துல்ய யோகக்ஷேமர்களேயென்பது ஒரு த்ருஷ்டாந்த முகத்தாலே ஸமர்த்திக்கப்படுகிறது; விடாய்மிகுத்துத் தண்ணீரைத் தேடியோட இரண்டு ம்ருகங்கள் புறப்பட்டன; அவற்றில் ஒரு ம்ருகமானது தடாகத்தில் புகாதே கானலைக்கண்டு தண்ணீர்ப்பெருக்காக மயங்கி ஓடிக்கொண்டேயிருக்கையில் வழியிடையிலே நேர்பட்ட புலி முதலிய கொடிய விலங்குகளினால் அடித்துத் தின்னப்பட்டதாயிற்று. இது இப்படியாக, மற்றொரு மிருகமானது விடாய்தீரத் தடாகத்திலேயே சென்று சேர்ந்தது; ஆனால் அடைவே இழியவேண்டிய துறையிலே யிழியாமல் துறைதப்பி யிழியவே அங்குக் கிடந்த வொரு கொடிய ஜலஜந்துவாலே அது பக்ஷிக்கப்பட்டொழிந்தது. ஆக இரண்டு மிருகங்களும் தடாகப்ரவேச—அப்ரவேசங்களாலே சிறிது வாசி பெற்றிருந்தாலும் விநாசத்திலே வாசி பெற்றனவில்லையே; அதுபோலவே குத்ருஷ்டிகளும் பாஹ்யர்களும் வேதப்ராமாண்யாங்கீகார—அநங்கீகாரங்களாலே சிறிது வாசி பெற்றிருந்தாலும் விநாசத்திலே வாசியற்றவர்களேயாவர். என்றதாயிற்று. கானலிலே மயங்கியொழிந்த ம்ருகத்தின் ஸ்தானத்தில் பாஹ்யர்கள்; தடாகத்திலே யிழிந்து துறைதப்பியொழிந்த ம்ருகத்தின் ஸ்தானத்திலே குத்ருஷ்டிகள் என்றுணர்க.

விளம்பும் ஆறுசமயமும் = சாக்ய, உலூக்ய, அக்ஷபாத, க்ஷபண, கபில, பதஞ்சலி மதங்கள் எனப்படுகிற ஆறும் பாஹ்யஸமயங்களாம்; சாக்யர்—பௌத்தர்; உலூக்யர்—சார்

வாகர்; அக்ஷபாதரென்று கௌதமரைச் சொல்லி நையாயிகவைசேஷிகர்களை நினைக்கிறது. க்ஷபணர்—ஜைநர்.

அவையாகிய மற்றும்=மற்றும் அவற்றோடொத்த குத்ருஷ்டிகளும் என்றபடி. "அவையாகியும்" என்பது பன்னீராயிரப்படி யுரைக்கு மாத்திரம் பாடம்.

மற்றும் என்பதற்கு குத்ருஷ்டிவர்க்கமெனப் பொருள்கொண்டு, அவையாகியும் என்பதற்கு 'அவையாகத் திரண்டாலும்' என்று பொருள் கூறினர் பன்னீராயிரவுரைகாரர். அவை—அவை; பாஹ்யர்களும் குத்ருஷ்டிகளும் பெருந்திரளாகக் கூடினாலும் பரிச்சேதித்து அறிய முடியாதவன் எம்பெருமான் என்றபடி.

ஆறுசமயங்களுக்கு விளம்பும் என்று அடைமொழி கொடுத்தது—அர்த்தமில்லாத வெறும் சொற்களையே பிதற்றுகிறவர்களென்று காட்டினபடி. ஆக, பாஹ்யர்களாலும் குத்ருஷ்டிகளாலும் சலிப்பிக்கவொண்ணாத ஸ்வரூபரூபகுண விபூதிகளையுடைய ஸர்வேச்வரன் எழுந்தருளியிருக்குமிடமாய், வளம்மிக்க நீர் நிலங்களாலே சூழப்பட்டு அழகியதான திருநகரியை, உளங்கோள் ஞானத்து வைம்மின்—மாநஸஜ்ஞானத்துக்கு விஷயமாக்குங்கள் என்றபடி. இது யாரைநோக்கி யுரைக்கிற தென்னில்; உம்மை உய்யக்கொண்டு போகுறில்= உஜ்ஜீவிக்க விருப்பமுடையீராகில்.

போக + உறில், போகுறில்; தொகுத்தல். .... .... (௯)

உறுவதாவதெத்தேவும் எவ்வுலகங்களும்மற்றும்தன்பால் *
மறுவில்மூர்த்தியோடொத்து இத்தனையும்நின்றவண்ணம்நிற்கவே *
செறுவில்செந்நெல்கரும்பொடோங்கு திருக்குருகூரதனுள் *
குறியமாணுருவாகிய நீள்குடக்கூத்தனுக்காட்செய்வதே. (௰)

| | | | |
|---|---|---|---|
| எத் தேவும் | எல்லாத் தேவதைகளும் | செந்நெல் | செந்நெற்பயிர்களும் |
| எ உலகங்களும் | எல்லாவுலகங்களும் | கரும்பொடு | கருப்பஞ்சோலைகளும் |
| மற்றும் | மற்றுமுண்டான சேதநாசேதனங்களுமாகிய | ஓங்கு | வளரும்படியான |
| இத்தனையும் | இவையடங்கலும் | திரு குருகூர் அதனுள் | திருநகரியிலே |
| தன் பால் | தன்னுடையதான | குறிய மாண் உரு ஆகிய | வாமநப்ரஹ்மசாரி வேஷமெடுத்தவனும் |
| மறு இல் மூர்த்தியோடு ஒத்து | நிஷ்கலங்கமான அஸாதாரண விக்ரஹம்போன்று [ஸகல விதத்தாலும் விதேயங்களாகி யென்றபடி] | நீள் குடக் கூத்தனுக்கு | (க்ருஷ்ணனாய்ப்) பெரிய குடக்கூத்தாடினவனுமான பெருமானுக்கு |
| நின்ற வண்ணம் நிற்க | குறையற நிற்குமிருப்பிலே— | ஆள் செய்வதே | அடிமை செய்வதே |
| செறுவில் | விளை நிலங்களில் | உறுவது ஆவது | உற்றதாம். |

*** தன் ஐச்வர்யத்தில் ஒன்றும் குறையாமல் திருநகரியில் வந்து நின்றருளின பொலிந்து நின்ற பிரானுக்கு அடிமைசெய்கைதானே ஸ்வரூபாநுரூபமென்கிறார். பாட்டி

னடியினுள்ள உறுவதாவது என்பதை, முடிவினுள்ள ஆட்செய்வதே என்பதனோடு கூட்டுக; ஆட்செய்வதே உறுவதாவது என்றபடி.

எத்தேவும் எவ்வுலகங்களும் மற்றும் இத்தனையும் தன்பால் மறுவில் மூர்த்தியோடொத்து இத்யாதி. இந்திரன் சந்திரன் குபேரன் என்று சொல்லப்படுகிற ஸகல தேவதா வர்க்கமும், ஸமஸ்த லோகங்களும், மற்றுமுண்டான சேதநாசேதநவர்க்கமுமான இவையித்தனையும் தன்னுடைய அஸாதாரண விக்ரஹம்போலே தனக்கு விதேயமாயிருக்கும்படியாகப் பெற்ற எம்பெருமான் திருக்குருகூரிலே நின்றருளுகிறுனைகையாலே அவனுக்கு ஆட்செய்வதே உறுவது என்றபடி.

மறுவின்மூர்த்தி யென்பதற்கு இரண்டுவகையாகப் பொருள் கூறுவர்; மறு என்று ஸ்ரீவத்ஸத்திற்கும் பெயராகையாலே அதனையுடைத்தான திருமேனி; (அல்லது) மறு என்று அவத்யமாய், அஃதில்லாத [ஹேயப்ரத்யநீகமான] திருமேனியென்னுதல்.

எவ்வுலகங்களும் மற்றும் தன்னுடைய மூர்த்தியோடொத்திருக்கையாவது என்னென்னில்; சரீரத்தினுடைய லக்ஷணம் இன்னதென்று அறிந்தால் இது அறிந்ததாகும்; *யஸ்ய சேதநஸ்ய யத்³ த்³ரவ்யம் ஸர்வாத்மநா ஸ்வார்தே² நியந்தும் தா⁴ரயிதும் ச ஶக்யம் தச்சே²ஷதைகஸ்வரூபம் ச, தத் தஸ்ய ஶரீரம், தத்ஸ்ய ஶரீரம்—யஸ்ய சேதநஸ்ய யத் த்ரவ்யம் ஸர்வாத்மநா ஸ்வார்த்தே நியந்தும் தாரயிதுஞ்ச சக்யம் தச்சேஷதைகஸ்வரூபஞ்ச, தத் தஸ்ய சரீரம்.* என்பது சரீர லக்ஷணம். ஆத்மாவுக்கு ஸகலப்ரகாரங்களாலும் நியாம்யமாய் தார்யமாய் சேஷப்பட்டிருக்கையே சரீரத்வமாதலால் ஸகல தேவதைகளும் எம்பெருமானுக்கு இங்ஙனேயிருக்கும்படியைச் சொன்னவாறு.

சேறு—விளைநிலம்.

குடக்கூத்தன்—அந்தணர்க்குச் செல்வம் விஞ்சினுல் யாகஞ்செய்வது போல இடையர்க்குச் செல்வம் விஞ்சினுல் அதனாலுண்டாகுஞ் செருக்குக்குப் போக்குவீடாக அவர்களாடுவதொரு கூத்து குடக்கூத்தெனப்படும். தலையிலே அடுக்குக்குடமிருக்க இரு தோள்களிலும் இருகுடங்களிருக்க இருகையிலும் குடங்களை யேந்தி ஆகாசத்திலே யெறிந்து ஆடுவதொரு கூத்து இது. ... .... ... (௰)

ஆட்செய்தாழிப்பிரானைச்சேர்ந்தவன் வண்குருகூர்நகரான் *
நாட்கமழ்மகிழ்மாலைமார்பினன் மாறன்சடகோபன் *
வேட்கையால்சொன்னபாடல் ஆயிரத்துளிப்பத்தும்வல்லார் *
மீட்சியின்றிவைகுந்தமாநகர் மற்றதுகையதுவே. (௧௧)

| | | | |
|---|---|---|---|
| ஆள் செய்து | (உபதேச முகத்தாலே ஸம்ஸாரிகளைத் திருத்திப்பணிகொள்ளுகையாகிற) கைங்கரியத்தைப் பண்ணி | மாறன் சடகோபன் | ஆழ்வார் |
| ஆழி பிரானை சேர்ந்தவன் | ஆழியங்கையனை பெருமானை அடைந்தவரும் | வேட்கையால் | ஆதரத்தோடு |
| வண் குருகூர் நகரான் | திருநகரிக்குத் தலைவரும் | சொன்ன | அருளிச்செய்ததான |
| நாள் கமழ் மகிழ் மாலை மார்பினன் | பரிமளம் மாருத மகிழமாலையைத் திருமார்பிலே அணிந்தவருமான | பாடல் ஆயிரத்துள் | ஆயிரம்பாட்டினுள்ளே |
| | | இ பத்தும் | இப்பதிகத்தை |
| | | வல்லார் | ஓதவல்லவர்களுக்கு |
| | | மீட்சி இன்றி | மீண்டும் திரும்புதலில்லாத |
| | | வைகுந்தம் மாநகர் மற்றது | ஸ்ரீ வைகுண்டமஹாநகரமாகிய அவ்விடம் |
| | | கையது | கரஸ்தம். |

* * * இத்திருவாய்மொழி கற்றார்க்குப் பயனுரைத்துத் தலைக்கட்டும் பாசுரம் இது. [ஆட்செய்து ஆழிப்பிரானைச் சேர்ந்தவன்] ஆட்செய்கையாவது கைங்கரியம் பண்ணுதல் இது மானஸிகமென்றும் வாசிகமென்றும் காயிகமென்றும் மூவகைப்பட்டிருக்கும்; இங்கு வாசிககைங்கரியம் கொள்ளத்தகும். செவிக்கினிய செஞ்சொற்களைப் பாடுவதே வாசிக கைங்கரியமாகும். எம்பெருமான் கையுந் திருவாழியுமான அழகைக்காட்டித் தம்மை ஆட்படுத்திக்கொண்டானென்பது தோன்ற ஆழிப்பிரானை என்றார்.

முதலடிக்கு ஈட்டு ஸ்ரீஸூக்திகள் பரமபோக்யங்களாயிருக்கையாலே அவை ஈண்டுக் குறிப்பிடப் பெறுகின்றன;—“அடிமைதான் த்ரிவிதம்—மானஸ வாசிக காயிகங்கள். இவற்றில் மானஸகாயிகங்களுக்கு ஆளல்லர்; என்றிய வென்னில், *காலாழும் நெஞ்சழியும் கண்சுழலும்* என்கையாலே. இனி வாசிகமொன்றுமேயானால், வாசிகமாகத் திருவாய்மொழி பாடி அடிமை செய்தாரென்கிறதோ வென்னில்; அன்று; அப்படியாமன்று இப்பாசுரம் *முனியே நான்முகனிலேயாகவேணும். இல்லையாகில் இவர் வாசிகமாக அடிமைசெய்த *புகழுநல்லொருவனிலேயாகப் பெறில் முக்கியம். ஆனால், தேவதாந்தரபரத்வ நிரஸநபூர்வகமாக ஸர்வேச்வரனுடைய பரத்வத்தை யருளிச் செய்கையாலே யானாலோவென்னில்; அதுவாகில் முதல் திருவாய்மொழியிலே யாகவமையும். பரத்வநிர்ணயத்திலே பரோபதேசமு மாகை யாலே யானாலோவென்னில், அதுவாகில் *திண்ணன் வீட்டிலேயாதல்* அணைவதரவணை யிலே யாதலாகவமையும். ஆனால் அர்ச்சாவதாரத்திலே பரத்வமருளிச் செய்கையாலே யானாலோவென்னில்; அதுவுமொண்ணாது. அது *செய்யதாமரைக் கண்ணனிலேயாகவமையும். பரோபதேசம் பண்ணுகையாலே சொல்லிற்றானாலோவென்னில், அதுவுமொண்ணாது; *வீடுமின் முற்றவும் தொடங்கிப் பல விடங்களிலும் பரோபதேசம் பண்ணினார்; அவற்றிலுமாகப் பெற்றதில்லை; ஆனால் எதாவதென்னில்; இவ்வொன்றுந்தேவிலே *பரன் திறமன்றிப் பல்லுலகீர் தெய்வம் மற்றில்லை பேசுமினே* என்று பொலிந்து நின்ற பிரானே ஸர்வஸ்மாத் பரனென்று இவரருளிச்செய்யக் கேட்டு * கபாலநன்மோக்கத்துக் கண்டு கொண்மின் * என்னக்கண்டு ஜகத்தாகத் திருந்தி ஸ்ரீவைஷ்ணவர்களாயிற்று. இவர்தாம் அவர்களுக்கு மங்களாசாஸநம் பண்ணும்படியிறே அவர்கள் தாம் திருந்தினபடி. *பொலிகபொலிக என்று இதுக்கென்ன வொரு திருவாய்மொழி நேருகிறாரிறே. ஸர்வேச்வரன் அவதரித்துத் திருத்தப் பார்த்தவிடத்தும் திருந்தாத ஸம்ஸாரத்திலே இவர் திருத்தத்திருந்தினபடி. இனி இவர்க்குத் தத்வநிர்ணயம் பண்ண வேண்டாதபடி *இடங்கொள் சமயத்தை யெல்லாமெடுத்துக் களைவன போலே தடங்கடற்பள்ளிப் பெருமான் தன்னுடைப் பூதங்களேயாம்படி திருத்துகையாலே ஆட்செய்தாழிப் பிரானைச்சேர்ந்தவன் என்கிறார்.”

இந்த நன்மைக்கு அடி நல்லார்நவில் குருகூரிலே பிறப்பு, என்பது தோன்ற வண்குருகூர்நகரான் என்கிறார்.

நாட்கமழ்மகிழ்மாலைமார்பினன்—ஆழ்வார் தாம் வகுளமாலையை அணியாகக் கொண்டவராதலால் வடமொழியில் ‘வகுளாபரணர்’, வகுளபூஷணர் என்றும், தென்மொழியில் ‘மகிழ்மாலைமார்பினர்’ என்றும் வழங்கப்படுவர். ஸ்ரீமத் வேதாந்ததேசிகன் யதிராஜஸப்ததியில் *யஸ்ய ஸாரஸ்வதம் ஸ்ரோதோ வகுளாமோதவாஸிதம் ச்ருதீநாம் விச்ராமாயாலம் சடாரிம் தமுபாஸ்மஹே.* என்றருளிச்செய்த ச்லோகம் இங்கு ஸ்மரிக்கத்தக்கது. ஆழ்வார் அணிந்துகொண்டிருக்கும் வகுளமாலையின் நறுமணம் திருவாய்மொழியிலும் வீசிக்

கிடப்பதாக அருளிச்செய்கிறார். இத்தகைய நறுமணம் வடமொழி வேதத்திற்கு இல்லாமையாலே அதற்கொரு குறையுண்டு என்பதையும் காட்டியருளினர்.

வேட்கையால் சொன்னபாடல் = உலகத்திலே கவி சொல்லுவார் பலருண்டு; அவர்கள் பெரும்பாலும தம்தம் கவித்திறம் காட்டுதற்கே பாடல்கள் பாடுவர்; ஆழ்வார் அங்ஙனமன்றி பக்தி பலாத்காரத்தாலே பரவசமாகத் திருவாய்மொழி பணித்தாரென்பது அறியத்தக்கது. ஆசார்யஹ்ருதயத்தில்—"நீர்பால் நெய்யமுதாய் நிரம்பின ஏரி நெளிக்குமாபோலே பரபக்த்யாதிமயஜ்ஞாநாம்ருதாப்தி நிமிகிற வாய்கரைமிடைந்து மொழிபட்டு அவாவிலந்தாதியென்று பேர்பெற்றது." என்ற சூர்ணிகை இங்கு அநுஸந்தேயம்.

"வைகுந்தமாநகர்மற்றது" என்ற விடத்தில் மற்று என்பது அசைச்சொல்லாய் வைகுந்தமாநகராகிற அவ்விடம் என்று பொருள்படும்; அன்றியே, வைகுந்தமாநகராகிய நித்ய விபூதியும் மற்றதாகிய லீலாவிபூதியும் என்றும் பொருள்கொள்ளலாம். உபய விபூதி ஸாம்ராஜ்யமுண்டாகுமென்று பலன் சொல்லிற்றாயிற்று. ... .... (கக)

பத்தாந்திருவாய்மொழி உரை முற்றிற்று.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

நம்பிள்ளை திருவடிகளே சரணம்.

வடக்குத்திருவீதிப்பிள்ளை திருவடிகளே சரணம்.

ஸ்ரீ காஞ்சி பிரதிவாதி பயங்கரம்
அண்ணங்கராசாரியர் இயற்றிய
## திருவாய்மொழி திவ்யார்த்ததீபிகையில்
நான்காம்பத்து முற்றிற்று.

ஜீயர் திருவடிகளே சரணம்.

